*வெளியீட்டெண்: 59*

# இதுதான் இஸ்லாம்

பாகம் 1

மௌலானா சையித் அபுல் அஃலா மௌதூதி (ரஹ்)

தமிழில்: *மஹதி*

வெளியீடு:



இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்

*138, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை - 600 012.*



# பொருளடக்கம்

# அர்ப்பணம்

விருப்பு வெறுப்பு, உணர்ச்சிவசப்படல்
ஆகியன நீக்கி, உள்ளத்தைத் தூய்மையாக
வைத்திருப்பவர்களுக்கும்,

கருத்துச் சுதந்திரத்தையும்,
வெளிப்படையான பேச்சையும்,
சத்தியத்தையும் நேசிப்பவர்களுக்கும்,

கரவு-தயக்கம், நயவஞ்சகம், போலித்தனம்
ஆகியவற்றின் விரோதிகளுக்கும் இந்நூல்
அர்ப்பணம்.

# மெய்யறிவு!

*வாழ்க்கை எனப்படுவது செயலே. ஆனால் எல்லாச் செயல்களும் வாழ்க்கைக்குப் பொருந்தா. அறிவின் வழிகாட்டுதலைப் பின்பற்றும் செயல்கள்தாம் நேர்மையான வாழ்க்கையை உருவாக்குகின்றன. ஆனால் பல நேரங்களில் அறிவே வழி தவறிவிடுகின்றது. இதனால் வாழ்க்கையின் எல்லாச் செயல்களும் தவறிவிடுகின்றன; எல்லாப் பண்பாடுகளும் பாழடைகின்றன. நாகரிக ஒழுங்கு முறைகள் பிறழ்ந்து விடுகின்றன. எனவே, அறிவு, கல்வி, கலை ஆகியவற்றை வழிதவறா நிலையில் வைப்பது இன்றியமையாததாகும். இவற்றை நேர்வழியில் அமைத்து நிலைநிற்கச் செய்வதற்கு மெய்யறிவு தேவை.*

*மெய்யறிவு என்றால் என்ன?*

*பிரபஞ்சம், வாழ்வு இவற்றின் அடிப்படை உண்மைகள், பண்பின் உறுதியான மதிப்புகள், மனித நலன்கள், செழுமை பற்றிய தெளிவான கொள்கைகள் ஆகியவற்றைப் பற்றித் தன் தூதர்கள் மூலம் மனிதர்களுக்கு இறைவன் அருளிய ஞானமே மெய்யறிவாகும்.*

*வாழ்க்கைக்கு வெறும் அறிவு போதாது.*

*ஆம்! அதற்கு மெய்யறிவின் துணை அவசியம் வேண்டும்.*

# புதிய பதிப்புக்கான பதிப்புரை

*‘இதுதான் இஸ்லாம்’ நூலின் வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் ஏறத்தாழ முக்கால் நூற்றாண்டு - அதாவது சற்றொப்ப 75 ஆண்டுகள் உருண்டோடி விட்டதை அறியலாம்.*

*இளம் தலைமுறையினருக்கு இஸ்லாம், இறைநம்பிக்கை (ஈமான்), கீழ்ப்படிதல், வழிபாடுகள், இறைத்தூது, மறுமை, தீன், ஷரீஅத் ஆகிய செய்திகளை எளிய முறையில் எடுத்துரைக்க வேண்டும் எனும் நோக்கத்துடன் மௌலானா மௌதூதி (ரஹ்) அவர்கள் 1935-ஆம் ஆண்டு இந்த நூலை எழுதினார். உருது மொழியில் எழுதப்பட்ட அந்த நூலின் தலைப்பு: ‘ரிஸாலே தீனியாத்’*

*இந்நூலின் முதல் தமிழாக்கம் 1952-இல் ‘இஸ்லாம் மத ஞான விளக்கம்’ எனும் தலைப்பில் வெளியானது.*

*பிறகு ஏறத்தாழ 18 ஆண்டுகள் கழித்து மீண்டும் புதிதாக இனிய தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, பேராசிரியர் குர்ஷித் அஹ்மத் அவர்களின் அடிக்குறிப்புகளுடன் 1970-இல் வெளியிடப்பட்டது.*

*1970 முதல் 2007 வரை பழைய வடிவிலேயே பன்னிரண்டு பதிப்புகள் வெளியாகின..!*

*இப்பொழுது நூலின் அளவு, வடிவம், உள்ளடக்கம் ஆகியவற்றில் சிறப்புக் கவனம் செலுத்தி, புதிய பொலிவுடன் புதிய*

*அழகுடன் புதிய வடிவில் நூலை வெளியிட்டுள்ளோம். அல்ஹம்துலில்லாஹ்..!*

*இன்றைய பதின்பருவ (டீன்-ஏஜ்) இளைஞர்கள் இந்த நூலைப் படிப்பார்களேயானால், முக்கால் நூற்றாண்டுக்கு முன்பு எழுதப்பட்ட நூல் இது என்று சத்தியம் செய்து சொன்னால்கூட நம்ப மாட்டார்கள். காலந்தோறும் தமிழ் தன்னைப் புதுப்பித்துக் கொள்வதுபோல, இந்த நூலின் மொழிநடையும் புதுப்பிக்கப்பட்டு அழகுபட மிளிர்கிறது...!*

*நீங்கள் இந்த நூலின் கருத்துகளைச் சிந்தையில் பதித்து செயல் வடிவம் தந்தால், உங்கள் வாழ்க்கையிலும் புதுமை மலரும், அழகு மிளிரும்.*

*படியுங்கள்..! பயன் பெறுங்கள்..!*

**H. அப்துர் ரகீப்**
போதுச் செயலாளர்
இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட்

*சென்னை-12*
*30.07.2008*

# பதிப்புரை

அமைதியின்மையும், அவநம்பிக்கையும், கவலையும் நிறைந்த காலம் இது.

இவற்றுக்கு இடைப்பட்ட அந்தக் கால ஓட்டத்தின் ஊடே நம்பிக்கை ரேகைகளும் தெரியவே செய்கின்றன. மெள்ள உலகில் ஒரு பெரிய மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கத்தான் செய்கிறது. அதன் அடிப்படையில் சந்தடியற்ற ஒரு பரபரப் பும் நிகழத்தான் செய்கிறது.

இப்படிப்பட்ட காலங்கள் தாம் புதிய இயக்கங்களும், புதிய கலாசாரங்களும் தோன்றிய காலங்களாய்த் திகழ்ந்திருக் கின்றன என்று வரலாறு சான்று பகர்கிறது. இந்தச் சூழ்நிலை களில் ஓர் இருபதாம் நூற்றாண்டின் மனித மறுமலர்ச்சியை எதிர்பார்த்து - அந்த எதிர்பார்த்தலின் விளைவு எதிர்பார்த்தபடி இருக்குமா, எதிராகப் போய்விடுமா எனும் பீதியும்-உலகை அரித்துக் கொண்டுதான் இருக்கிறது.

இஸ்லாம் இவற்றுக்கெல்லாம் ஒரு சஞ்சீவிபோல் காணப் படுகிறதே எனும் எண்ணமும் இந்தப் பரபரப்புக்கிடையே எங்கும் ஏற்பட்டுள்ளது. இது இந்த நூற்றாண்டின் ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். நெடுங்காலம் தேக்க நிலை - உறக்க நிலைகளிலிருந்த இஸ்லாமிய உலகம் இப்பொழுது மீண்டும் விழித்தெழுந்து கொண்டிருக்கிறது. தொடுவானத் தில் புதியதொரு எழுச்சி தோன்றிவிட்டது. இஸ்லாமியச்

சமுதாயம் புத்துயிர் பெற்றுக் கொண்டிருக்கிறது. புதியதொரு காலம் உதயமாகிக் கொண்டிருக்கிறது என்பதற்கு அடையாளமாக, ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வோரிடத்திலும் இந்தப் புத்துணர்வு புறப்படத் தொடங்கியுள்ளது.

ஆனால் இந்தப் புத்துணர்ச்சி, இஸ்லாமியப் பண்பாட்டையும் அறிவு மேம்பாட்டையும் இன்றைய மொழியில் உலகுக்குத் தெளிவுபட உணர்த்தும் ஓர் அறிவுப் புரட்சியோடு இணைந்து வந்தால்தான், அது புதியதொரு காலத்தின் வருகைக்கு அடையாளமாக விளங்க முடியும். இந்தத் தேவையை முன்னுணர்ந்தவர்களாய் அல்லாமா முகம்மது இக்பால், மௌலானா சையித் அபுல் அஃலா மௌதூதி ஆகியோர் திகழ்கின்றார்கள். மௌலானா மௌதூதி அவர்கள் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களையும் வெளியீடுகளையும் தந்துள்ளார். இஸ்லாமியக் கலாசாரத்தின் ஒவ்வோர் அம்சத்தைப் பற்றியும் அவற்றில் விளக்கியிருக்கிறார். அவருடைய புத்தகங்கள் இஸ்லாமிய மறுமலர்ச்சிக்குத் தேவையான அறிவுநுட்ப அடிப்படைகளுக்கு வழிவகுத்து வருகின்றன.

இஸ்லாத்தைப் பற்றி அறிந்துகொள்ள அழைக்கும் இந்நூலும் அவர் எழுதிய இவ்வாறான முக்கிய நூல்களில் ஒன்றாகும். இஸ்லாத்தைப் பற்றி விளக்கும் ஓர் ஆதார (Basic) நூல் இது. இளைஞர்களுக்கென எழுதப்பட்ட இது இஸ்லாமிய வாழ்க்கை நெறியைப் பற்றிய விளக்கங்களை எளிய முறையில், புரியும் விதத்தில் தெளிவுபடக் கூறுகிறது.

வேதாந்த நூல்களைப் போன்று கரடுமுரடான நடையிலோ, இஸ்லாத்தையும் அதன் உண்மையான உணர்வையும் பற்றி வாசகர்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியாதவாறோ, பலபொருள்கள் படும்படிச் சட்டவிதிகளைப் பின்னிப் பிணைத்து இந்நூல் எழுதப்படவில்லை. மாறாக, இஸ்லாமிய வாழ்க்கைத் திட்டம், அதன் வணக்கமுறை, பிரார்த்தனை முறைகளின் தத்துவம், ஈமானின் அம்சங்கள், வாழ்க்கையை அது அணுகும் விதம் ஆகியவற்றை எளிமையாகப் படம் பிடித்துக் காட்டுகிறது இந்நூல். விஷயங்களைப் புரிய

வைப்பதற்குத் திருக்குர்ஆனில் எந்தமுறை காணப்படுகிறதோ அதே முறைதான் இந்தப் புத்தகத்திலும் பின்பற்றப்பட்டுள் ளது. அதே சமயம் இஸ்லாமிய போதனைகளின் சுருக்கமான தொகுப்பு ஒன்றை அளிக்கும் முயற்சியும் மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

மாணவர்களுக்கும், இளைஞர்களுக்கும் பயன்பட வேண்டும் என்பதற்காகவே இது எழுதப்பட்டிருப்பதால், விளக்கங்கள் அனைத்தும் எளிமையாகவும், தெளிவாகவும், அறிவியல் வழியாகவும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தத்துவ விரிவுரைகளைப் போன்றோ, விஷயங்களைச் சிக்கலாக விளக்கியோ, சுற்றி வளைத்துக் கூறியோ, வாசகர்களின் உள்ளத்தைச் சிரமப்படுத்தும் முறையில் இந்நூல் இல்லை.

உண்மையிலேயே உயர் வகுப்புகளில் பயிலும் மாணவர் களுக்குப் பாடப்புத்தகமாக அமையவும், பொதுமக்களுக்குப் பயன்படவும் வேண்டும் எனும் எண்ணத்தோடு 1935-ஆம் ஆண்டில் உருதுமொழியில் இப்புத்தகம் எழுதப்பட்டது. முக்கியமான ஓர் இடைவெளியை இது இட்டு நிரப்பி இஸ்லாத்தைப் பற்றிய ஆரம்பப் பாடப் புத்தகமாக இது மிளிர்ந்தது.

இந்தியா-பாகிஸ்தான் துணைக் கண்டத்தின் பெரும்பாலான பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் இது மார்க்க சம்பந்தப்பட்ட பாட நூலாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, பாடத் திட்டங்களில் ஓர் அங்கமாகவும் இடம்பெற்றது. இது அரபி, வங்காளி, குஜராத்தி, மராட்டி, சிந்தி, ஹிந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆங்கிலம், பிரஞ்சு ஆகிய ஐம்பதுக்கும் மேற் பட்ட மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளது.

கராச்சி பல்கலைக்கழகப் பேராசிரியர் குர்ஷித் அஹ்மத் இந் நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பில் மௌலானா மௌதூதி அவர்களின் அனுமதியுடனும், மேற்பார்வையுடனும் முஸ் லிம் அல்லாதாருக்கும் பயன்படும் வண்ணம் சில முக்கிய அடிக்குறிப்புகளையும் சேர்த்து வெளியிட்டுள்ளார்.

*இந்நூல் 1952-ஆம் ஆண்டில் ஆங்கில அடிக்குறிப்புகள் இல்லாமல் ‘இஸ்லாம் மத ஞான விளக்கம்’ எனும் பெயரில் முதலில் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டது.*

*மீண்டும் புதிதாக எளிய இனிய தமிழில் மொழிபெயர்த்து பேராசிரியர் குர்ஷித் அஹ்மத் அவர்களின் குறிப்புகளையும் சேர்த்து ‘இதுதான் இஸ்லாம்’ எனும் பெயரில் 1970-இல் வெளியிடப்பட்டது.*

*வாசகர்கள் இதைப் படித்துப் பயன்பெறுவதுடன், முஸ்லிம் அல்லாத தோழர்களுக்கும் இப்புத்தகத்தை வழங்கி, இஸ்லாத்தைப் பற்றி அவர்களுடைய தவறான எண்ணங் களைப் போக்கும் வழிவகைகளைச் செய்யுமாறும், இஸ்லாமிய மறுமலர்ச்சியின் அடிப்படையில் புதியதோர் உலகைத் தோற்றுவிக்க முழு முயற்சி செய்யுமாறும் கேட்டுக் கொள்கின்றோம்.*

**M.A. *ஜமீல் அஹ்மத்***
போதுச் செயலாளர்
இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட்

*சென்னை-12*
*02.04.1983*

# முன்னுரை

இச்சிறு நூல், குறிப்பாக உயர்நிலைப் பள்ளிகளின் இறுதி வகுப்புகளில், அல்லது கல்லூரியின் ஆரம்ப வகுப்புகளில் பயிலும் இளைஞர்களுக்காக எழுதப்பட்டதாகும். அவர்களைத் தவிர பொதுமக்களும் இதனால் பயன்பெறலாம். இதன் முதல் பதிப்பையே இந்தியாவில் உள்ள பல பள்ளிக் கூடங்கள், தங்கள் உயர்தர வகுப்புகளின் பாடத் திட்டங்களில் சேர்த்துக் கொண்டன.

மாணவர்களுக்குப் பெரும்பாலும் மார்க்கச் சட்டதிட்டங்கள் (ஃபிக்ஹு) பயிற்றுவிக்கப்படுகின்றன. அவற்றுள் தொழுகை, நோன்பு, சுகாதாரம் போன்ற இதர விஷயங்களைக் குறித்த விளக்கங்கள் இருக்கும். இவைதாம் மார்க்கக் கல்வியின் முழுமையான போதனைகள் என்று நம்மிடையே பொதுவான எண்ணம் இதுவரை நிலவி வந்தது. கோட்பாடுகளைப் பற்றிய போதனைகளோ மிகமிகக் குறைவு; அவையும் பலன்தரத் தக்கனவாக இருப்பதில்லை.

இஸ்லாம் என்பதென்ன, அது மக்களிடம் என்ன கோருகிறது. ஏன் கோருகிறது, மனித வாழ்வுடன் அதனுடைய கோட்பாடுகளுக்கு எத்தகைய தொடர்பு இருக்கிறது, அக்கோட்பாடுகள் ஏற்றுக் கொள்ளப்படுவதால் ஏற்படும் நன்மை என்ன, ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் விளையும் தீமை என்ன, இஸ்லாம் கட்டாயப்படுத்தி அக்கோட்பாடுகளை ஒப்புக் கொள்ளச் சொல்லுகிறதா, அல்லது அதனிடம் அவற்றின் உண்மைக்

கும், நேர்மைக்கும் ஆதாரங்கள் இருக்கின்றனவா என்பன குறித்து மாணவர்களுக்கு இறுதிவரை ஒன்றுமே தெரிவ தில்லை. இந்த அம்சங்கள் யாவும் மார்க்கத்தை (தீனை) நன் கறியவும், அதன் உண்மையான கோட்பாடுகளைத் தெரிந்து கொள்ளவும் மிகவும் இன்றியமையாதனவாகும்.

இவை மனதில் நன்கு பதிந்தால் ஒழிய, மார்க்க (ஃபிக்ஹு) சட்டதிட்டங்களைப் பற்றிய போதனைகள் ஒரு பலனையும் அளிக்காது. ஏனெனில் நம்பிக்கை (ஈமான்) இல்லாமல் மார்க்க (தீனின்) கட்டளைக்குக் கீழ்ப்படிவது சாத்திய மில்லை. கோட்பாடுகளை மிகவும் சரியான முறையில் அறிந்துகொண்டால்தான் நம்பிக்கை (ஈமான்) உறுதி வாய்ந்ததாக அமையமுடியும்.

இதைப்போலவே தொழுகை, நோன்பு தொடர்பான கட்டளைகளைப் பற்றிய விளக்கங்களைப் போதிப்பதைக் காட்டிலும் வணக்க முறைகள், மார்க்கச்சட்ட திட்டங்களைப் பற்றிய கட்டளைகள் ஆகியவற்றின் தத்துவார்த்தங்களை மாணவர்களுக்குப் புரியவைப்பது அவசியமாகும். அப் போதுதான் அவர்கள் மனப்பூர்வமாக அக்கட்டளைகளைப் பின்பற்றச் சித்தமாவார்கள். எவர் தொழ விரும்புகிறாரோ அவருக்குத் தான் தொழுகையின் போதனா முறைகள் பலன் தரும் என்பது வெளிப்படை. எவர் தொழுவதற்கு முற்றிலும் தயாராயில்லையோ அவருக்கு எவ்வாறு தொழ வேண்டும் என்பதைப் பற்றிப் போதிப்பதால் என்ன பலன்? ஆகையால் தொழுகையின் முறைகளைப் பற்றிப் போதிப்பதற்கு முன் தொழுகை என்பது உண்மையில் என்ன, அது ஏன் உங்கள் மீது கடமையாக்கப்பட்டுள்ளது, அதனால் ஏற்படும் நன்மை என்ன, அதைத் தவிர்ப்பதால் உங்களுக்கு உண்டாகும் தீமை என்ன என்பனவற்றை மாணவருக்குப் போதித்தல் அவசிய மானதாகும்.

இதைப்போலவே இதர மார்க்கக் கட்டளைகளையும் முதலில் உள்ளத்தில் பதியுமாறு செய்து விட்டுப் பிறகு அவற்றைப் பற்றிய விளக்கங்களைப் போதிப்பது பலன் தரத் தக்கதாய் இருக்கும்.

இந்த அவசியத்தைக் கருத்தில் கொண்டே நான் இந்நூலை ஆக்கியிருக்கிறேன். மார்க்கக் கல்வியில் புதிய முறையைக் கடைப்பிடிப்பதற்கு இதில் முயற்சி செய்யப்பட்டுள்ளது. இது பழைய முறையைப் போலன்றி மிகவும் மாறுபட்ட தாகும். குறிப்பாக இக்காலகட்டத்துக்கு இது மிகவும் நன்மை பயக்கத்தக்கதாகும்.

இதில் நான், திருக்குர்ஆன் போதனைகளின் சாரத்தை அளித்திருக்கிறேன்; குர்ஆன் தரும் ஆதார முறைகளையே பின்பற்றியிருக்கிறேன். இந்நூல் மார்க்கக் கல்வியில் மிகவும் பலனளிக்கும் ஒரு முறையைத் தோற்றுவிக்கவும், எந்நோக்கத் துக்காக இம்முயற்சி செய்யப்பட்டுள்ளதோ அந்நோக்கம் நிறைவடையவும் இறைவன் உதவுவானாக!

**– அபுல் அஃலா மௌதூதி**

# 1. இதுதான் இஸ்லாம்

## இஸ்லாம்

### பெயர்க் காரணம்:

*உலகில் உள்ள மதங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு குறிப்பிட்ட மனிதரின் பெயரோ, அம்மதம் எச்சமுதாயத்தில் தோன்றியதோ அச்சமுதாயத்தின் பெயரோ சூட்டப்பட்டுள்ளது. உதாரணமாகக் கிறிஸ்துவ மதத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது இயேசு கிறிஸ்து எனப்படும் ஈஸா (அலைஹிஸ்ஸலாம்) அவர்களுடன் தொடர்பு கொண்டுள்ளதால் கிறிஸ்துவ மதம் என்று கூறப்படுகிறது. புத்தர் தோற்றுவித்ததால் புத்த மதம் என்று பெயர் ஏற்பட்டது. ஜொராஸ்திரிய மதம், அதை நிறுவிய ஜொராஸ்தரின் பெயரால் அமைந்துள்ளது. யூதா என்னும் ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தில் தோன்றியதால் யூதர்களின் மதத்துக்கு யூத மதம் என்று பெயர் வந்தது. இதர மதங்களின் பெயர்களும் இவ்வாறே அமைந்துள்ளன. ஆனால் இஸ்லாம் எனும் பெயர் அப்படிப்பட்டதல்ல.*

*இஸ்லாம் ஒரு குறிப்பிட்ட மனிதருடனோ, ஒரு தனி சமுதாயத்துடனோ தொடர்புகொண்டதாயில்லை. மாறாக, அதன் பெயரே ஒரு குறிப்பிட்ட அம்சத்தையும், சிறப்பையும் வெளிப்படுத்துகிறது. அந்தச் சிறப்பும் அம்சமும் 'இஸ்லாம்' எனும் சொல்லிலே அடங்கியுள்ளன. இந்த மதம் மனிதரால் தோற்றுவிக்கப்பட்டதல்ல என்பதே அதற்குரிய தனிச்*

சிறப்பாகும். இது மனிதரால் தோற்றுவிக்கப்பட்டதல்ல என்பதையும், இது ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தை மட்டும் சார்ந்ததல்ல என்பதையும், இதற்குக் குறிப்பிட்ட மக்கள், குறிப்பிட்ட நாடு, குறிப்பிட்ட சமுதாயம் என்னும் வரையறைகள் ஏதுமில்லை என்பதையும் இஸ்லாம் எனும் பெயரே உணர்த்துகிறது. ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு சமூகத்திலும் வாய்மையும் நேர்மையும் வாய்ந்த பண்புள்ள மக்கள் அனைவரும் 'முஸ்லிம்'களாயிருக்கிறார்கள்; இனியும் 'முஸ்லிம்'களாயிருப்பார்கள்.

**இஸ்லாம் எனும் சொல்லின் பொருள்:**

இஸ்லாம் எனும் அரபிச் சொல்லுக்குக் கீழ்ப்படிதல், கட்டளைகளை நிறைவேற்றுதல் என்று பொருளாகும். அல்லாஹ்வுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து, அவனுடைய ஏவல்களை நிறைவேற்ற வேண்டிய கட்டளைகள் நிரம்பி இருப்பதால் இதற்கு 'இஸ்லாம்'* - என்று பெயரிடப்பட்டு உள்ளது.

உலகில் எத்தனைப் பொருள்கள் உள்ளனவோ அவை அத்தனையும் ஒரு நியதிக்கு - ஒரு சட்டத்துக்கு உட்பட்டிருக்கின்றன என்பதை நீங்கள் காண்கிறீர்கள். சந்திரன், நட்சத்திரங்கள் ஆகிய அனைத்தும் ஒரு வலுவான நியதிக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. அந்நியதிக்கு மாறாக அவை இம்மியளவும் இயங்க முடியாது. பூமி, தனக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கிற வேகத்திலே சுழன்று கொண்டிருக்கிறது. அதற்காக நிர்ணயிக்கப்பட்டுள்ள காலம், வேகம், பாதை ஆகியவற்றில் ஒரு சிறிய மாற்றமும் ஏற்படுவதில்லை. நீரும், காற்றும், ஒளியும், வெப்பமும் ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன. தாதுப் பொருள்கள், தாவர இனம், மிருக இனம் ஆகிய ஒவ்வொன்

---

* இஸ்லாம் எனும் சொல்லின் மற்றொரு பொருள் 'சாந்தி' என்பதாகும். இறைவனுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுவதன் மூலமும் அவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடப்பதனாலும் மாத்திரமே ஒருவன் தன் உடலுக்கும் உள்ளத்துக்கும் உண்மையான சாந்தியைப் பெற முடியும் என்பதை இது சுட்டிக் காட்டுகிறது. இத்தகைய கீழ்ப்படிதல்தான் உள்ளத்துக்குச் சாந்தியளித்து, சமுதாயத்திலும் அமைதியை நிலைநிறுத்துகிறது. - **கு.அ.**

றும் அவற்றுக்காக நிர்ணயிக்கப்பட்ட சட்டப்படியே தோன்றுகின்றன; வளர்கின்றன; தேய்கின்றன; வாழ்கின்றன; இறக்கின்றன.

மனிதனின் நிலையைப் பற்றிச் சிந்தித்தாலும் அவனும் இயற்கைச்சட்டங்களுக்கு உட்பட்டிருக்கிறான் என்பதை நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். அவனுடைய பிறப்பில் நிர்ணயிக்கப்பட்டுள்ள நியதியின்படியே அவன் சுவாசிக்கிறான் - நீர், உணவு, வெப்பம், ஒளி ஆகியவற்றைப் பெறுகிறான். அவனுடைய இதயத்துடிப்பு, இரத்த ஓட்டம், சுவாசம் ஆகியவையும் அதே நியதிக்கு உட்பட்டே இயங்குகின்றன. அவனுடைய மூளை, இரைப்பை, நுரையீரல், நரம்புகள், தசைகள், கை கால்கள், நாக்கு, கண்கள், காது, மூக்கு ஆகிய ஒவ்வோர் உறுப்பும் அதற்காக என்ன வேலை தீர்மானிக்கப்பட்டிருக்கிறதோ அதையே செய்துகொண்டிருக்கிறது. எம்மாதிரி இயங்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளதோ அம்மாதிரியே செயல்படுகின்றது.

பெரிய பெரிய கோளங்கள் முதல் இந்நில உலகில் உள்ள சின்னஞ்சிறு அணுவரையிலான அனைத்தையும் தன் பிடியில் வைத்துள்ள இந்த வலிமை வாய்ந்த சட்டம், ஒரு பெரிய ஆணையாளனால் இயற்றப்பட்ட சட்டமாகும். இப்பிரபஞ்சமும், இப்பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் அந்த ஆணையாளனுக்குக் கீழ்ப்படிந்ததாகவும், வழிபட்டதாகவும் இருக்கின்றன. இவ்வாறு அவனால் இயற்றப்பட்ட சட்டத்துக்கு மட்டும் கீழ்ப்படிந்து அதை நிறைவேற்றுவதால் இப்பிரபஞ்சத்தின் வாழ்க்கை நெறி இஸ்லாம் ஆகும். ஏனெனில் நான் முன்பே விளக்கியுள்ளபடி இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து அவனுடைய ஆணைகளை நிறைவேற்றுவதற்கே இஸ்லாம் என்று பெயராகும்.

இதன்படி சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அனைத்தும் முஸ்லிம்கள்தாம். பூமியும், காற்றும், நீரும், நெருப்பும், ஒளியும், வெளியும் முஸ்லிம்கள்தாம். சடப்பொருள்களும், தாவரங்களும், பிராணிகளும் முஸ்லிம்கள்தாம். இறைவனை அறிந்து புரிந்து கொள்ளாத - இறைவனை நிராகரிக்கிற -

*இறைவனை விடுத்து பிறவற்றை வணங்குகிற - இறைவனுக்கு இணைதுணை கற்பிக்கிற மனிதன் கூடத் தனது இயல்பால் - முஸ்லிமே. ஏனெனில் அவனுடைய பிறப்பு, உயிர் வாழ்தல், இறப்பு ஆகிய எல்லாமே இறைவனின் சட்டத்துக்கு உட்பட்டே இருக்கின்றன.*

*அவனுடைய எல்லா உறுப்புகளுடைய, ஏன் ஒவ்வோர் அணுவினுடைய வழிமுறையும் இஸ்லாமேயாகும். ஏனெனில், அவை அனைத்தும் இறைவனின் சட்டப்படியே உருவாகியும், வளர்ந்தும், செயல்பட்டும் வருகின்றன. இன்னும் சொல்லப்போனால், எந்த நாக்கில் மனிதன் அறியாமையின் காரணமாக (ஷிர்க், குஃப்ரு செய்தும்) இறைவனுக்கு இணை கற்பித்தும் அவனை நிராகரித்தும் கருத்துக்களை வெளியிடுகின்றானோ, அவனுடைய அந்த நாக்கும்கூட உண்மையில் முஸ்லிமே.*

*இறைவனை விடுத்து மற்றவர்கள் முன்பு பலவந்தமாகச் சாய்க்கப்படுகின்ற அவனுடைய அந்தத் தலையும் பிறவி முஸ்லிமே. அறிவின்மையின் காரணமாக இறைவனைத் தவிர மற்றவர்கள்மீது மரியாதையும் அன்பும் பக்தியும் வைக்கிற அவனுடைய அந்த இதயமும் இயற்கையில் முஸ்லிமே. ஏனெனில் இவை அனைத்தும் இறைவனின் சட்டத்துக்கே கீழ்ப்படிந்தவையாக இருக்கின்றன. இவற்றின் ஒவ்வோர் அசைவும் இறைவனின் சட்டத்துக்குக் கீழ்ப்படிந்தவையாக இருக்கின்றன. இவற்றின் ஒவ்வோர் அசைவும் இறைவனின் சட்டத்துக்கு உட்பட்டே இருக்கிறது.*

*இனி மற்றொரு கோணத்திலிருந்து பாருங்கள்.*

*மனிதனின் ஒருநிலை: அவன், இதர படைப்பினங்களைப் போலவே வலுவான இயற்கை விதிகளால் பிணைக்கப்பட்டு, அவற்றின்படி ஒழுகவேண்டிய நிர்ப்பந்தத்திலுள்ளான்.*

*மற்றொரு நிலை: அவன் அறிவு படைத்தவனாயிருக்கிறான்; சிந்திக்கவும், உணரவும், சுயமாக ஒரு முடிவெடுக்கவும் ஆற்றல் உள்ளவனாயிருக்கிறான். அவன் தானே ஒரு விஷயத்தை ஏற்றுக்கொள்கிறான்; மற்றொரு விஷயத்தை*

ஏற்றுக்கொள்வதில்லை. ஒரு வழிமுறையை விரும்புகிறான்; மற்றொரு வழிமுறையை விரும்புவதில்லை. வாழ்க்கை விவகாரங்களில் தனது விருப்பத்துக்கேற்ப தானே ஒரு நியதியை உருவாக்குகிறான். அல்லது மற்றவர்கள் உரு வாக்கிய நியதிகளைக் கடைப்பிடிக்கிறான். இந்நிலையில் அவன் உலகின் இதர பொருள்களைப்போல் ஒரு நிர்ணய மான சட்டத்துக்கு உட்படுத்தப்படவில்லை. மாறாக அவன், தனது சிந்தனை, எண்ணம், செயல் ஆகியவற்றில் தேர்ந் தெடுக்கும் சுதந்திரம் பெற்றுள்ளான்.

மனித வாழ்வில் இவ்விரு நிலைகளும் வெவ்வேறாக காணப் படுகின்றன.

முதல் நிலையில், அவன் உலகின் இதர எல்லாப் பொருள் களுடன் சேர்ந்தே பிறவி முஸ்லிமாயிருக்கிறான்; முஸ்லிமாயி ருக்க வேண்டிய நிர்ப்பந்த நிலையிலும் உள்ளான் என்பதைச் சற்றுமுன் உணர்ந்து கொண்டீர்கள்.

இரண்டாவது நிலையில், அவன் முஸ்லிமாயிருப்பதும், இல்லாமல் இருப்பதும் அவனுடைய சுயாதிகாரத்தையும் விருப்பத்தையும் பொறுத்ததாகும். இந்த சுய தேர்வின் அடிப் படையில் மனிதர்கள் இரு பிரிவினராகின்றனர்.

ஒருவன் தன்னைப் படைத்தவனைப் புரிந்துகொள்கிறான். அவனைத் தன் எஜமானனாகவும் உரிமையாளனாகவும் ஏற்றுக்கொள்கிறான். தன்னுடைய வாழ்வில் தன் அதிகாரத் துக்குட்பட்ட காரியங்களிலும் இறைவன் விரும்பிய சட்டங் களுக்கே உட்பட்டு நடக்கிறான். இவனே முழு முஸ்லிம். இவனுடைய வாழ்வு முழுவதும் இஸ்லாமிய மயமாகி விட்டதால் இவனுடைய இஸ்லாம் நிறைவு பெற்று விட்டது. எவனுடைய ஆணைகளை அறியாமலேயே முன்பு அவன் நிறைவேற்றி வந்தானோ அந்த இறைவனின் ஆணை களை இப்போது அறிந்தும் புரிந்தும் நிறைவேற்றுகிறான். முன்பு உணர்வற்ற நிலையில் எந்த இறைவனுக்குக் கீழ்ப்படிந்திருந்தானோ அந்த இறைவனுக்கு இப்போது தன் முழு உணர்வுடன் கீழ்ப்படிந்திருக்கிறான். இப்போது அவனு

டைய அறிவு மெய் நிறைந்ததாகிவிட்டது. ஏனெனில் தனக்கு அறிவையும் அறிவைப் பெறுவதற்கான ஆற்றலையும் தந்த அந்த இறைவனை அறிந்து புரிந்துகொண்டான். அவனுடைய ஞானம் செம்மையாகிவிட்டது. ஏனெனில், தனக்குச் சிந்திக்கவும், உணரவும், முடிவெடுக்கவும் ஆற்றல் வழங்கியுள்ள அந்த இறைவனுக்கே அவன் கீழ்ப்படிந்து நடக்கத் தீர்மானித்து விட்டான்.

அவனுடைய நாக்கு வாய்மை வாய்ந்ததாகிவிட்டது. ஏனெனில் தனக்குப் பேசும் ஆற்றலைத் தந்த இறைவனின் சக்தியை இப்போது அது பறைசாற்றுகின்றது. அவனது முழு வாழ்விலும் நேர்மையும் - வாய்மையுமே நிரம்பிவிட்டது. ஏனெனில் தன் சுதந்திர நிலையிலும் நிர்ப்பந்த நிலையிலும், ஆக இரு நிலைகளிலும் இப்போது அவன் இறைவனின் சட்டத்துக்குக் கட்டுப்பட்டு விட்டான். இப்போது பிரபஞ்சங்கள் அனைத்துடனும் அவனுக்குத் தொடர்பு ஏற்பட்டுவிட்டது. ஏனெனில் பிரபஞ்சத்தின் பொருள்களெல்லாம் எவனுக்கு அடிபணிந்து நடக்கின்றனவோ அவனுக்கே இவனும் கீழ்ப்படிந்து நடக்கிறான். இப்போது அவன் இவ்வையகத்தில் இறைவனின் கலீஃபா (Vicegerent) ஆவான். இவ்வுலகம் முழுவதும் அவனுடையதாகும். அவனோ இறைவனுடையவன் ஆவான்.

## இறைநிராகரிப்பின் (குஃப்ரின்) பொருளும் அதன் விளைவுகளும் :

மற்றவனின் நிலை மேற்குறிப்பிட்ட மனிதனுக்கு நேர்மாறாயுள்ளது. இவனும் முஸ்லிமாகவே பிறந்தான். வாழ்வு முழுவதும் தன்னையறியாமலே முஸ்லிமாகவே இருந்தான்; ஆனால் தன் அறிவாற்றலையும், ஞானத்தையும் பயன்படுத்தி இறைவனைப் புரிந்துகொள்ளவில்லை; தன் அதிகாரத்துக்கு உட்பட்ட எல்லைக்குள் அவன் இறைவனுக்குக் கீழ்ப்படிய மறுத்துவிட்டான். எனவே, இந்த மனிதன் 'காஃபிர்' - அதாவது இறைவனை நிராகரிப்பவன் ஆவான்.

'குஃப்ரு' எனும் அரபிச் சொல்லுக்கு அகராதிப்படி மறைத்தல் - திரையிடுதல் என்பது பொருளாகும். இயல்பால்

இஸ்லாத்தில் பிறந்த அவன், தன் இயல்பின்மீது அறியாமை எனும் திரையிட்டுக் கொண்டிருப்பதால் அந்த மனிதன் ‘காஃபிர்’ என்று கூறப்படுகின்றான். அவன் இஸ்லாமிய இயல்புடன்தான் பிறந்தான். அவனுடைய உடல் முழுவதும், உடலின் ஒவ்வோர் உறுப்பும் இஸ்லாமிய இயல்புடனேதான் இயங்குகின்றன. அவனைச் சூழ்ந்துள்ள முழு உலகும் இஸ்லாத்தின்படியே இயங்குகிறது. ஆனால் அவனது அறிவிலும் ஞானத்திலும் திரை விழுந்துவிட்டது. அதனால் அவன் பார்வையிலிருந்து உலகம் யாவற்றின் இயல்பும் தன்னுடைய இயல்பும் மறைந்து விட்டன. ஆகையால் அவ்வியல்புக்கு - அதாவது இஸ்லாத்துக்கு மாறாக அவன் சிந்திக்கிறான்; அதற்கு மாறாக நடக்க முயல்கிறான்.

எவன் இறைவனை நிராகரிப்பவனாக (காஃபிராக) இருக்கிறானோ, அவன் எவ்வளவு பெரிய வழிகேட்டில் மூழ்கியிருக்கிறான் என்பதை இதன் மூலம் நீங்கள் உணர்ந்து கொள்ளலாம்.

### இறைநிராகரிப்பினால் (குஃப்ரினால்) ஏற்படும் இழப்புகள் :

இறைநிராகரிப்பு (குஃப்ரு) ஓர் அறியாமையாகும்-ஏன், மூல அறியாமையே அதுதான். மனிதன் இறைவனை அறியாமல் இருப்பதைக் காட்டிலும் வேறு பெரிய அறியாமை எதுவும் கிடையாது. இந்த மனிதன் இராப்பகலாக இயங்கும் இந்த அண்டத்தின் பிரம்மாண்டமான செயலகத்தைப் பார்க்கிறான். ஆனால் இதைப் படைத்தவனும், இயக்குபவனும் யார்? நிலக்கரி, இரும்பு, சுண்ணாம்புச் சத்து, உப்புச் சத்து மற்றும் இவைபோன்ற சில பொருள்களின் சேர்க்கையால் மனிதன் எனும் ஓர் இணையற்ற உயிரினத்தைப் படைத்திருக்கிறானே அந்தக் கலைச்சிற்பி யார் என்பனவற்றை அவன் புரிந்து கொள்வதில்லை.

இந்த மனிதன், உலகின் ஒவ்வொருபுறமும் ஒப்பற்ற பொறியியல், பௌதிக இயல், ரசாயன இயல் மற்றும் கலைகள் யாவற்றின் திறன்களையும் கொண்ட பொருள்களையும், செயல்பாடுகளையும் காண்கிறான். ஆனால் இப்பிரபஞ்சத்தில் இவ்வியப்புக்குரிய செயல்கள் அனைத்தையும் ஆற்றியுள்ள,

பேரறிவும், விவேகமும், மதி நுட்பமும் படைத்த அந்த வல்லவன் யார் என்பதை மட்டும் தெரிந்துகொள்வதில்லை.

நன்றாகச் சிந்தியுங்கள்! அறிவின் முதல்படியையே எட்டாத இத்தகைய மனிதனுக்கு நேரிய அறிவின் - ஞானத்தின் கதவுகள் எவ்வாறு திறக்கப்படும்? இத்தகையவன் எவ்வளவு யோசித்தாலும், சிந்தித்தாலும், ஆராய்ச்சியில் மண்டையை உடைத்துக் கொண்டாலும் அவனுக்கு எந்தத் துறையிலும் கல்வியறிவின் நேரான - உறுதியான பாதை கிடைப்பது அரிது. ஏனெனில், அவனுக்கு ஆரம்பத்திலும் அறியாமை யின் இருளே தென்படும்; இறுதியிலும் அந்த இருளைத் தவிர வேறு ஒன்றையும் அவன் காணமாட்டான்.

இறை நிராகரிப்பு (குஃப்ரு) ஒரு கொடுமையாகும் - ஏன், கொடுமைகளில் எல்லாம் மிகப் பெரியது அதுவே. கொடுமை எது என்பதை நீங்கள் அறிவீர்களா? எந்தப் பொரு ளிடமிருந்தும் அதனுடைய இயல்புக்கு விரோதமான வேலை யைப் பலவந்தமாக வாங்குவதுதான் கொடுமையாகும். இம் மண்ணுலகில் எத்தனைப் பொருள்கள் இருக்கின்றனவோ அவை அத்தனையும் அல்லாஹ்வின் ஆணைக்கு உட்பட்டி ருக்கின்றன. அவற்றின் இயற்கையே ‘இஸ்லாம்’ அதாவது இறைவனின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகும்.

மனிதனும், அவன் உடல் முழுவதும் உடலின் ஒவ்வோர் உறுப்பும் இதே இயல்புடன்தான் தோன்றியிருக்கின்றது என்பதை மேற்கூறியவற்றிலிருந்து தெரிந்திருக்கிறீர்கள். இப்பொருள்களின் மீது ஓரளவு ஆதிக்கம் செலுத்தும் சுதந் திரத்தை மனிதனுக்கு இறைவன் உண்மையில் அளித்திருப்பி னும் இறைவனின் விருப்பப்படியே தன்னிடம் வேலை வாங்க வேண்டும் என்று ஒவ்வொரு பொருளின் இயற்கையமைப்பும் விரும்புகிறது. ஆனால் இறைவனை நிராகரிப்பவனோ (காஃபிரோ) இப்பொருள்களிலிருந்தெல்லாம் இவற்றின் இயற்கைக்கு மாறான வேலையை வாங்குகிறான்.

அவன் தனது நெஞ்சில் இறைவனைத் தவிர மற்றவரின் மரியாதை, பக்தி, அச்சம் எனும் சிலைகளை ஏற்றி வைக்கி

றான். ஆனால் இதயத்தின் இயல்போ அதில் இறைவனின் மரியாதையும், பக்தியும், அச்சமும் இருக்கவேண்டும் என்று விரும்புகிறது. அவன் தன் அனைத்து உடலுறுப்புகளாலும், தன் ஆதிக்கத்தில் உள்ள உலகின் எல்லாப் பொருள்களிலிருந்தும் இறைவனின் விருப்பத்துக்கு மாறான வேலையையே வாங்குகிறான். ஆனால் ஒவ்வொரு பொருளின் இயல்பும் இறைவனின் சட்டத்துக்கு ஒப்ப தன்னிடமிருந்து வேலை வாங்க வேண்டும் என்று விரும்புகிறது.

இப்போது கூறுங்கள்! தன்னுடைய வாழ்வில் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு பொருளின் மீதும் - ஏன் தன் சொந்த உடலின் மீதும், உயிரின் மீதும் கொடுமை செய்துகொண்டே இருக்கும் இந்தக் கயவனைவிடக் கொடுமையாளன் வேறு யார் இருக்கமுடியும்?

இறைநிராகரிப்பு (குஃப்ரு) கொடுமை மட்டுமல்ல; இறைவனுக்கு எதிராகப் புரட்சி, நன்றி கொல்லல், உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தல் ஆகியவையுமாகும். சிறிதே சிந்தியுங்கள்! மனிதனிடம் அவனுக்குச் சொந்தமான எந்தப் பொருள் இருக்கிறது? தனது மூளையைத் தானே படைத்துக் கொண்டானா? இறைவன் படைத்தானா? தனது இதயம், கண்கள், நாக்கு, கைகால்கள் மற்றும் எல்லா உறுப்புகளுக்கும் தானே படைப்பாளனா? அல்லது இறைவனா? தன்னைச் சூழ எத்தனைப் பொருள்கள் உள்ளனவோ அவை அனைத்தையும் உண்டாக்கியவன் மனிதனா? இறைவனா? இப்பொருள்கள் அனைத்தையும் மனிதனுக்குப் பயன் உள்ளவையாகவும், வேலைக்கு உதவுபவையாகவும் ஆக்கி மனிதனுக்கு அவற்றைப் பயன்படுத்தும் ஆற்றலையும் வழங்கியது மனிதனுடைய சொந்தத் திறமையா? இறைவனுடையதா?

இப்பொருள்கள் அனைத்தும் இறைவனுடையவை; இறைவனே இவற்றின் உரிமையாளன்; இறைவனின் பேரருளால்தான் இவை மனிதனுக்குக் கிடைத்துள்ளன என்று நீங்களே கூறுவீர்கள்.

உண்மை இவ்வாறிருக்கும்போது இறைவன் அருளிய மூளையைக் கொண்டு இறைவனுக்கே எதிராகச் சிந்திக்கும்

வேலையை வாங்குபவனைக் காட்டிலும், இறைவன் அருளிய இதயத்தில் இறைவனுக்கே எதிரான எண்ணங் களைக் குடியேற்றுபவனைக் காட்டிலும், கண்கள், நாக்கு, கைகால்கள் மற்றும் இறைவன் தந்துள்ள இதர உறுப்புகளை இறைவனின் விருப்பத்துக்கு மாறாகப் பயன்படுத்துபவ னைக் காட்டிலும் இறைவனின் துரோகி வேறு யார் இருக்க முடியும்?

ஒரு வேலைக்காரன், தன் எஜமானனின் உப்பைத் தின்று விட்டு அவனுக்குத் துரோகம் செய்தால் அவனை உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தவன் என்று கூறுகிறீர்கள். அரசின் அலுவலர் எவரேனும், ஆட்சி வழங்கியுள்ள அதிகாரங்களை அந்த அரசுக்கே எதிராகப் பயன்படுத்தினால் அவரைத் துரோகி என்று தூற்றுகிறீர்கள். தமக்கு உதவி செய்த ஒருவருக்கு எவரேனும் ஒருவர் மோசடி செய்தால் அவரை நன்றிகொன்றவர் என்று பழிக்கிறீர்கள்.

மனிதனுக்கு எதிராக மனிதனே உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்தலும், துரோகம் செய்தலும், நன்றி கொல்லுதலும் ஒரு நிராகரிப்பவன் (காஃபிர்) செய்யும் குற்றங்களைவிடத் தன்மையால் குறைந்ததோ சிறியதோ அல்ல.

மனிதனே மனிதனுக்கு எங்கே உணவளிக்கிறான்? அது இறை வன் அளிக்கும் உணவல்லவா? ஆட்சி, தன் ஊழியர்களுக்கு வழங்கும் அதிகாரங்கள் எங்கிருந்து வந்தவை? இறைவன் அல்லவா மனிதனுக்கு ஆட்சிபுரியும் வல்லமையை வழங்கி யிருக்கிறான். உதவி செய்யும் ஒருவர் மற்றொருவருக்கு எங்கிருந்து உதவி செய்கிறார்? எல்லாம் இறைவனாலேயே அருளப்பட்டவையல்லவா?

மனிதன் மீது அவனுடைய தாய் தந்தையருடைய உரிமையே எல்லாவற்றையும்விட மிகப் பெரிதாகும். ஆனால் தாய் தந்தையரின் இதயத்தில் குழந்தைப் பாசத்தை உண்டாக்கியது யார்? தாயின் மார்பகத்தில் பால் சுரக்கச் செய்தது யார்? தந்தையின் உள்ளத்தில், வியர்வை சிந்திச் சம்பாதித்த பொருளை, தோலும் சதையும் கொண்ட ஓர் உருவத்தின்மீது

பெருமகிழ்ச்சியோடு வாரி இறைக்கும்படிச் செய்யும் எண்ணத்தை விதைத்தவன் யார்? அக்குழந்தையின் வளர்ப்பு, கல்வி, பராமரிப்பு ஆகியவற்றில் தன்னுடைய காலம், செல்வம், சுகம் அனைத்தையும் தியாகம் புரியும்படிச் செய்தவன் யார்?

எந்த இறைவன் மனிதனின் உண்மை உதவியாளனோ, உண்மை அரசனோ, எல்லோரையும்விட அதிகமாக பரிபாலித்துக் காப்பவனோ அவனையே மனிதன் நிராகரித்தால், அவனை இறைவன் என்றே ஏற்றுக்கொள்ள மறுத்தால், அவனுக்குக் கீழ்ப்படிவதை நிராகரித்தால், அவனுக்கு வழிபடுவதைவிட்டு முகம் திருப்பினால் அது எத்தகைய கொடிய கலகம்; நன்றி கெட்டத்தனம் - உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் துரோகப் போக்கு என்பதை இப்போது கூறுங்கள்!

இறைவனை நிராகரித்து விடுவதால் அவனுக்கு மனிதன் ஏதும் கேடு விளைவித்துவிட முடியும் என்று எண்ணிவிட வேண்டாம். அந்தப் பேரரசனின் அரசு எவ்வளவு பரந்ததாயிருக்கிறதென்பதையும் - அது எங்கிருந்து தொடங்குகிறது, எங்கு முடிகிறது என்பதையும் ஆற்றல்மிக்க தொலைநோக்கியைக் கொண்டும் இதுவரை மனிதனால் கண்டுபிடிக்க முடியவில்லை! அவ்வரசனின் சக்தி மிகவும் வலிமை வாய்ந்தது.

நாம் வசிக்கும் பூமியும், சூரியன், செவ்வாய் போன்ற கோடிக்கணக்கான கோள்களும், விண்மீன்களும் அவனுடைய சமிக்ஞையின்படி பந்துகளைப்போல் சுழன்று கொண்டிருக்கின்றன. அவ்வேந்தனின் செல்வம் எல்லையற்றது. இப்பிரபஞ்சம் முழுவதிலும் உள்ள அனைத்தும் அவனுடையவையே. அவற்றில் அவனுடைய பங்காளி எவருமில்லை. அந்த அரசன் எவ்வகையிலும் தேவையற்றவன். அனைத்தும் அவனையே சார்ந்திருக்கின்றன; அவன் எவரையும் சார்ந்திருக்கவில்லை. இந்நிலையில் மனிதன் எம்மாத்திரம்! இறைவனை அவன் ஏற்றுக் கொள்வதாலோ, நிராகரிப்பதாலோ அத்தகையப் பேரரசனுக்கு என்ன நஷ்டம் விளை

வித்துவிட முடியும்? மனிதன், அவனை நிராகரித்துத் துரோகம் செய்வதால் அவனுக்கு ஒரு தீங்கும் செய்துவிட முடியாது. மாறாக அவன் தன்னுடைய அழிவுக்குத் தானே வழி வகுத்துக் கொள்கிறான்.

இறைவனை நிராகரித்தல், அவன் ஆணைகளை மீறுதல் ஆகியவற்றின் இயற்கை விளைவாக மனிதன் எப்போதுமே எப்பயனும் பெறாதவனாக, எவ்வெண்ணமும் நிறைவேறாத வனாக இருந்துவிடுவான். இத்தகையவனுக்கு ஞானத்தின் நேர்வழி எப்போதுமே கிட்டாது. எந்த அறிவு தன்னைப் படைத்தவனையே அறிந்து கொள்ளவில்லையோ அந்த அறிவு எப்பொருளைத்தான் சரியானது என்று அறிந்து கொள்ளப் போகிறது? அவனது புத்தி எப்போதும் கோணல் வழியிலேயே செல்லும். எந்தப் புத்தி தன்னைத் தோற்றுவித்த வனைப் புரிந்துகொள்வதிலேயே தவறு செய்கின்றதோ, அந்தப் புத்தி வேறு எந்தப் பொருளைச் சீரானது என்று உணரப் போகிறது? அவன் தன் வாழ்வின் எல்லா விவகாரங்களிலும் இடறி விழுந்துகொண்டேயிருப்பான்; அவனது ஒழுக்கம் பாழாகிவிடும்; அவனது முன்னேற்றம் தடைபட்டுவிடும்; அவனது சமூக உறவு சீர்கேடு அடையும்; அவனது பொரு ளாதாரம் பாதிக்கப்படும்; அவனது ஆட்சியும், அரசியலும் சீர்கெட்டுப் போகும்.

அவன் உலகில் குழப்பத்தையே பரப்புவான். கொடுமை களும், கொலைகளும் செய்வான். மற்றவர்களின் உரிமைக ளைப் பறிப்பான், தன்னுடைய தீய எண்ணங்களாலும், தீய செயல்களாலும் தன் வாழ்வைத் தனக்குத்தானே கசப்பாக்கிக் கொள்வான். பிறகு, அவன் இவ்வுலகை விடுத்து மறுவுலகை அடையும்போது எந்தப் பொருள்கள்மீது அவன் கொடுமை புரிந்து வந்தானோ அந்தப் பொருள்கள் அனைத்தும் அவனுக்கு எதிராக முறையிடும். அவனுடைய மூளை, இதயம், கண்கள், காதுகள், கைகால்கள் என அவனுடைய ஒவ்வொரு மயிர்க்காலும் இறைவனின் நீதிமன்றத்தில் ‘இறைவனே! இந்தக் கொடியவன் உனக்கு எதிராகப் புரட்சி செய்தான், அப்புரட்சியில் என்னையும் பலவந்தமாகச் சேர்த்துக் கொண்டான்’ என்று குற்றஞ்சாட்டும்.

இறைவனின் ஆணைகளை மீறி எந்தப் பூமி மீது வாழ்ந் தானோ, நடமாடினானோ அந்தப் பூமியும், ஒவ்வாத முறை களில் அவன் சேகரித்த உணவும், தடுக்கப்பட்ட ஹராமான வழியில் திரட்டப்பட்டுத் தடுக்கப்பட்ட காரியங்களில் செலவிடப்பட்ட செல்வமும், துரோகத்தாலும் வன்முறை களாலும் ஆக்கிரமிக்கப்பட்ட பொருளும், புரட்சி செய்வதற் காகப் பயன்படுத்தினானே அந்தக் கருவிகளும், ஆயுதங்களும் அவனுக்கு எதிராக இறைவனின் நீதிமன்றத்தில் நீதி கோரி வாதிகளாக வந்து நிற்கும்; உண்மை நீதிபதியான இறைவன், தீங்கிழைக்கப்பட்ட அனைத்தின் சார்பாக, நீதி வழங்கி அந்தத் துரோகிக்கு வேதனை தரும் தண்டனையை அளிப்பான்.

**இஸ்லாத்தின் நன்மைகள்:**

மேலே கூறப்பட்டவை யாவும் இறை நிராகரிப்பினால் ஏற்ப டும் தீமைகள் ஆகும். வாருங்கள்! இஸ்லாமிய வழி முறை யைக் கடைப்பிடிப்பதால் என்ன நன்மை இருக்கிறது என்ப தையும் பார்ப்போம்.

இவ்வையகத்தில் இறைவனுடைய படைப்பின் மாண்பைக் காட்டும் சின்னங்கள் பரந்து கிடக்கின்றன. சிறப்புமிக்க, பிரமாண்டமான இப்பிரபஞ்சத்தின் செயலகம், ஒரு முழுமை யான நிர்வாகத்தின் கீழ்-ஓர் உறுதியான சட்டத்தின்கீழ் இயங்கி வருவதே இதைப் படைத்தவனும் இயக்குபவனும் ஒரு வலிமை வாய்ந்த ஆட்சியாளன் என்பதற்குச் சான்றாகும். அவனது ஆட்சிக்கு மாற்றமாக ஒரு சிறு துரும்பும் அசையாது. இந்தப் பிரபஞ்சத்தைப்போல் அவனுக்குக் கீழ்ப்படிவதே மனிதனின் இயல்பும் ஆகும். தன்னையறியாமலே மனிதன் இராப்பகலாக இறைவனுக்குக் கீழ்ப்படிந்துதான் நடந்தும் வருகிறான். ஏனெனில் இயற்கைச் சட்டத்துக்கு எதிராக நடந்து அவன் உயிருடன் இருக்கவே முடியாது என்பதை நீங்கள் முன்பே தெரிந்துகொண்டீர்கள்.

ஆனால் இறைவன், மனிதனுக்கு அறிவாற்றலும், சிந்தித்துண ரும் சக்தியும், நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து கொள்ளும் திறனும் அளித்து சுயமாகச் சிந்திக்கவும், செயல்படவும்

ஓரளவு சுதந்திரம் அளித்துள்ளான். இச்சுதந்திரத்தில் உண்மையில் மனிதனுக்குத் தேர்வு இருக்கிறது; இவனுடைய அறிவுக்குத் தேர்வு இருக்கிறது; ஞானத்துக்குத் தேர்வு இருக்கிறது; பகுத்தறிவுக்குத் தேர்வு இருக்கிறது; அளிக்கப்பட்டுள்ள இச்சுதந்திரத்தை எவ்வாறு பயன்படுத்துகிறான் என்பதற்கான தேர்வும் இருக்கிறது. இத்தேர்வில் ஒரு குறிப்பிட்ட வழிமுறையையே பின்பற்ற வேண்டும் என்று மனிதன் நிர்ப்பந்திக்கப்படவில்லை. ஏனெனில் அவ்வாறு நிர்ப்பந்திக்கப்பட்டால் தேர்வின் நோக்கமே அடிபட்டுப் போகும்.

தேர்வின்போது வினாத்தாள்களைக் கொடுத்தபின் நீங்கள் ஒரு குறிப்பிட்ட விடையே எழுதவேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்பட்டால், அத்தகைய தேர்வில் ஒரு நன்மையும் விளையாது என்பதை நீங்களே உணர்ந்து கொள்ளலாம். எத்தகைய விடையளிக்கவும் உங்களுக்குச் சுதந்திரம் இருந்தால்தான் உங்களுடைய உண்மையான திறமை வெளியாகும்.

நீங்கள் சரியான விடையளித்தால் வெற்றி பெறுவீர்கள். உங்களுக்காக வருங்கால முன்னேற்றங்களின் கதவு திறந்து கொள்ளும். தவறான விடையளித்தால் தோல்வியுறுவீர்கள். உங்களுடைய தகுதியின்மையால் உங்களின் முன்னேற்றத்துக்கான வழியை நீங்களே அடைத்துக் கொண்டவர்களாவீர்கள். முற்றிலும் இதைப் போலவே மனிதன் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தும் கீழ்ப்படியாமலும் எவ்வழியினையும் தேர்ந்தெடுத்துச் செயல்படுவதற்குரிய சுதந்திரத்தை இறைவன் மனிதனுக்கு வழங்கியுள்ளான்.

இனி, ஒருவன் தன்னுடைய இயல்பையும், பிரபஞ்சத்தின் இயற்கையையும் புரிந்து கொள்வதில்லை; தன்னைப் படைத்தவனைப் பற்றிய உண்மையையும் அவனுடைய குணக்கூறுகளையும் அறிந்துகொள்வதில் தவறு செய்கிறான். அவனுக்கு அளிக்கப்பட்டுள்ள ஓரளவு சுய அதிகாரத்தையும், சுதந்திரத்தையும் பயன்படுத்தி இறைவனின் ஆணைகளை மீறி அவனுக்கே எதிராகப் புரட்சி செய்யும் வழிமுறைகளைப் பின்பற்றுகிறான் என வைத்துக் கொள்வோம்.

இத்தகைய மனிதன் அறிவு, ஞானம், பகுத்துணர்வு, கடமையுணர்வு ஆகிய தேர்வுகளில் தோல்வியடைகிறான், அவன் எல்லா வகையிலும் தான் ஒரு சாதாரணமானவன் என்பதை, தானே நிரூபிக்கிறான். ஆகையால் அவனுடைய முடிவு நீங்கள் முன்பு தெரிந்துகொண்டுள்ளபடியே ஆக வேண்டும்.

இத்தகையவனுக்கு நேர்மாறாக மற்றொருவன் இத்தேர்வில் வெற்றிபெற்று விடுகிறான். அவன் அறிவு, ஞானம் ஆகியவற்றைச் சரியாகப் பயன்படுத்தி இறைவனைப் புரிந்து ஒப்புக் கொள்கிறான். ஒரு குறிப்பிட்ட வழியைப் பின்பற்ற வேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்படவில்லையாயினும் அவன் நேர்வழியையே தேர்ந்தெடுத்துள்ளான். அவன் நன்மை, தீமைகளைப் பகுத்துணர்வதிலும் தவறு செய்வதில்லை. தீமையின்மீது மோகம் கொள்ளும் சுய அதிகாரம் பெற்றிருந்த போதிலும், அவன் நன்மையையே சுதந்திரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான். அவன், தன் இயல்பை உணர்கிறான்; தன் இறைவனை அறிகிறான். இறைவனின் ஆணைகளை மீறும் சுய அதிகாரம் பெற்றிருந்த போதிலும் அவனுடைய ஆணைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்கவே முடிவெடுக்கிறான். அவன், தன் அறிவைச் சரியாகப் பயன்படுத்துகிறான்; கண்களால் சரியாகப் பார்க்கின்றான்; காதுகளால் சரியாகக் கேட்கிறான்; மூளையைக் கொண்டு சரியான முடிவெடுக்கிறான்; சரியானதையே பின்பற்ற மனமாரத் தீர்மானிக்கிறான். அவன் மெய்யையும், சத்தியத்தையும் புரிந்து 'தான் மெய்யுணர்வுள்ளவன்' என்பதையும் நிரூபிக்கின்றான். சத்தியத்துக்கு முன் சிரம் தாழ்த்தி, தான் ஒரு சத்தியவாதி என்பதையும் காட்டிவிடுகிறான். எனவே, அவன் இறைவனின் தேர்வில் வெற்றி பெற்றுவிடுகிறான்.

எந்த மனிதனுள் இத்தகைய பண்புநலன்கள் இருக்கின்றனவோ அந்த மனிதன் இம்மை, மறுமை இரண்டிலும் வெற்றிபெற்றே தீருவான் என்பது வெளிப்படை.

அவன் இறைவனைப் பற்றிய உண்மையை அறிந்தவனாயும், அவனுடைய உயர்பண்புகளைப் புரிந்தவனாயும் இருப்பதால், அறிவு, செயல் ஆகிய ஒவ்வொரு துறையிலும் நேர்வழி

யையே அவன் கடைப்பிடிப்பான். அவன் உண்மையில் ஞானத்தின் தொடக்கத்தையும் அறிவான்; முடிவையும் அறிவான். தன் முதல் அடியைச் சரியாக எடுத்து வைத்துவிட்டதாலும், இறுதியாகப் போய்ச் சேரவேண்டிய இடத்தை நிச்சயமாய்த் தெரிந்து கொண்டதாலும் இத்தகைய மனிதன் தவறான வழிகளில் சென்று தடுமாற மாட்டான். இனி அவன் தத்துவ ரீதியாகச் சிந்தித்து, உணர்ந்து, பிரபஞ்சங்களின் இரகசியங்களை அறிய முயல்வான். இறைவனை நிராகரிக்கும் தத்துவ வாதியைப்போல் ஐயவாதங்களின் புதிர்களில் சிக்கிக்கொள்ள மாட்டான். அவன், அறிவியலின் மூலம் இயற்கைச் சட்டங்களைத் தெரிந்துகொள்ள முயற்சி எடுத்துக் கொள்வான். பிரபஞ்சத்தில் மறைந்து கிடக்கும் கருவூலங்களை வெளிப்படுத்துவான். இவ்வுலகிலும், மக்களிடையிலும் எந்தச் சக்திகளை இறைவன் வைத்துள்ளானோ அவை அனைத்தையும் ஆராய்ந்து அறிந்து கொள்வான். பூமியிலும் வானிலும் எத்தனைப் பொருள்கள் உள்ளனவோ அவை அனைத்தையும் பயன்படுத்துவதற்கான மிகச் சிறந்த வழியைக் கண்டுபிடிப்பான். ஆனால் இறையறிவு, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் விஞ்ஞானத்தைத் தவறாகப் பயன்படுத்துவதிலிருந்து அவனைத் தடுக்கும்.

‘நான் இப்பொருள்கள் அனைத்துக்கும் உரிமையாளன்; இயற்கையை நான் வென்றுவிட்டேன்; விஞ்ஞான அறிவை என் தன்னலத்துக்கே பயன்படுத்துவேன்; உலகைத் தலைகீழாகப் புரட்டிவிடுவேன்; கொள்ளையும் கொலையும் செய்து என் வல்லமையின் கொடியை உலகம் முழுவதிலும் நிலைநாட்டுவேன்’ என்று தப்பெண்ணங்களில் விழ மாட்டான். அவ்வாறு தப்பான எண்ணத்துக்குப் பலியாகித் தன்னையும், முழு மனித குலத்தையும் ஆபத்துக்கும் பேரழிவுக்கும் இட்டுச் செல்வது ஒரு காஃபிரான (இறையை நிராகரிக்கும்) விஞ்ஞானியின் செயல் ஆகும்.*

---

* நவயுக மனிதனை இத்தகைய நிலைதான் இன்று வழிமறித்துக் கொண்டிருக்கிறது. டாக்டர் ஜோட் கூறுகிறார்: விஞ்ஞானம் நமக்குத் தெய்வங்களுக்குரிய சக்திகளை வழங்கியிருக்கிறது. ஆனால் அவற்றைப் பள்ளிப் பிள்ளைகளையும் பண்படாதவர்களையும் போன்ற மனப்பாங்குடன்தான் நாம் பயன்படுத்துகிறோம்.

முஸ்லிம் விஞ்ஞானி, எந்த அளவுக்குத் தேர்ச்சி பெறுகிறானோ அந்த அளவுக்கு இறைவன்மீது அவனுடைய நம்பிக்கை வளரும்; அந்த அளவுக்கு அவன் இறைவனுக்கு நன்றி செலுத்தும் அடியானாவான். 'என் எஜமானனாகிய இறைவன், என் சக்தியையும் அறிவையும் எவ்வளவு அதிகப்படுத்தியிருக்கின்றானோ அதைக் கொண்டு என்னுடைய நன்மைக்காகவும் எல்லா மக்களுடைய நன்மைக்காகவும் பாடுபடுவேன்' என உறுதிபூண்டு அதன்படிச் செயலாற்றுவதே அவன் இறைவனுக்குச் செலுத்தும் உண்மையான நன்றியாகும்.

இதைப் போலவே, வரலாறு, வாழ்வியல், அரசியல், சட்டம் மற்றும் இதரகல்விகளிலும் கலைகளிலும் செய்யும் ஆராய்ச்சிகளிலும் முயற்சிகளிலும் ஒரு முஸ்லிம், இறை நிராகரிப்பாளரைக் காட்டிலும் எந்த வகையிலும் பின்னடைய

---

தலைசிறந்த தத்துவமேதை பெர்ட்ரண்டு ரஸ்ஸல் எழுதுகிறார்: 'விரிவாகப் பேசுவதானால், நாம் ஒரு கடும் போட்டியின் மையத்தில் நின்றுகொண்டிருக்கிறோம். உபாயங்களைப் பொறுத்தவரை மனித அறிவு நுட்பத்துக்கும், விளைவுகளைப் பொறுத்தவரை மனித விவேகமற்ற தன்மைக்குமிடையே அந்தப் போட்டி நடந்துகொண்டிருக்கிறது. காரிய சாதனைக்குத் தேவையான அறிவுநுட்பத்தில் ஏற்படுகிற ஒவ்வொரு வளர்ச்சியும் கெடுதலுக்காகவே இன்று இருக்கிறது. அறிவின்மை, திறனின்மை ஆகியவற்றினால்தான் மனித இனம் இதுவரை உயிர் பிழைத்திருந்தது. ஒருபுறம் கல்வியறிவும், திறனும் வளர்ந்து மறுபுறம் அவை மனிதனின் அறிவற்ற நடத்தையுடன் கலந்துவிட்டபின் மனித இனம் உயிர் பிழைத்திருப்பதற்கான நிச்சய நிலை இருக்க முடியாது. கல்வியறிவு சக்தி வாய்ந்தது. ஆனால் நன்மை பயப்பதற்கு எவ்வளவு சக்தி உண்டோ அந்த அளவு தீமை பயப்பதற்கும் அதற்குச் சக்தி உண்டு. கல்வியறிவின் வளர்ச்சிக்கேற்ப, விவேகத்திலும் மனிதன் வளர்ச்சி அடையாதவரை கல்வியின் வளர்ச்சி வேதனையின் வளர்ச்சியாகவே முடியும் என்பது இதிலிருந்து தெரியவருகிறது.''

*Impact of Science of Society, Page 120-121*

மற்றுமொரு தலைசிறந்த சிந்தனையாளர் இந்தப் பொய்யாமொழியைக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்:

'பறவைகளைப் போன்று வானில் பறக்கவும், மீன்களைப் போன்று நீரில் நீந்தவும் நமக்குக் கற்பிக்கப்படுகிறது. ஆனால் நிலத்தில் எவ்வாறு வாழ வேண்டும் என்பதை மட்டும் நாம் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை.'

*Counter Attack From the East By Dr. Joad, Page 28.*

மாட்டான். ஆனால் இருவரின் கண்ணோட்டத்திலும் மிகப்பெரும் வேறுபாடு காணப்படும். முஸ்லிம், ஒவ்வொரு கல்வியையும் சரியான கண்ணோட்டத்துடன் கற்பான்; சரியான நோக்கத்துடன் கற்பான்; சரியான முடிவுக்கே வருவான். மனிதன் பண்டைய வரலாற்று அனுபவங்களி ருந்து மிகச் சரியான பாடத்தைப் பெற்றுக்கொள்வான். சமுதாயங்களின் முன்னேற்றத்துக்கும் வீழ்ச்சிக்கும் சரியான காரணங்களைப் புரிந்துகொள்வான். அவர்களுடைய நாகரி கம், முன்னேற்றம் ஆகியவற்றிலிருந்து பயனுள்ளவற்றைக் கண்டுபிடிப்பான். அவர்களுள் தோன்றிய நன்மக்களின் வாழ்க்கையில் இருந்து பலன் பெறுவான். எந்தக் காரணங் களால் பண்டைச் சமுதாயங்கள் அழிந்தனவோ, அவற்றி லிருந்தெல்லாம் தப்பிப்பான். வாழ்வியலில் ஒருவருக்கு இலாபமும், பலருக்கு நஷ்டமும் உண்டாகும் வழியை விடுத்து, பொருளீட்டுவதிலும் செலவு செய்வதிலும் எல்லா ருக்கும் நன்மை பயக்கும் ஒரு சிறந்த வழியைக் கண்டு பிடிப்பான்.

அரசியல் துறையில் 'உலகில் அமைதி, நீதி, நேர்மை, நன்மை, கண்ணியம் ஆகியவற்றைச் செய்யும் அரசு அமைய வேண் டும்; குறிப்பிட்ட ஒருவரோ, குறிப்பிட்ட குழுவோ மக்களை தங்கள் அடிமைகளாக்கக் கூடாது; ஆட்சியையும், அதன் சக்திகள் அனைத்தையும் இறைவனின் அறப்பொருளாகக் கருத வேண்டும்; அவற்றை மக்களின் நன்மைக்காகவே பயன் படுத்த வேண்டும்' எனும் விஷயங்களிலேயே தன்னுடைய முழுக் கவனத்தையும் செலுத்துவான்.

சட்டத் துறையில் செயல்படும் முஸ்லிம், 'நீதியுடனும் நேர்மையுடனும் மக்களின் உரிமைகள் நிர்ணயிக்கப்பட வேண்டும், எந்த வகையிலும் எவர் மீதும் கொடுமை நிகழ்ந்து விடக் கூடாது' எனும் நோக்கோடு சிந்திப்பான்.

முஸ்லிமின் ஒழுக்கத்தில் இறையச்சமும், இறையறிவும், நேர்மையும் இருக்கும். 'பொருள்கள் யாவற்றுக்கும் உரிமை யாளன் இறைவனே. என்னிடமும் பிறமக்களிடமும் உள்ளவை யாவும் இறைவன் அருளியவையே, நான் எந்தப்

பொருளுக்கும் ஏன் - என் உடல், உடலின் சக்திகளுக்கும்கூட உரிமையாளனல்லன். யாவும் அல்லாஹ்வின் அமானித மாகும் (அறப்பொருளாகும்). இந்த அமானிதத்தில் எனக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமையை இறைவனின் விருப்பத்துக்கு ஒப்பவே பயன்படுத்த வேண்டும். ஒருநாள் தன்னுடைய இந்த அமானிதத்தை இறைவன் என்னிடமிருந்து திரும்பப் பெற்றுக் கொள்வான். அவ்வேளையில் ஒவ்வொரு பொரு ளின் கணக்கையும் நான் கொடுக்கவேண்டியிருக்கும்' என்று எண்ணியே இவ்வுலகில் அவன் வாழ்வான்.

இவ்வாறு உணர்ந்து உலகில் வாழும் மனிதனின் ஒழுக்கத் தைப் பற்றி எண்ணிப் பாருங்கள்! அவன், தன் நெஞ்சைத் தீய எண்ணங்களிலிருந்து தூய்மையாக வைத்திருப்பான்; தன் மூளையைத் தீய சிந்தனைகளிலிருந்து காப்பான்; தன் கண் களைத் தீய பார்வையிலிருந்து தடுப்பான்; உண்மைக்குப் புறம்பான சொல் ஏதும் வெளிவராவண்ணம் தன் நாக்கைக் காப்பான்; தன் வயிற்றைத் தடுக்கப்பட்ட (ஹராமான) உண வைக் கொண்டு நிரப்புவதைவிடப் பட்டினி கிடப்பதையே அதிகம் விரும்புவான்; கொடுமைகளைச் செய்வதற்காகத் தன் கைகளை நீட்டமாட்டான்; தீய வழியில் தன் கால்களை ஒரு போதும் நடக்கச் செய்ய மாட்டான்; தான் கொல்லப்பட நேர்ந் தாலும் சரி, தன் தலையை அசத்தியத்தின் முன் ஒருபோதும் சாய்க்கமாட்டான்; தன்னுடைய எந்த விருப்பத்தையும், எந்தத் தேவையையும் எவர்மீதும் கொடுமை செய்து, தகாத முறை யில் நிறைவேற்றிக் கொள்ளமாட்டான்.

அவன் நன்மை, கண்ணியம் ஆகியவற்றின் உருவகமாவான்; உண்மையையும், நேர்மையையும் அதிகம் நேசிப்பான்; அவற்றுக்காகத் தன்னுடைய இலாபங்கள் அனைத்தையும், நெஞ்சின் விருப்பங்கள் அனைத்தையும்-ஏன்-தன்னையே கூடத் தியாகம் செய்து விடுவான்; எல்லாவற்றையும் விடக் கொடுமையையும் தீமையையும் அதிகமாக வெறுப்பான்; நஷ்டம் விளைந்துவிடும் எனும் அச்சத்தினாலோ, ஏதாவ தொரு இலாப ஆசையினாலோ அவற்றுக்கு ஆதரவு தர இசையமாட்டான்.

இத்தகைய மனிதருக்குத்தான் உலக வெற்றி கைகூடும்.

அவனுடைய தலை, இறைவனுக்குமுன் மட்டுமே சாயும்; வேறு எவர் முன்பும் சாயாது; இறைவனிடம் தவிர வேறு எவரிடமும் அவன் கை உயராது. இத்தகையவனுக்கு மேலாக உலகில் மரியாதைக்கும், கண்ணியத்துக்கும் உரியவன் வேறு யார் இருக்க முடியும்? இத்தகையவனிடம் இழிவு எவ்வாறு அணுக முடியும்?

அவனுடைய இதயத்தில் இறையச்சத்தைத் தவிர வேறு எவருடைய அச்சமும் இல்லை. இறைவனிடம் தவிர வேறு எவரிடமும் வெகுமதி பெறும் ஆசையும் அவனுக்கு இல்லை. இக்காரணத்தால் அவனைக் காட்டிலும் வலிமை வாய்ந்தவன் இவ்வுலகில் வேறு எவரும் இருக்கமுடியாது. இத்தகைய மனிதனைச் சத்தியத்திலிருந்தும், நேர்மையிலிருந்தும் எந்தச் சக்தியும் அகற்றிவிட முடியாது. அவனுடைய நம்பிக்கையை (ஈமானை) விலைக்கு வாங்கக்கூடிய எந்தச் செல்வமும் கிடையாது.

அவன் சுகத்தை விரும்பவில்லை. மன இச்சைகளின் அடிமையில்லை. அவனிடம் பேராசை இல்லை. நேர்மையான உழைப்பின் மூலம் எதைச் சம்பாதிக்கிறானோ அதில் திருப்தியுறுகிறான். தகாத வழியில் கிடைக்கும் செல்வத்தை அவன் முன் குவித்தாலும் வெறுப்போடு அதை உதைத்துத் தள்ளிவிடுகிறான். இதுவே திருப்தியான செல்வமாகும். மனிதனுக்கு இதைக் காட்டிலும் மேலான செல்வம் ஏதும் இருக்க முடியாது.

அவன் ஒவ்வொருவருடைய உரிமையையும் வழங்கிவிடுவான்; எவருடைய உரிமையையும் பறிக்கமாட்டான். ஒவ்வொருவருக்கும் நன்மையே செய்வான்; எவருக்கும் தீங்கிழைக்க மாட்டான். ஒவ்வொருவருடைய நன்மைக்காகவும் முயற்சியை மேற்கொள்வான்; அதற்கு மாறாகத் தனக்காக எதையும் விரும்ப மாட்டான். மக்களின் இதயங்கள் அவன் பக்கம் தாமாகவே ஈர்க்கப்படும். ஒவ்வொரு மனிதனும் அவனுக்கு மரியாதை செலுத்தவும், அவன் பால் அன்பு

காட்டவும் வேண்டிய நிலை உண்டாகும். இத்தகைய வனுக்கு மேலாக உலகில் மக்களுக்குப் பிரியமானவனும் மக்களின் பேராதரவு பெற்றவனும் வேறு எவனும் இருக்க மாட்டான். மற்றெல்லாரையும்விட அவன்மீதே மதிப்பும் நம்பிக்கையும் வைக்கப்படும்.

அவன் அமானிதப் பொருளில் மோசடி செய்ய மாட்டான்; நேர்மையிலிருந்து முகம் திருப்ப மாட்டான்; வாக்குறுதிகளில் உண்மையானவனாயும் விவகாரங்களில் நேர்மையானவனா யும் இருப்பான். ஒவ்வொரு செயலிலும், தன்னை எவர் கவனித்தாலும் கவனிக்காவிட்டாலும் இறைவன் ஒருவன் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்கிறான் என்று நம்பி நேர்மையைக் கடைப்பிடிப்பான். அத்தகையவனின் நாணயத்தைப் பற்றி என்ன சொல்ல முடியும்? அவன் மீது நம்பிக்கை கொள்ளாமல் எவர் இருக்க முடியும்?

ஒரு முஸ்லிம், எவ்வாறு வாழவேண்டும் என்பதை நன்கு புரிந்துகொண்டால் ஒருபோதும் அவன், உலகில் இழிவு படுத்தப்பட்டவனாகவோ, தாழ்த்தப்பட்டவனாகவோ, அடிமைப்பட்டவனாகவோ இருக்கவே முடியாது. அவன் எப்போதும் மேலாதிக்கம் செலுத்துபவனாயும் ஆணையிடு பவனாயுமே இருப்பான் என்பதில் உறுதியான நம்பிக்கை உங்களுக்கு ஏற்பட்டு விடும். ஏனெனில் ஒரு முஸ்லிமின் மீது இஸ்லாம் பதிய வைக்கும் பண்புச் சிறப்புகளை எந்தச் சக்தியும் மிகைத்துவிட முடியாது.

இவ்வாறு உலகில் மாண்பும், மரியாதையும் கொண்ட வாழ்வு வாழ்ந்தபின் அவன் தன் இறைவனுக்குமுன் வருகை தரும்போது இறைவன் அவன்மீது தன்னுடைய அருளையும் அருட்கொடைகளையும் சொரிவான். ஏனெனில் எந்த அமானிதம் தன்னிடம் ஒப்படைக்கப்பட்டதோ அதற்குரிய கடமைகள் அனைத்தையும் அவன் முழுமையாக நிறை வேற்றிவிட்டான்; இறைவன் எந்தத் தேர்வை அவனுக்கு வைத்தானோ அதில் நிறைய மதிப்பெண்களைப் பெற்று வெற்றி அடைந்துவிட்டான். இந்த வெற்றி நிலையான

தாகும். இம்மை முதல் மறுமை வரையும் இது தொடருகிறது. எங்கும் இதன் தொடர்பு அறுபடுவதில்லை.

இதுதான் இஸ்லாம் - மனிதனின் இயற்கை மதம். இது ஒரு குறிப்பிட்ட நாட்டுக்கு மட்டும் சொந்தமானதல்ல. ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு நாட்டிலும் தோன்றிய இறையறிவும் சத்திய உணர்வும் கொண்ட மக்கள் அனைவருடைய மதமும் இதுவாகவே இருந்தது. அவர்கள் அனைவரும் முஸ்லிம்களாயிருந்தார்கள் - அவர்களுடைய மொழியில் இந்த மதத்தின் பெயர் இஸ்லாம் என்று இருந்திருந்தாலும் சரி, வேறு ஒன்றாக இருந்திருந்தாலும் சரியே.

# 2. நம்பிக்கையும் (ஈமானும்) கீழ்ப்படிதலும்

**கீழ்ப்படிவதற்கு அறிவும், உறுதியான நம்பிக்கையும் அவசியம்:**

*நம்மைப் பரிபாலித்துக் காப்பவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்குப் பெயர்தான் 'இஸ்லாம்' என முந்தைய அத்தியாயத்தில் நீங்கள் அறிந்திருப்பீர்கள். சில அடிப்படை விஷயங்களைத் தெரிந்துகொண்டு அவற்றின்மீது திட நம்பிக்கை கொள்ளாதவரை மனிதன் அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிய முடியாது. அவ்வடிப்படைகள் யாவை? வாருங்கள்! அதைப்பற்றிச் சிறிது ஆராய்வோம்.*

*எல்லாவற்றுக்கும் முதலாவதாக மனிதனுக்கு இறைவன் ஒருவன் இருக்கிறான் எனும் முழு நம்பிக்கை ஏற்பட வேண்டும். இறைவன் ஒருவன் இருக்கிறான் என்னும் நம்பிக்கையே இல்லாவிட்டால் அவன் இறைவனுக்கு எப்படிக் கீழ்ப்படிந்து நடக்கப் போகிறான்? அத்துடன் இறைவனின் பண்புகளைப் பற்றிய அறிவும் அவசியமாகும். இறைவன் ஒருவனே, அவனுடைய இறைமையில் அவனுக்கு இணை, துணை யாருமில்லை என்று எவன் அறியாதிருப்பானோ அவன் மற்றவர்முன் சிரம் சாய்ப்பதிலிருந்தும், கையேந்துவதிலிருந்தும் எப்படித் தப்பிக்க முடியும்?*

*இறைவன் எல்லாவற்றையும் பார்க்கக் கூடியவனாயும், கேட்கக் கூடியவனாயும் இருக்கிறான்; ஒவ்வொரு பொரு*

ளைப் பற்றியும் நன்கறிந்திருக்கிறான் எனும் விஷயங்களைப் பற்றிய நம்பிக்கை எவனுக்கு இல்லையோ அவன் தன்னைத் தானே இறைவனின் கட்டளைகளை மீறுவதிலிருந்து எப்படித் தடுத்துக்கொள்ள முடியும்? இறைவனுடைய பண்புகளைச் சரிவரத் தெரிந்துகொள்ளாத வரையில், எண்ணங்களிலும், ஒழுக்கத்திலும், செயல்களிலும் இஸ்லாத்தின் நேர்மையான வழிகளில் செல்வதற்குத் தேவையான பண்புகளை மனிதன் பெற முடியாது. இதைச் சிறிது சிந்தித்தாலே நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். இந்த அறிவு, புரிந்து கொள்ளுதல் எனும் அளவில் மட்டும் இருந்தால் போதாது. அது நம்பிக்கையோடு நெஞ்சில் ஆழப் பதிந்துவிட வேண்டும். அப்போது தான் மனிதனின் நெஞ்சம் அந்த அறிவுக்கு எதிரான எண்ணங்களிலிருந்து தப்பிக்க முடியும். மேலும் அவனுடைய வாழ்வு, அந்த அறிவுக்கு எதிராகச் செயல்படுவதிலிருந்தும் பாதுகாப்பாக இருக்கமுடியும்.

இதற்குப்பின் இறைவனின் விருப்பத்துக்கு ஏற்ப வாழ்வதற்குரிய சரியான வழிமுறை என்ன என்பதும் மனிதனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அப்போதுதான் இறைவன் எந்த விஷயத்தை விரும்புகிறான் என்று அறிந்து அதைக் கடைப்பிடிக்கவும், எந்த விஷயத்தை விரும்பவில்லை என்று அறிந்து அதைத் தவிர்க்கவும் முடியும். இந்நோக்கத்துக்காக இறைவனுடைய சட்டம், இறைவன் விதித்த முறைமை ஆகியன பற்றிய முழு அறிவும் மனிதனுக்கு ஏற்பட வேண்டியது அவசியமாகும். இதுதான் இறைவனின் சட்டம்; இது தான் இறைவன் விதித்த முறைமை; இவற்றைப் பின்பற்றினால்தான் இறைவனுடைய திருப்தியைப் பெறமுடியும் என்பதைப் பற்றி முழு நம்பிக்கையும் கொள்ளவேண்டும்.

இந்த அறிவு அவனுக்கு அறவே இல்லையாயின் அவன் எதற்குக் கீழ்ப்படிந்து நடப்பான்? அதைப் பற்றிய அறிவு மட்டும் இருந்து அதில் முழு நம்பிக்கை இல்லாவிட்டால், அவற்றை எப்படி ஒருவன் முழுக்க முழுக்கக் கடைப்பிடிக்க முடியும்? அல்லது இந்தச் சட்டம், இந்தக் கோட்பாட்டைப் போலவே வேறு சட்டமும் கோட்பாடும் சரியாகவே

இருக்கும் எனும் எண்ணம் மனதில் இருந்தாலும் அவற்றை எப்படி முழுக்க முழுக்கப் பின்பற்ற முடியும்?

மேலும், இறைவிருப்பத்துக்கு மாறாக நடந்தால் - இறை விருப்பத்துக்குரிய சட்டங்களுக்குக் கீழ்ப்படியாதிருந்தால் விளைவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் அவன் கட்டளை களை நிறைவேற்றுவதால் என்ன வெகுமதி கிடைக்கும் என்பதைப் பற்றியும் மனிதன் தெரிந்திருக்க வேண்டும். இந்நோக்கத்துக்காக மறுமை வாழ்வு, இறைநீதிமன்றத்தில் நிற்பது, கட்டளைகளை மீறுவதால் ஏற்படும் தண்டனைகள், ஆணைகளை நிறைவேற்றுவதால் அடையப் போகும் வெகுமதிகள் ஆகியவை பற்றிய அறிவும், அதன்மீது முழு நம்பிக்கையும் மனிதனுக்கு மிகவும் அவசியம்.

மறுமை வாழ்வைப் பற்றிய அறிவில்லாத ஒருவன், இறை வனுக்குக் கீழ்ப்படிவதாலோ அவன் ஆணைகளை மீறுவதா லோ யாதொரு விளைவும் ஏற்பட்டு விடாது என்றே கருது வான். கீழ்ப்படிபவன், கீழ்ப்படியாதவன் ஆகிய இருவருமே இறப்பவர்கள் தாமே, மண்ணோடு மண்ணாகி விடுபவர்கள் தாமே என்ற கருத்து அவன் உள்ளத்தில் குடிகொண்டிருப்ப தால், மேற்கண்ட இருவருக்குமிடையே வேறுபாடே இல்லை என்று அவன் எண்ணுகிறான். அத்தகைய எண்ணம் கொண்டவன் கீழ்ப்படிவதிலுள்ள கட்டுப்பாடுகளையும், கஷ்டங்களையும் சகித்துக்கொள்ள ஒப்புக் கொள்வான் என்றும் எதிர்பார்க்க முடியாது. ஒரு செயல் செய்யத் தகாதது என்று தெரிந்திருந்தும், அதனால் இவ்வுலகில் ஏதேனும் ஒரு நஷ்டம் ஏற்படும் எனும் அச்சம் இல்லாதிருந்தால் அப்பாவச் செயல்களிலிருந்து விலகியிருப்பான் என்று எப்படி நம்ப முடியும்? இத்தகைய கொள்கையுடன் மனிதன் இறைச் சட்டத்துக்கு ஒருபோதும் கீழ்ப்படிபவனாக இருக்க மாட்டான்.

இதைப் போலவே எவன், மறுமை வாழ்வைப் பற்றியும் இறைவனுடைய நீதிமன்றத்திற்கு வர வேண்டியதைப் பற்றியும் தெரிந்துவைத்திருந்தும் அவற்றின்மீது முழு நம்பிக்கை கொள்ளவில்லையோ அவனும் கீழ்ப்படிவதில்

நிலைத்து நிற்கமாட்டான். ஏனெனில் ஐயத்துடனும் தயக்கத்துடனும் ஒரு மனிதன் எதிலும் உறுதியாக நிலைத்து நிற்க முடியாது.

ஒரு குறிப்பிட்ட வேலை நிச்சயம் பலனளிக்கும் என்று நீங்கள் நம்பினால்தான் மனப்பூர்வமாக அதைச் செய்வீர்கள். ஒரு குறிப்பிட்ட வேலை நஷ்டத்தை விளைவிக்கும் என்று முழு நம்பிக்கை உங்களுக்கு ஏற்பட்டால்தான் அவ்வேலையி லிருந்து உறுதியாக விலகியிருப்பீர்கள். ஆகையால் ஒரு வழி முறையைப் பின்பற்ற அதன் விளைவைப் பற்றியும், முடி வைப் பற்றியும் அறிந்திருத்தலும் அவசியம். மேலும் அந்த அறிவு உள்ளத்தில் ஆழ வேரூன்றி உறுதி வாய்ந்த நம்பிக்கை யுடன் திகழ்வதும் அவசியம் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

**நம்பிக்கையின் (ஈமானின்) விளக்கம்:**

முந்தைய விளக்கத்தில் எதை நாம் அறிவு, நம்பிக்கை என்று குறிப்பிட்டோமோ அதன் பெயர்தான் ஈமான் என்பதாகும். ஈமான் எனும் அரபிச் சொல்லுக்கு அறிதல், ஒப்புக் கொள்ளு தல் என்று பொருள். எவனொருவன், இறைவனுடைய ஏகத்துவத்தையும், அவனுடைய உண்மையான பண்பு களையும், அவனுடைய சட்டங்களையும், அவன் நற்செயல் களுக்காக அளிக்கும் வெகுமதி, தீச்செயல்களுக்காக அளிக் கும் தண்டனை ஆகியவற்றையும் அறிந்திருக்கிறானோ அறிந்து அவற்றில் முழு நம்பிக்கையும் வைக்கிறானோ அவனே 'மூமின்' என்று கூறப்படுகிறான். ஈமானின் விளை வாக மனிதன், முஸ்லிமாக - அதாவது இறைவனுக்குக் கீழ்ப் படிந்து அவன் ஆணைகளை நிறைவேற்றுபவனாக மாறிவிடுகிறான்.

நம்பிக்கையைப் (ஈமான்) பற்றிய இந்த விளக்கத்தால், நம்பிக் கையில்லாமல் எந்த மனிதனும் முஸ்லிம் ஆக முடியாது என்பதை நீங்கள் உணர்ந்துகொள்ளலாம். மரத்துக்கு விதை யுடன் எத்தகைய தொடர்பு உண்டோ, அத்தகைய தொடர்பே இஸ்லாத்துக்கு ஈமானுடன் உண்டு. விதையில்லாமல் மரம்

முளைக்கவே முளைக்காது. ஒருகால் விதை பூமியில் விதைக்கப்பட்டு மண் கெட்டதாயிருக்கும் காரணத்தாலோ நீரும் காற்றும் தேவையான அளவு கிடைக்காத காரணத்தாலோ, மரம், அரைகுறையாக முளைக்கலாம். இதைப் போலவே ஒருவன் நெஞ்சில் நம்பிக்கை (ஈமான்) இருந்தும், தன் எண்ணங்களின் பலவீனத்தாலோ, அரைகு றைக் கல்வி, அரைகுறைப் பயிற்சி, தீயோர் தொடர்பு ஆகிய வற்றாலோ அவன் பழுத்த-முழு முஸ்லிமாக இல்லாமல் இருப்பதும் சாத்தியமே. எவனொருவன் நம்பிக்கை (ஈமான்) அறவே இல்லாதவனாயிருக்கிறானோ அவன் எவ்விதத்தி லும் ‘முஸ்லிம்’ ஆகமுடியாது.

ஈமான், இஸ்லாம் ஆகியவற்றைப் பொறுத்த வரையில் மக்கள் அனைவருள்ளும் நான்கு படி நிலைகள் உண்டு.

(1) நம்பிக்கை கொண்டவர்களை, அவர்களுடைய நம்பிக்கை, இறைவனுடைய கட்டளைகளுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடக்கும்படிச் செய்கிறது. இறைவன் எதை விரும்பவில்லையோ அதிலிருந்து அவர்கள், நெருப்பைத் தொட ஒருவன் எவ்வாறு அஞ்சுவானோ அவ்வாறு அஞ்சி விலகி விடுவார்கள். எதை இறைவன் விரும்புகிறானோ அதை அவர்கள், பொருளீட்டுவதற்காக ஒருவன் எவ்வளவு ஆர்வத்துடன் வேலை செய்வானோ அவ்வளவு ஆர்வத்துடன் செய்வார்கள்.

இவர்கள்தாம் உண்மை முஸ்லிம்கள்.

(2) சிலர் நம்பிக்கை கொண்டிருப்பார்கள். ஆனால் அவர்களுடைய அந்த நம்பிக்கை, இறைக்கட்டளைகளை முழுமையாக நிறைவேற்றுபவர்களாய் அவர்களை ஆக்க முடியாத அளவு வலிமையற்றதாயிருக்கும். இத்தகையவர் கள் ஒருபடி குறைந்தவர்கள். ஆயினும் பொதுவாக இவர் களும் முஸ்லிம்களே. இவர்கள் இறைக் கட்டளைகளை நிறைவேற்றாத குற்றத்தின் காரணத்துக்காகத் தண்டனைக்கு உரியவர்கள். இவர்களுடைய நிலை குற்றவாளிகளுடைய தாகுமேயொழிய, துரோகிகளுடையதாகாது. ஏனெனில்

இவர்கள் அரசனை, அரசன் என்று ஒப்புக்கொள்கிறார்கள். அவனுடைய சட்டங்களைப் பின்பற்ற வேண்டிய சட்டங்கள் என்று ஏற்றுக் கொள்கிறார்கள்.

(3) சிலர் நம்பிக்கை இல்லாதவர்களாயிருப்பார்கள். ஆனால் வெளிப்படையாக இறைவனின் சட்டங்களுக்கு உட்பட்டு நடப்பதைப்போல் நடிப்பார்கள். இவர்கள் உண்மையில் துரோகிகளே. இவர்களுடைய வெளிப்படையான நன்னடத்தை உண்மையில் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து அவனுடைய ஆணைகளை நிறைவேற்றுவதாகாது. ஆகையால் இவர்களின் நடத்தை மதிக்கத்தக்கதல்ல. ஒருவன், அரசனை அரசன் என்று ஒப்புக்கொள்ளாமல் - அவனுடய சட்டங்களைப் பின்பற்ற வேண்டிய சட்டங்கள் என்றே ஏற்றுக்கொள்ளாமல் சட்டப்படி நடப்பவனைப் போல் வெளிப்படையாகக் காட்டிக் கொண்டு மனதளவில் மாறு பட்டவனாக இருந்தால் அவனை அரசனின் சட்டங்களைப் பின்பற்றுபவன்; அரசனின் நம்பிக்கைக்குரியவன் என்று நீங்கள் கூற முடியாது. அத்தகையவன், பொதுவாக துரோகிகளின் பட்டியலில்தான் இடம்பெறுவான்.

(4) சிலர் நம்பிக்கை இல்லாதவர்களாயிருப்பதுடன், செயல்களிலும் விஷமிகளாகவும், கெட்ட நடத்தையுடைய வர்களாகவும் இருப்பார்கள். இவர்கள் அனைவரைக் காட்டிலும் மிகக் கீழ்த்தரமானவர்கள். இவர்கள் துரோகிகளும் குழப்பவாதிகளுமாவார்கள்.

மனிதகுலம் மேற்கூறியவாறு பல்வேறு தரத்தினராய்ப் பிரிந்து நிற்கும் காரணத்தால், மனிதனின் வெற்றி வாய்ப்பு உண்மையில் ஈமான் ஒன்றினையே சார்ந்து நிற்கிறது என்பது புலனாகிறது. இஸ்லாம் - அது நிறைவு பெற்றதாயிருப்பினும் சரி, அரைகுறையானதாயிருப்பினும் சரி - நம்பிக்கை (ஈமான்) எனும் விதையிலிருந்துதான் உண்டாகிறது. எங்கு நம்பிக்கை இல்லையோ அங்கு இறைநிராகரிப்பு (குஃப்ரு) இருக்கும். அதற்கு மற்றொரு பொருள் இறைவனுக்கு எதிரான புரட்சியாகும். அப்புரட்சி குறைவானதாயிருப்பினும் சரி,

ஆகக் கீழ்த்தரமானதாயிருப்பினும் சரியே. மேற்கூறியவற்றிலிருந்து இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் ஈமானுடன் கூடிய வாழ்வின் முக்கியத்துவம் நன்கு புலனாகிறது.

### அறிவுபெறும் வழி:

இறைவனுக்குக் கீழ்ப்படிவதற்கு நம்பிக்கை அவசியம் என நீங்கள் முன்பே தெரிந்துகொண்டீர்கள். இனி இறைவனின் பண்புகளை, அவனுடைய விருப்பத்துக்குரிய நியதிகளை, மறுமை வாழ்வு பற்றிய சரியான அறிவை - நம்பிக்கை கொள்ளத்தக்க அறிவை எந்த வழியில் அடைய முடியும் என்பதே இப்போது கேள்வியாகும்.

பிரபஞ்சத்தின் ஒவ்வொரு திசையிலும் இறைவனுடைய செயல்திறனின் சின்னங்கள் பரந்து கிடக்கின்றன. அவை இம்மாபெரும் அலுவலகத்தை ஒருவனே உண்டாக்கியிருக்கிறான்; அவனே இதை இயக்குகிறான் என்பதற்குச் சான்று கூறுகின்றன. மேலும் அச்சின்னங்களில் அல்லாஹுதஆலாவின் பண்புகள் காணப்படுகின்றன என்பதை முன்பே நாம் விளக்கி விட்டோம். அவனுடைய ஞானம், அவனுடைய வல்லமை, இரக்கம், அன்பு, படைத்துக் காத்து பரிபாலிக்கும் இயல்பு, கோபம், ஆக எந்தப் பண்பின் பெருமை அவனுடைய செயல்களில் வெளிப்படாமல் இருக்கிறது? ஆனால் மனிதனின் அறிவு, திறமை ஆகியன இப்பொருள்களைக் காண்பதிலும், புரிந்துகொள்வதிலும் பெரும்பாலும் தவறே செய்திருக்கின்றன. இச்சின்னங்கள் யாவும் கண்முன்னே இருந்தும்கூட, சிலர் இரு கடவுளர் இருக்கிறார்கள் என்றும், சிலர் மூவர் இருக்கிறார்கள் என்றும், சிலர் கணக்கற்றவர்கள் இருக்கிறார்கள் என்றும் நம்பிக்கை கொண்டுள்ளார்கள். மற்றும் சிலர், இறைமையைப் பல கூறுகளாக்கி, மழைக்காக ஒரு கடவுள், காற்றுக்காக ஒரு தெய்வம், நெருப்புக்காக ஒரு தெய்வம் - ஆக ஒவ்வொரு சக்திக்கும் தனித்தனித் தெய்வங்கள் இருக்கின்றன என்றும், அத்தெய்வங்களுக்கெல்லாம் ஒரு தலைமைத் தெய்வம் இருக்கிறதென்றும் கூறிவைத்துவிட்டார்கள். இதைப் போலவே இறைவனுடைய உண்மை நிலை பற்றியும், அவனுடைய பண்புகளைப் பற்றியும்

*அறிந்துபுரிந்து கொள்வதில் மக்களுடைய அறிவு தடுமாற்றம் அடைந்திருக்கிறது. அவற்றைப் பற்றி விளக்க இங்கு சந்தர்ப்பமில்லை.*

*மறுமை வாழ்வு குறித்தும் மக்கள் பல தவறான கருத்துகளை ஏற்படுத்திவிட்டார்கள். மனிதன் இறந்தபின் மண்ணோடு மண்ணாகிவிடுவான்; பிறகு அவனுக்கு மறுவாழ்வு கிடையாது என்று சிலரும், மனிதன் அடிக்கடி இதே உலகில் பிறவிகள் எடுத்துத் தன்னுடைய வினைகளுக்கேற்ற தண்டனையோ தன் நற்செயல்களுக்குப் பிரதிபலனோ பெறுவான் என்று சிலரும் கூறி வைத்துவிட்டார்கள்.*

*இறைவனின் விருப்பத்துக்கேற்ப வாழுவதற்கு எத்தகைய நியதிகளைப் பின்பற்றுதல் அவசியமோ அவற்றை மனிதன், தானே தன் அறிவால் இயற்றுவது மிகவும் கடினமானதாகும்.*

*அவ்வாறு மனிதனின் அறிவாற்றலை முழுமையாகச் சோதிக்க வேண்டுமானால் அதற்கான சிறந்த வழிமுறை இதுதான்: மனிதன் எந்தவித வழிகாட்டுதலுமின்றித் தனியே விடப்பட்டுப் பின்னர் அவன் தனது முயற்சியாலும், சொந்தத் திறமையாலும் சத்தியத்தை அடைய முயல வேண்டும். அவ்விதம் சத்தியத்தை அடைந்தால் வெற்றியையும், அதனை அடையாதபோது தோல்வியையும் ஏற்க நேரிடும்.*

*ஆனால் மனிதன் இயல்பிலேயே பலவீனமானவன். அவன் மிகவும் சரியான அறிவு பெற்றிருந்தாலும் அவனுடைய கல்வித்திறன் மிகவும் உயர்தரமானதாக இருந்தாலும் பல்லாண்டு கால அனுபவம், சிந்தனை, ஆராய்ச்சிக்குப் பின்பே அவன் ஓரளவுக்கு இவ்விஷயங்கள் குறித்து முடிவு எடுக்க முடியும். அப்போதும், தான் முழு உண்மையையும் தெரிந்து கொண்டுவிட்டதாக நிறைவான நம்பிக்கை கொள்ள முடியாது. ஏனெனில் பேரருளாளனாகிய அல்லாஹ் மனிதர்களை அத்தகைய கடுமையான சோதனைக்கு உட்படுத்தவில்லை. அவன், தன் அருளால் மனிதர்களுக்குள்ளே சிலரைப் படைத்தான். அவர்களுக்குத் தன் பண்புகளைப் பற்றிய சரியான அறிவை வழங்கினான். இறைவிருப்பத்துக்கு*

ஏற்ப மனிதன் வாழ வேண்டிய வழிமுறையையும் காட்டினான். மறுமை வாழ்வைப் பற்றியும் சரியான தகவல் அளித்து அதை மற்ற மனிதர்களுக்கு அறிவிக்கும்படியும் அவர்களுக்கு அறிவுறுத்தினான். அவர்களே இறைவனின் தூதர்கள் ஆவர். எதன் மூலமாக அவர்களுக்கு இறைவன் மேற்கூறிய அறிவைத் தந்தானோ அதற்குப் பெயர்தான் 'வஹீ' என்பதாகும்.

எந்த நூலில் இந்த அறிவு அவர்களுக்கு அருளப்பட்டுள்ளதோ அதுவே இறைவனின் வேதம் என்றும், இறைவனின் வாக்கு என்றும் கூறப்படுகிறது. இறைத்தூதர்களின் புனிதமான வாழ்வைத் தெரிந்து அவர்களுடைய மேலான போதனைகளைப் பற்றிச் சிந்தித்தபின் மனிதன் அதில் நம்பிக்கை கொள்கிறானா, இல்லையா என்பதே அவனைப் பற்றியும், அவன் திறமையைப் பற்றியும் இப்போதுள்ள சோதனையாகும். அவன் சத்தியத்தை உணரும் பண்புள்ளவனாகவும், சத்தியவாதியாகவும் இருந்தால் சத்தியவாக்கையும் சத்திய மனிதரின் போதனையையும் ஏற்று, தேர்வில் வெற்றிபெற்று விடுவான். அவன் ஒப்புக்கொள்ளவில்லையானால் உண்மையையும் சத்தியத்தையும் புரிந்துகொள்ளும் நற்பண்பை அவன் இழந்துவிட்டான் என்பதே அவனுடைய நிராகரிப்புக்குப் பொருள்ஆகும். அந்த நிராகரிப்பு, தேர்வில் அவனைத் தோல்வி காணச்செய்துவிடும்; இறைவன், இறைவனுடைய சட்டங்கள், மறுமை வாழ்வு ஆகியவை குறித்து அவன் ஒருபோதும் எத்தகைய சரியான அறிவையும் பெறவே முடியாது.

### புலனுணர்வுக்கு அப்பாற்பட்டவை மீது நம்பிக்கை (ஈமான் பில்ஃகைப்):

உங்களுக்கு ஏதேனும் ஒரு விஷயத்தைப் பற்றிய அறிவு இல்லையானால் அவ்விஷயத்தைத் தெரிந்துகொள்ள அதில் அறிவு பெற்றிருப்போரை நாடுகிறீர்கள். அவர் அறிவுரைப்படிச் செயல்படுகிறீர்கள். நீங்கள் நோயுற்றால் உங்களுக்கு நீங்களே சிகிச்சை செய்து கொள்வதில்லை. ஒரு மருத்துவரிடம் செல்கிறீர்கள். அந்த மருத்துவரின் பட்டம், தொழில் அனுபவம், அவர் நோயைக் குணப்படுத்தும்

விதம் ஆகியவற்றைக் கண்டு உங்களுடைய சிகிச்சைக்கான தகுதி அந்த மருத்துவரிடம் இருப்பதாக நம்புகிறீர்கள். அந்த நம்பிக்கையின் அடிப்படையில் அவர் எந்த மருந்தை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று கூறுகிறாரோ அப்படியே பயன்படுத்துகிறீர்கள். எதைத் தவிர்த்துப் பத்தியம் இருக்க வேண்டும் என்று கட்டளையிடுகிறாரோ அவ்வாறு பத்தியம் இருக்கிறீர்கள்.

இதைப் போலவே சட்டத்துறையில் நீங்கள் வழக்கறிஞரை நம்புகிறீர்கள். அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிகிறீர்கள். கல்விப் பிரச்னையில் ஆசிரியர் மீது நம்பிக்கை கொள்கிறீர்கள். அவர் உங்களுக்கு என்ன போதிக்கிறாரோ அதை நம்பி செயல்படுகிறீர்கள். நீங்கள் எங்கேயாவது போகவேண்டியிருந்தால்-வழி தெரியாதிருந்தால் வழி தெரிந்தவர்மீது நம்பிக்கை கொள்கிறீர்கள். ஆக உலகத்தின் ஒவ்வொரு விவகாரத்திலும் விஷயத்தைத் தெரிந்து கொள்ளவும், அறிவைப் பெறவும், விஷயம் தெரிந்த ஒருவர் மீது நீங்கள் நம்பிக்கை (ஈமான்) கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அவருக்குக் கீழ்ப்படிய வேண்டிய நிர்ப்பந்தமும் உங்களுக்கு உண்டாகிறது. இதற்குப் பெயர்தான் புலனுணர்வுக்கு அப்பாற்பட்டவற்றில் நம்பிக்கை கொள்ளுதல் (ஈமான் பில்ஃகைப்) என்பது ஆகும்.

புலனுணர்வுக்கு அப்பாற்பட்டவை மீது நம்பிக்கை என்பதற்குப் பொருள் என்னவெனில், உங்களுக்கு எதைப்பற்றித் தெரியவில்லையோ அதைப் பற்றிய அறிவை அதை அறிந்தவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ள வேண்டும். அதன்மீது முழு நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பதேயாகும்.

இறைவனைப் பற்றியோ, அவனுடைய பண்புகளைப் பற்றியோ உங்களுக்குத் தெரியாது. அவனுடைய வானவர்கள் அவனுடைய ஆணைக்கேற்ப எல்லா இடங்களிலும் பணி செய்து கொண்டிருக்கிறார்கள் - உங்களை எல்லாப் புறமும் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. இறைவனின் விருப்பத்துக்கேற்ப வாழ்வதற்குரிய வழிமுறை என்னவென்றும் உங்களுக்குத் தெரியாது. மறுமை வாழ்வின் சரியான நிலையும் உங்களுக்குத் தெரியாது.

இவை அனைத்தையும் அறியவேண்டியது மிக அவசியமாக வும் இருக்கிறது. ஒரு மனிதருடைய நேர்மை, சீலம், இறை யச்சம், மிகவும் தூய்மையான வாழ்வு, மிக நுண்ணறிவு செறிந்த பேச்சு ஆகியவற்றைக் கண்டு அவர் சொல்வதெல் லாம் உண்மையென்றும் அவருடைய அறிவுரைகள் நம்பிக் கைக்குரியன என்றும் நீங்கள் தீர்மானித்து, மேற்கூறிய விஷயங்களை அவரிடமிருந்து அறிந்து அவற்றின்மீது முழுநம்பிக்கை வைக்கலாமென்று ஏற்றுக்கொள்கிறீர்கள்.

இதற்குத்தான் ''ஈமான் பில்ஃகைப்'' அதாவது புலனுணர் வுக்கு அப்பாற்பட்டவை மீது நம்பிக்கை என்று பெயர். அல்லாஹு தஆலாவுக்கு கீழ்ப்படிவதற்கும் அவனுடைய விருப்பத்துக்கேற்ப செயல்படுவதற்கும் புலனுணர்விற்கு அப்பாற்பட்டவை மீது நம்பிக்கை (ஈமான் பில்ஃகைப்) அவசியமாகும். ஏனெனில், இறைத்தூதர்களைத் தவிர வேறு எவர் மூலமாகவும் உங்களுக்குச் சரியான விஷயஞானம் கிடைக்காது. சரியான ஞானமின்றி இஸ்லாமிய வழிமுறை யில் நீங்கள் சரிவர நடக்க முடியாது.

# 3. இறைத்தூது

முந்திய அத்தியாயங்களில் மூன்று விஷயங்கள் உங்களுக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளன.

முதலாவதாக, இறைவனுக்குக் கீழ்ப்படிவதற்கு இறைவனைப் பற்றிய உண்மை, அவனுடைய பண்புகள், அவனுக்கு விருப்பமான வழிமுறைகள், மறுமையில் அடையப் போகும் வெகுமதி அல்லது தண்டனை ஆகியவை பற்றிய தெளிவான ஞானம் பெற்றிருத்தல் வேண்டும். அத்தகைய ஞானத்தில் உங்களுக்கு நிறைவான நம்பிக்கை (ஈமான்) ஏற்பட வேண்டும்.

இரண்டாவதாக, தானே முயன்று இந்த அறிவைப் பெற்றுக் கொள்ள வேண்டும் எனும் கடுமையான சோதனைக்கு மனிதனை அல்லாஹ் தஆலா ஆளாக்கவில்லை. மாறாக மனிதர்களுக்குள்ளே தேர்ந்தெடுக்கப்பட்ட சிலருக்கு - அதாவது இறைத்தூதர்களுக்கு 'வஹீ' மூலம் (இறைவன் தன் தூதர்களுக்கு அளிக்கும் வேத வெளிப்பாட்டின் மூலம்) இந்த ஞானத்தை அளித்து இதர மக்களுக்கு அதைச் சமர்ப்பித்து விடும்படி கட்டளையிட்டான்.

மூன்றாவதாக, இறைவனுடைய உண்மைத் தூதர்களை அறிந்துகொள்ள வேண்டிய பொறுப்பு இப்போது பொது மக்கள் மீது இருக்கிறது. ஒரு குறிப்பிட்ட மனிதர் உண்மையில் இறைவனுடைய மெய்யான தூதர் என்று தெரிந்துவிட்டால்,

அவர் என்ன போதனை செய்கிறாரோ அதன்மீது நம்பிக்கை கொள்ள வேண்டியதும், அவர் என்ன ஆணையிடுகிறாரோ அதை ஒப்புக்கொள்ள வேண்டியதும், அவர் எவ்வழிமுறைப் படி நடக்கிறாரோ அதைப் பின்பற்ற வேண்டியதும் பொது மக்கள் மீது கடமையாகும்.

இப்போது எல்லாவற்றுக்கும் முதலாவதாக இறைத்தூதின் உண்மை என்ன, இறைத்தூதர்களை எவ்வாறு அறிந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றி நாம் உங்களுக்கு விளக்க விரும்புகிறோம்.

**இறைத்தூதின் உண்மை:**

உலகில் மனிதனுக்கு என்னென்ன பொருள்கள் தேவையோ அவை அனைத்தையும் அல்லாஹ், தானே உருவாக்கி வைத்திருக்கிறான் என்பதைக் காண்கிறீர்கள்.

ஒரு குழந்தை பிறக்கும்போது அதற்காக எத்தனைப் பொருள் கள் கொடுக்கப்பட்டு அது உலகுக்கு அனுப்பப்படுகிறது என்பதைப் பாருங்கள்! பார்ப்பதற்காக கண்கள், கேட்பதற்காக காதுகள், நுகரவும் மூச்சுவிடவும் மூக்கு, உணர்வதற்காக மேனி முழுவதும் தொடு உணர்ச்சி, நடப்பதற்காக கால்கள், வேலை செய்வதற்காக கைகள், சிந்திப்பதற்காக மூளை ஆகியவற்றோடு இவற்றைப் போன்ற எண்ணற்ற இதர உறுப்புகளையும் அவற்றின் எல்லாத் தேவைகளையும் கருதி முன்கூட்டியே குழந்தையுடைய சின்னஞ்சிறிய உடலில் பொருத்தி வைக்கப்பட்டுள்ளன. பிறகு அது பிறந்ததும் வாழ்வதற்காக அதற்கு எவ்வாறு பொருள்கள் கிடைக்கின் றனவோ அவற்றை நீங்கள் எண்ணிப் பார்க்கவே முடியாது!

காற்று இருக்கிறது; ஒளி இருக்கிறது; வெப்பம் இருக்கிறது; நீர் இருக்கிறது; பூமி இருக்கிறது; முன்கூட்டியே தாயின் மார்பகத்தில் பால் இருக்கிறது; தாய், தந்தை, உறவினர் நெஞ்சில் மட்டுமின்றி மற்றவர் நெஞ்சிலும் அக்குழந்தைக் காக அன்பும் பாசமும் இருக்கின்றன. அவற்றால் அது வளர்த்துப் பராமரிக்கப்படுகிறது. பிறகு எவ்வளவுக் கெவ்வளவு அது வளர்கிறதோ அதன் தேவைகளை நிறைவு

*செய்வதற்காகப் பலவிதமான பொருள்களும் அதற்குக் கிடைத்துக்கொண்டே இருக்கின்றன. பூமி, வானம் ஆகிய வற்றில் உள்ள சக்திகள் யாவும் அதை வளர்ப்பதிலும், அதற்குத் தொண்டு செய்வதிலும் ஈடுபட்டிருப்பதைப்போல் தோன்றுகிறது.*

*இதற்குப்பின் மேலும் பாருங்கள்! உலகில் வேலை செய் வதற்கு எத்தனைத் திறமைகள் தேவைப்படுகின்றனவோ, அவை யாவும் மனிதர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. உடல் வலிமை, அறிவுத்தெளிவு, பேச்சுத்திறன் இன்னும் இவை போன்ற பல ஆற்றல்கள் கூடுதலாகவோ, குறைவாகவோ ஒவ் வொரு மனிதனுள்ளும் இருக்கின்றன. ஆனால் அல்லாஹ், இங்கு அற்புதமான ஏற்பாடு செய்திருக்கிறான். எல்லாத் திறமைகளையும் எல்லா மனிதர்களுக்கும் ஒரே மாதிரியாக அவன் வழங்கவில்லை. அவ்வாறு வழங்கப்பட்டிருந்தால் எவரும் எவரையும் சார்ந்திருக்க மாட்டார். மற்றொருவரைப் பொருட்படுத்தவும் மாட்டார். இதற்காக அல்லாஹ், எல்லா மக்களுடைய கூட்டான தேவைகளைக் கருதி எல்லாத் திறமைகளையும் மக்களுக்குள்ளாவே தோற்றுவித்திருக்கி றான். ஆனால் ஒருவருக்கு ஓர் ஆற்றலை அதிகமாகவும், மற்றொருவருக்கு மற்றோர் ஆற்றலைக் கூடுதலாகவும் அளித்திருக்கிறான்.*

*சிலர் மற்றவர்களைக் காட்டிலும் அதிக உடல் உழைப்புச் சக்திகளுடன் பிறக்கிறார்கள். சிலரிடம் ஒரு குறிப்பிட்ட தொழில் அல்லது கலை தொடர்பான பிறவித்திறமை காணப் படுகிறது. மற்றவர்களிடம் அது காணப்படுவதில்லை. சிலரிடம் மற்றவர்களைக் காட்டிலும் அதிக அறிவுத்திறன் காணப்படுகிறது. சிலர் பிறவிப் போர்த் தளபதிகளாயிருக்கி றார்கள். சிலரிடம் ஆட்சி செய்யும் சிறப்புத்திறன் இருக்கிறது. சிலர் அசாதாரணப் பேச்சுவன்மையுடன் பிறக்கிறார்கள். சிலரிடம் இயற்கையான எழுத்தாற்றல் காணப்படுகிறது.*

*ஒருவர் பிறக்கிறார்; அவர் மூளை கணக்கியல் ஆராய்ச்சியில் மும்முரமாக ஈடுபடுகிறது; மற்றவர்களுடைய மூளைக்கே எட்டாத அக்கலை தொடர்பான மிகவும் சிக்கலான பிரச்னை*

களையெல்லாம் அவர் எளிதாகத் தீர்த்துவிடுகிறார். மற்றொருவர் தோன்றுகிறார்; அதிசயமான பொருள்களை எல்லாம் அவர் உற்பத்தி செய்கிறார். அவருடைய படைப்பு களைக் கண்டு உலகமே பிரமிப்படைகிறது. ஒருவர், ஒப்பற்ற சட்ட அறிவுடன் தோன்றுகிறார். பல்லாண்டுகளாகச் சிந்தித்த பின்பும் மற்றவர்களுடைய அறிவுக்கே எட்டாத நுண்ணிய சட்டச் சிக்கல்களை எல்லாம் தீர்த்து வைத்து விடுகிறார். இவை யாவும் இறைவனின் அருட்கொடைகள்! ஒரு மனிதன் சுயமாகத் தனக்குள் இத்தகைய ஆற்றல்களைப் படைத்துக் கொள்ள முடியாது. கல்விப் பயிற்சிகளாலும் அவை உண்டாகிவிடா. இவையாவும் உண்மையில் பிறவி ஆற்றல் களே. இறைவன் தன் நுண்ணறிவால் இத்திறமைகளை எவருக்கு விரும்புகிறானோ அவருக்கு அளிக்கிறான்.

இறைவனின் இந்த அருட்கொடைகளைப் பற்றிச் சிந்தித் தால், மனித சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சிக்காக எந்தெந்தத் திறமைகள் மிகுதியாகத் தேவைப்படுகின்றனவோ, அவை அனைத்தும் பெரும்பாலான மக்களுக்குள் இறைவனால் அதிகமாகவே தோற்றுவிக்கப்படுகின்றன என்பதையும், எவை எந்த அளவு குறைவாகத் தேவைப்படுகின்றனவோ அவை அந்த அளவு குறைவாகவே, சில மனிதர்களுள் மட்டும் தோற்றுவிக்கப்படுகின்றன என்பதையும் நீங்கள் தெரிந்துகொள்ளலாம்.

போர் வீரர்கள் அதிகமாகப் பிறக்கிறார்கள். உழவர்கள், தச்சர்கள், கொல்லர்கள், இன்னும் இவர்களைப் போன்ற இதர தொழிலாளிகள் அதிகமாகப் பிறக்கிறார்கள். ஆனால் கல்வி, அறிவுத் திறமை படைத்தோரும், அரசியல்வாதிகள், படைத் தளபதிகள் ஆகியோருக்குரிய ஆற்றல் மிகுந்தோரும் குறை வாகவே தோன்றுகிறார்கள். ஏதாவது ஒரு குறிப்பிட்ட கலை யில் அசாதாரண வல்லமை வாய்ந்தோர் மேலும் மிகக் குறை வாகவே கிடைக்கிறார்கள். ஏனெனில் அவர்களுடைய சாத னைகள் பல நூற்றாண்டுகள் வரை நீடிப்பதால் அவர்களைப் போன்ற வேறு கலை வல்லுநர்களுடைய தேவை அதிகம் இல்லாமல் போய்விடுகிறது.

இப்போது சிந்திக்க வேண்டிய விஷயம் இதுதான்: மனித வாழ்வை வெற்றிபெறச் செய்வதற்காக, மக்களுள் பொறியியல் வல்லுநர், கணக்கியல் மேதை, விஞ்ஞானி, சட்ட நிபுணர், அரசியல் ஞானி, பொருளாதார வித்தகர் மற்றும் பல்வேறு துறைகளில் திறமை பெற்றோர் பிறக்க வேண்டியது அவசியமே. ஆனால் இவற்றுக்கும் மேலாக வேறு ஒரு தேவையும் இருக்கிறது. இவ்வுலகில் மனிதர்களுக்கு இறைவனுடைய வழியைக் காண்பிக்கக் கூடிய ஒருவர் அவசியம் என்பதே அத்தேவையாகும்.

மற்றவர்களோ இவ்வையகத்தில் மனிதனுக்காக என்ன இருக்கிறது, அதை எவ்வாறு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதை மட்டும் விளக்குபவர்களாயிருக்கிறார்கள். அதேசமயம் மனிதன் ஏன் வாழ்கிறான், உலகில் இப்பொருள்களையெல்லாம் மனிதனுக்குக் கொடுத்தது யார், இவற்றைக் கொடுத்தவனின் விருப்பம் என்ன என்பனவற்றை விளக்கக் கூடியவர்களும் இருக்க வேண்டியது அவசியம். அப்போதுதான் மனிதன் அதற்கேற்ப வாழ்ந்து உலகில் உறுதியான நிலையான வெற்றியைப் பெற இயலும். இதுதான் மனிதனுக்கு மிகவும் அடிப்படையான, இன்றியமையாத, எல்லாவற்றுக்கும் மேலான தேவையாகும்.

எந்த இறைவன் நமது சின்னஞ்சிறு தேவைகளையெல்லாம் நிறைவு செய்ய ஏற்பாடு செய்துள்ளானோ அவன் இத்தகைய முக்கியமான தேவையை நிறைவு செய்வதில் அலட்சியமாயிருந்திருப்பான் என்று எண்ணவே அறிவு மறுக்கிறது. இல்லை; அவ்வாறு ஒருபோதும் இல்லை. இறைவன் எவ்வாறு ஒவ்வொரு தொழிலிலும், ஒவ்வொரு கல்வி-கலையிலும் தனித் திறமை பெற்றவர்களைப் படைத்திருக்கிறானோ அதைப் போலவே சுயமாக இறைவனை அறியும் சிறப்பான ஆற்றல் பெற்றிருந்த மனிதர்களையும் படைத்தான். அவர்களுக்குத் தன்னிடமிருந்து மார்க்கம், ஒழுக்கம், மார்க்கச் சட்டதிட்டங்கள் பற்றிய அறிவை வழங்கி மற்றவர்களுக்கு இவை பற்றி போதிக்கும் பணியில் அவர்களை நியமித்தான். அத்தகையவர்கள்தாம் நபி, ரசூல் அல்லது பைகம்பர் என்று கூறப்படுகிறார்கள்.

## இறைத்தூதரை அறிதல்:

எவ்வாறு கல்வி, கலை ஆகியவற்றில் ஆற்றல் படைத்தவர்களில் சிலர் குறிப்பிடத்தக்க விழுமிய அறிவுடனும், சிறப்பியல்புடனும் பிறக்கிறார்களோ, அவ்வாறே இறைத் தூதர்களும் குறிப்பிடத்தக்க சிறப்பியல்புடன் தோன்றுகிறார்கள்.

ஒரு பிறவிப் பெருங்கவிஞனின் கவிதையைக் கேட்ட மாத்திரத்தில் அவன், குறிப்பிடத்தக்க கவித்திறனுடன் பிறந்திருக்கிறான் என்று நாம் தெரிந்துகொள்கிறோம். மற்றவர்கள் எவ்வளவு முயன்றபோதிலும் அத்தகைய கவிதையைப் புனைய முடியாது. இதைப் போலவே ஒரு பிறவிப் பேச்சாளர், ஒரு பிறவி எழுத்தாளர், ஒரு பிறவி விஞ்ஞானி, ஒரு பிறவித் தலைவர் ஆகியோரும் அவர்களுடைய சாதனைகளால் தெளிவாகப் புரிந்துகொள்ளப்படுகிறார்கள். ஏனெனில் அவர்களுள் ஒவ்வொருவரும் தமது சாதனை மூலம் மற்றவர்களுள் காணப்படாத அசாதாரணத் திறமையை வெளிப்படுத்துகிறார். இத்தகைய நிலையே ஓர் இறைத் தூதருடையதுமாகும்.

அவருடைய அறிவில், மற்ற மக்களுடைய சிந்தனையில் தப்பித் தவறியும் தோன்றாத விஷயங்கள் உதிக்கின்றன. அவர்களைத் தவிர மற்றவர்கள் விளக்க முடியாத விஷயங்களை எல்லாம் அவர் விளக்குகிறார். பல்லாண்டுகால சிந்தனைக்குப் பின்பும் மற்றவர்களுடைய பார்வைக்கு எட்டாத நுண்ணிய விஷயங்கள் அவர் பார்வைக்கு எட்டிவிடுகின்றன. அவர் எதைக் கூறுகிறாரோ அதை, நமது அறிவு ஒப்புக் கொள்கிறது. அவசியம் அப்படித்தான் இருக்க வேண்டும் என்று நமது மனம் சான்று கூறுகிறது. உலக அனுபவங்கள், பிரபஞ்சத்தில் காணப்படும் அத்தாட்சிகள் ஆகியவற்றால் அவருடைய ஒவ்வொரு சொல்லும் உண்மை என்று நிரூபணமாகிறது.

அத்தகைய விஷயத்தை நாம் எவ்வளவு முயன்றாலும் சொல்லவே முடியாது. மேலும் அவர் ஒவ்வொரு விவகாரத்திலும் உண்மை, நேர்மை, கண்ணியம் நிறைந்த வழிமுறை

யையே பின்பற்றுகிறார். அவருடைய இயல்பு அவ்வளவு தூய்மையானது. அவர் ஒருபோதும் தவறான விஷயத்தைக் கூறுவதில்லை. தீய செயலைச் செய்வதில்லை. எப்போதும் நன்மை, நேர்மை பற்றிய போதனைகளே செய்கிறார். மற்றவர்களுக்கு எதைப் போதிக்கிறாரோ அதன்படியே தாமும் வாழ்ந்து காட்டுகிறார். தாம் சொன்ன விஷயத்துக்கு மாறாக நடந்து கொண்டதாக ஒரு சிறு எடுத்துக்காட்டும் அவர் வாழ்வில் காணக்கிடைப்பதில்லை. அவருடைய சொல்லிலோ, செயலிலோ எந்த விதமான சுயநலமும் இருப்ப தில்லை. அவர் மற்றவர்களுடைய நன்மைக்காகத் தாமே கஷ்டப்படுகிறார்; நஷ்டப்படுகிறார். தம்முடைய நலனுக்காகப் பிறருக்கு நஷ்டம் விளைவிப்பதில்லை. அவர் வாழ்வு முழுவதும் உண்மை, கண்ணியம், தூய இயல்பு, உயர்ந்த சிந்தனை, மேலான மனிதத் தன்மை ஆகியவற்றின் முன்மாதிரி யாக விளங்குகிறது. துருவித் துருவி ஆராய்ந்தாலும் அந்த வாழ்வில் எத்தகைய சிறுகளங்கமும் காணப்படுவதில்லை. இத்தகைய விஷயங்களைக் கண்டு இவர் இறைவனின் உண்மைத்தூதர் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

**இறைத்தூதருக்குக் கீழ்ப்படிதல்:**

குறிப்பிட்ட ஒருவர், இறைவனின் தூதர் என்று தெரிந்து அவர் சொல்லை ஒப்புக்கொள்வதும், அவருக்குக் கீழ்ப்படிவதும், அவருடைய வழிமுறையைப் பின்பற்றுவதும் அவசியமாகும். ஒருவரை இறைத்தூதர் என்று ஒப்புக்கொண்ட பின்பும் அவர் சொல்லை ஒப்புக் கொள்ளாதிருத்தல் அறிவுடைமையாகாது. ஏனெனில் இறைத்தூதர் என்று ஒப்புக் கொள்வதன் பொருள் அவர் கூறுவன யாவும் இறைவனின் சார்பாகக் கூறப்படுவன; அவர் செய்வன யாவும் இறைவனின் விருப்பப்படிச் செய்யப்படுவனவாகும். பிறகு நீங்கள் அவருக்கு எதிராகப் பேசுவதோ, நடந்துகொள்வதோ இறைவனுக்கே எதிராகப் பேசுவதும், நடந்து கொள்வதுமாகும்.

எந்த விஷயம் இறைவனுக்கு எதிரானதோ அது ஒருபோதும் உண்மையானதாகவோ, சத்தியமானதாகவோ இருக்க முடியாது. ஆகையால் ஒருவரை இறைத்தூதர் என்று ஏற்றுக்

கொண்டபின், அவர் கூறுவதில் உள்ள விவேகமும் நன்மையும் உங்களுக்குப் புரிந்தாலும், புரியாவிட்டாலும் அவர் சொல்லை ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும். ஏன் எதற்கு எனும் கேள்விகள் இன்றியே அச்சொல்லை ஒப்புக் கொள்ள வேண்டியதும் அவருடைய கட்டளைகளுக்கு முன் சிரம் சாய்த்துவிட வேண்டியதும் உங்களுக்குக் கடமையாகி விடுகிறது.

ஒரு விஷயம் இறைத்தூதரின் மூலம் வந்தது என்றால், அது இறைத்தூதரின் மூலம் வந்தது என்பதே 'அது உண்மையானது - எல்லா விவேகங்களும் சிறப்புகளும் நிறைந்தது' என்பதற் குப் போதிய ஆதாரமாகும். உங்கள் அறிவுக்கு அவர் கூறும் விஷயத்தில் உள்ள உண்மை புரியாவிட்டால், அவ்விஷயத் தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்று பொருளல்ல. உங்கள் அறிவில்தான் ஏதோ கோளாறு என்று பொருள்.

ஒரு கலையிலும் நிபுணத்துவம் பெறாத ஒருவன், எந்தக் கலையின் நுணுக்கங்களையும் புரிந்துகொள்ள முடியாது. அவ்வாறு தான் அறிந்துகொள்ள முடியவில்லை எனும் காரணத்துக்காக அக்கலை வல்லுநனின் பேச்சை ஒப்புக் கொள்ளாமல் போனால் அவன் எவ்வளவு முட்டாளாயிருக்க வேண்டும்! இவ்வுலகின் ஒவ்வொரு செயலிலும், அச்செய லில் தேர்ச்சி பெற்றவரின் தேவை ஏற்படுகிறது. அந்தத் தேர்ச்சியாளரை நாடியபின் அவர்மீது முழு நம்பிக்கை வைக்கப்படுகிறது. பிறகு அவருடைய வேலையில் எல்லா ரும் தலையிடுவதில்லை. ஏனெனில் எல்லாரும் எல்லா வேலையிலும் நிபுணர்களாயிருக்கவும் முடியாது. உலகில் உள்ள எல்லாவற்றையும் புரிந்துகொள்ளவும் முடியாது. நீங்கள் உங்களுடைய முழு அறிவையும் தெளிவையும் ஒரு மிகச் சிறந்த கலை வல்லுநரைத் தேடுவதில் மட்டுமே செல விட வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட கலை வல்லுநரைக் குறித்து அவர் அக் கலையில் சிறந்த மேதை என்று உங்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால், அவர்மீது நீங்கள் முழு நம்பிக்கை கொள்ளவேண்டும். பிறகு அவருடைய செயலில் தலையிடு

வதோ, ஒவ்வொரு விஷயம் குறித்தும் 'எங்களுக்கு முதலில் புரியச் செய்யுங்கள்; இல்லையானால் நாங்கள் நம்ப மாட்டோம்' என்று கூறுவதோ அறிவுடைமையாகாது என்பது மட்டுமில்லை; முற்றிலும் முட்டாள்தனமுமாகும்.

ஏதாவது ஒரு வழக்குரைஞரிடம் வழக்கைச் சமர்ப்பித்தபின், அவரிடம் குறுக்கீடுகள் செய்து வீண் வாதம் செய்தால் அவர் உங்களைத் தம்முடைய அலுவலகத்திலிருந்து வெளியேற்றி விடுவார். ஒரு மருத்துவரிடம் நீங்கள் அவருடைய ஒவ்வோர் ஆலோசனைக்கும் ஆதாரம் கேட்டால், அவர் உங்களுக்கு மருத்துவம் செய்வதை விட்டுவிடுவார். மார்க்க விவகாரமும் இத்தகையதேயாகும்.

உங்களுக்கு இறைஞானம் பெறவேண்டிய அவசியம் இருக்கிறது. இறைவனின் விருப்பத்துக்கு இணங்க வாழவேண்டிய வழிமுறை எது என்பதை நீங்கள் அறிய விரும்புகிறீர்கள். நீங்கள் சுயமாக அவற்றையெல்லாம் அறிந்து கொள்வதற்கு வழியில்லை. இந்நிலையில் உண்மையான இறைத்தூதரைத் தேடிக்கொள்ள வேண்டியது உங்கள் கடமையாகும். இச்செயலில் நீங்கள் மிகக் கவனத்துடனும் நன்கு சிந்தித்தும் செயல்பட வேண்டும். ஏனெனில் நீங்கள் தவறான ஒருவரை இறைத்தூதர் என்று தெரிவு செய்துவிட்டால் அவர் உங்களைத் தவறான வழியில் செலுத்திவிடுவார். நீங்கள் நன்கு சிந்தித்து உணர்ந்து ஆராய்ந்தபின், குறிப்பிட்ட ஒருவர் இறைவனின் உண்மையான தூதர் எனும் உறுதியான நம்பிக்கை பிறந்துவிட்டால், நீங்கள் அவர்மீது முழுநம்பிக்கை கொள்ள வேண்டும்! அவருடைய ஒவ்வோர் ஆணைக்கும் கீழ்ப்படிய வேண்டும்.

### இறைத்தூதர்கள் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ளவேண்டிய அவசியம்:

இறைவனின் சார்பாக அவனுடைய தூதர் காட்டும் வழியே இஸ்லாத்தின் உண்மையான நேரியவழி என்று தெரிந்துவிட்டால் அந்த இறைத்தூதர் மீது நம்பிக்கை கொள்வதும், அவருக்குக் கீழ்ப்படிந்து அவரைப் பின்பற்றுவதும் எல்லா

மனிதர்களுக்கும் அவசியமாகும்; எவர் இறைத்தூதரின் வழிமுறையை விடுத்துத் தம்முடைய சொந்த அறிவைக் கொண்டு ஒரு வழிமுறையை வகுக்கிறாரோ அவர் நிச்சயமாக வழிதவறியவராவார்; இவற்றை நீங்களே உணர்ந்து கொள்ளலாம்.

இந்த விஷயத்தில் மக்கள் விசித்திரமான தவறுகளைச் செய்கிறார்கள். சிலர் இறைத்தூதரின் நேர்மையை ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால் அவர்மீது நம்பிக்கை (ஈமான்) கொள்வதுமில்லை; அவரைப் பின்பற்றுவதுமில்லை. இத்த கையவர்கள் இறைவனை நிராகரிப்பவர்கள் மட்டுமல்லர், முட்டாள்களும் ஆவர். இறைத்தூதரை உண்மையான இறைத் தூதர் என்று ஏற்றுக்கொண்டபின்பும் அவரைப் பின்பற்றா திருந்தால் மனிதன் தெரிந்தும், வேண்டும் என்றே பொய்யை-அசத்தியத்தைப் பின்பற்றுகிறான் என்று பொருளாகும். இதைக் காட்டிலும் கேவலமானது வேறு ஒன்றும் இல்லை என்பது வெளிப்படை.

''இறைத்தூதரைப் பின்பற்ற வேண்டிய அவசியமே நமக்கு இல்லை. நாமே நம் அறிவைக் கொண்டு நேரிய வழியைக் கண்டுபிடித்துக்கொள்வோம்'' என்று சிலர் கூறுகிறார்கள். இதுவும் மிகப்பெரிய தவறாகும்.

வடிவக்கணிதம் (Geometry) படித்திருக்கிறீர்கள். ஒரு புள்ளியி லிருந்து மற்றொரு புள்ளிவரை நேர்கோடு ஒன்றுதான் இருக்க முடியும் என்பதை அறிவீர்கள். அதைத் தவிர வேறு எத்தனை கோடுகளைக் கிழித்தாலும், அவை யாவும் கோணலாக இருக்கும் அல்லது அந்த இரண்டாவது புள்ளிவரை போய்ச் சேராது. சத்திய வழியின் இயல்பும் இதைப் போன்றதே. அது இஸ்லாத்தின் மொழியில் 'ஸிராத்தே முஸ்தஃகீம்' (நேரிய பாதை) என்று கூறப்படுகிறது. இந்தப் பாதை மனிதனி லிருந்து தொடங்கி இறைவன் வரை போய்ச் சேருகிறது. வடிவக் கணிதத்தின் விதிகளின்படி இதுவும் ஒரே வழியாகத் தான் இருக்க முடியும். இதைத்தவிர வேறு எத்தனை வழிகள் இருந்தாலும் அவை யாவும் கோணல் பாதைகளாகவே இருக் கும் அல்லது இறைவன் வரை போய்ச் சேராதனவாயிருக்கும்.

இப்போது சிந்தியுங்கள்! நேரிய பாதை எதுவோ அதை இறைத்தூதர் காட்டிவிட்டார். அதைத் தவிர வேறு எந்தப் பாதையும் ஸிராத்தே முஸ்தகீம்-நேரிய வழி அல்லவே அல்ல. இப்பாதையை விடுத்து வேறு பாதையை எவர் தேடிக் கொள்கிறாரோ அவருக்கு இரண்டு நிலைமைகளில் ஏதாவது ஒன்று அவசியம் ஏற்படும். ஒன்று அவருக்கு இறைவன் வரை போய்ச் சேரும் பாதை அறவே கிடைக்காது. ஒருகால் கிடைத்தாலும் மிகவும் சுற்றுப்பாதையாகவே அது இருக்கும். அது நேர்வழியாக நிச்சயம் இருக்காது. கோணல் வழியாகத் தான் இருக்கும்.

முதல் நிலைமையில் அவருக்கு அழிவு நிச்சயம். இரண்டாவது நிலைமையில் அவரின் செய்கை மடமையானது ஆகும் என்பதில் ஐயமில்லை. பகுத்தறிவு இல்லாத பிராணிகூட ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்வதற்காகக் கோணல் வழியை விடுத்து, நேர்வழியையே கடைப்பிடிக்கிறது. அவ்வாறு இருக்கையில், இறைவனின் ஒரு நல்லடியார் நேர்வழியைக் காண்பிக்கும்போது, அதை விடுத்து ‘இல்லை, நான் நீங்கள் காட்டும் பாதையில் போகமாட்டேன். கோணல் வழியில் நடந்து தட்டுத் தடுமாறிப் போய்ச் சேர வேண்டிய இடத்தைக் கண்டுபிடித்துக் கொள்வேன்’ என்று ஒருவன் கூறினால் அவனைப்பற்றி நீங்கள் என்ன கூறுவீர்கள்?

மேற்போக்காகப் பார்த்தாலும் எந்த மனிதனும் புரிந்து கொள்ளக்கூடிய விஷயம் இது. நீங்கள் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் எவன் இறைத்தூதர் மீது ஈமான் கொள்ளவில்லையோ அவனுக்கு இறைவன் வரை போய்ச் சேரும் நேர் பாதையும் கிடைக்காது; கோணல் பாதையும் கிடைக்காது-எந்தப் பாதையும் கிடைக்காது என்பதை அறிந்து கொள்வீர்கள்.

எவன் ஒருவன் உண்மை மனிதரின் பேச்சை ஒப்புக் கொள்ள மறுக்கிறானோ, அவன் மூளையில் சத்தியத்தைப் புறக்கணிக்கக்கூடிய அளவு ஏதோ கோளாறு நிச்சயமாக இருக்க வேண்டும் அல்லது அவன் நெஞ்சில் இறுமாப்பு இருக்க வேண்டும்; அல்லது அவனுடைய இயல்பு

நல்லவற்றையும், நேர்மையானவற்றையும் ஒப்புக்கொள்ளத் தயாராயிராத கோணலான ஒன்றாக இருக்க வேண்டும்; அல்லது அவன் மூதாதையரைக் கண்மூடிப் பின்பற்று பவனாயிருக்க வேண்டும்; அல்லது பண்டைக்காலம் தொட்டு இருந்துவரும் சடங்குகளைப் போன்ற தவறான விஷயங்களுக்கு எதிராக எதையும் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லாதவனாயிருக்க வேண்டும்; அல்லது அவன் தன் மன இச்சைகளின் அடிமையாயிருக்க வேண்டும். அல்லது இறைத்தூதரின் போதனைகளை ஒப்புக்கொண்ட பின் பாவங்களும், ஒவ்வாத காரியங்களும் செய்யச் சுதந்திரம் இருக்காதே என்பதற்காக இறைத்தூதரின் போதனைகளை மறுப்பவனாயிருக்க வேண்டும்.

இக்காரணங்களுள் ஏதாவது ஒன்றேனும் ஒரு மனிதனிடம் இருந்தாலும் அவனுக்கு இறைவழி கிடைப்பது சாத்தியமே இல்லை. இவற்றுள் ஒரு காரணமும் இல்லாவிட்டால் ஓர் உண்மையுள்ள, குரோதமற்ற நன்மகன், ஓர் உண்மை இறைத் தூதரின் போதனைகளை ஏற்க மறுப்பது சாத்தியமில்லை.

எல்லாவற்றுக்கும் மேலான விஷயம் என்னவெனில், இறைத்தூதர் இறைவனால் அனுப்பப்பட்டவராவார். 'அவர் மீது நம்பிக்கை கொள்ளுங்கள்; அவருக்குக் கீழ்ப்படியுங்கள்' என்பது இறைவனின் கட்டளையேயாகும். எவன் இறைத்தூ தரின் மீது நம்பிக்கை கொள்ளவில்லையோ அவன் இறைவ னுக்கு எதிராகப் புரட்சி செய்கிறான்.

ஓர் எடுத்துக்காட்டைப் பாருங்கள்! நீங்கள் எந்த அரசின் குடிமகனாயிருக்கிறீர்களோ, அதன் சார்பாக எந்த அதிகாரி நியமிக்கப்பட்டாலும் நீங்கள் அவருக்குக் கீழ்ப்படிய வேண்டியிருக்கும். அவரை அதிகாரியாக ஒப்புக்கொள்ள நீங்கள் மறுத்தால் அரசுக்கே எதிராகப் புரட்சி செய்வதாகத் தான் அர்த்தமாகும். அரசை ஒப்புக்கொள்வதும், அது நியமிக்கும் அதிகாரியை ஒப்புக் கொள்ளாதிருப்பதும் முரண்பட்ட செயல்களாகும். இதைப் போன்ற எடுத்துக் காட்டே இறைவனைப் பற்றியதும், அவனால் அனுப்பப் பட்ட தூதரைப் பற்றியதுமாகும்.

இறைவன், மக்கள் அனைவருடைய உண்மை அரசனாவான். அவன் எந்த மனிதரை மக்களிடம் போதனைக்காக அனுப்பி யிருக்கிறானோ, எவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கும்படிக் கட்டளையிட்டிருக்கிறானோ, அவரை இறைத்தூதர் என்று ஏற்றுக்கொள்ள வேண்டியதும், மற்றவர்களைப் பின்பற்று வதை விடுத்து அவரை மட்டும் பின்பற்ற வேண்டியதும் ஒவ் வொரு மனிதரின் கடமையாகும். இவற்றை நிராகரிப்பவன் இறை மறுப்பாளனாவான்; அவன் இறைவனை நம்பினா லும் சரி, நம்பாவிட்டாலும் சரி!

**இறைத்தூதின் சுருக்கமான வரலாறு:**

மனித வர்க்கத்தில் இறைத்தூதின் தொடர் எவ்வாறு ஆரம்ப மாயிற்று. எவ்வாறு முன்னேறிக் கொண்டே வந்து ஓர் இறுதி யான, மிகப்பெரிய இறைத்தூதருடன் முடிவு பெற்றது என் பதை இப்போது நாம் காண்போம்.

எல்லாருக்கும் முதலாவதாக அல்லாஹ், ஒரு மனிதரைப் படைத்தான். பிறகு அதே மனிதரிலிருந்து அவருடைய இணையைப் படைத்தான். பிறகு அந்த இணையிலிருந்து அவர்களுடைய சந்ததியைப் படைத்தான்.* அச்சந்ததியினர் எண்ணற்ற நூற்றாண்டுகளாக வளர்ந்து, பல்கி உலகம் முழுவதும் பரவினர். இத்தரணியில் எத்தனை மனிதர்கள் பிறந்தார்களோ அவர்கள் அனைவரும் அந்த ஆதி மனிதர் களின் வழித்தோன்றல்களேயாவர். மனித குலத்தின் தொடக்கம் ஒரே மனிதரால்தான் ஆயிற்று என்று எல்லாச் சமூக, மத, வரலாற்று மரபுகளும் (Tradition) ஒருமுகமாக ஏற்றுக்கொள்கின்றன. விஞ்ஞான ஆராய்ச்சிகளாலும்

---

* இது ஒரு மிக முக்கியமான – மிகப் புரட்சிகரமான சித்தாந்தமாகும். மனித இனம் அனைத்தும் ஒன்று; மனிதர்கள் அனைவருமே சமம் என்பதுதான் அந்தச் சித்தாந்தத்தின் தர்க்கரீதியான முடிவு. வர்க்கம், மொழி, இனம், நாடு, மதம் ஆகியவற்றின் அடிப்படையில் மனித குலத்தைப் பாகுபடுத்துவதும் வேறுபடுத்துவதும் மூடத்தனமாகும். தேசிய உணர்வு, குறுகிய இனவெறி, இரத்தம் குடிக்கும் சமூக விரோத வெறி ஆகியவை உலகைத் துண்டு துண்டாகச் சிதறடித்திருக்கும் இந்தக் காலத்தில், மனித குலம் அனைத்தும் ஒன்று எனும் இந்தச் சித்தாந்தம்தான் வருங்கால நம்பிக்கைக்கு ஒரு வலுவுள்ள ஒளிக்கதிராகத் திகழ்கிறது.

பூமியின் பல்வேறு பகுதிகளில் தனித்தனியாக மனிதர்கள் படைக்கப்பட்டார்கள் என்று நிரூபணம் ஆகவில்லை. மாறாக, முதலில் ஒரே ஒரு மனிதன்தான் பிறந்திருக்க வேண்டும் என்றும், தற்போதும் இத்தரைமீது எங்கெங்கு மனிதகுலம் காணப்படுகிறதோ அது அந்த ஒரே மனிதனின் சந்ததியே என்றும் பெரும்பாலான விஞ்ஞான அறிஞர்களும் ஊகிக்கிறார்கள்.

அரபி மொழியில் அந்த முதல் மனிதரை 'ஆதம்' (அலை) என்று கூறுகிறோம். ஆதம் (அலை) அவர்களையே அல்லாஹ், முதல் தூதராய் நியமித்தான். தம்முடைய சந்ததியினருக்கு இஸ்லாத்தின் போதனைகளை அளிக்கும்படியும் அவருக்கு ஆணையிட்டான். அதாவது அவர், தமது சந்ததியினருக்கு உங்களுடையஇறைவனும், இத்தரணியுடைய இறைவனும் ஒருவனே; அவனையே நீங்கள் வணங்குங்கள், அவனுக்கே சிரம் சாயுங்கள்; அவனிடமே உதவி கோருங்கள்; அவனுடைய விருப்பத்துக்கு இணங்க இப்பூமியில் நீதியுடனும் நேர்மையுடனும் வாழுங்கள். இவ்வாறு நடந்துகொண்டால் உங்களுக்கு நல்ல வெகுமதி கிடைக்கும்; இறைவனுக்குக் கீழ்ப்படியாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டால் கடுமையான தண்டனை பெறுவீர்கள்' என்று விளக்கும்படியும் பணித்தான்.

ஆதம் (அலை) அவர்களின் சந்ததியினரில் நன்மக்கள், தம்முடைய தந்தை காட்டிய நேர்வழியில் நடந்து வந்தார்கள். கெட்டவர்கள் அந்நேர்வழியைக் கைவிட்டுவிட்டார்கள். நாளடைவில் விதவிதமான சீர்கேடுகள் தோன்றின. சிலர், சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் பூஜிக்கத் தொடங்கினார்கள். சிலர் மரங்களையும் மிருகங்களையும் நதிகளையும் வணங்கத் தொடங்கினார்கள். மற்றும் சிலரோ, காற்று, நீர், நெருப்பு, நோய், உடல் நலம் மற்றும் இறைவன் அருளிய அருட்கொடைகளுக்கும், சக்திகளுக்கும் தனித்தனித் தெய்வங்கள் இருக்கின்றன; அவர்கள் ஒவ்வொருவரையும் வணங்க வேண்டும்; அப்போதுதான் அனைவரும் மகிழ்ச்சி யுற்று அருள் செய்வார்கள் என்று எண்ணத் தொடங்கினார் கள். இவ்வாறு அறியாமையின் காரணமாக இறைவனுக்கு

இணைவைத்தலும், பலவிதமான உருவ வழிபாடுகளும் தொடங்கின. அக்காரணத்தால் பல மதங்கள் தோன்றத் தொடங்கின.

அக்காலத்தில் ஆதம் (அலை) அவர்களின் சந்ததியினர் உலகின் பல்வேறு பகுதிகளிலும் பரவியிருந்தனர்; பல்வேறு சமூகங்கள் உருவாகியிருந்தன. ஒவ்வொரு சமூகமும் தனக்கென ஒரு புதிய மதத்தை உண்டாக்கிக் கொண்டது. ஒவ்வொரு சமூகத் தாருடைய சடங்குகளும் வெவ்வேறாயிருந்தன. இறைவனை மறந்தது மட்டுமன்றி ஆதம் (அலை) அவர்கள் தம் சந்ததி யினருக்கு அளித்திருந்த சட்டத்தையும் மறந்தார்கள். மன இச்சைகளைப் பின்பற்றத் தொடங்கினார்கள். பலவிதமான அறியாமை மிக்க எண்ணங்கள் பரவின. நன்மை தீமையைப் பகுத்தறிவதில் தவறுகள் இழைக்கப்பட்டன. கெட்டவை பலவும் நல்லவையாக கருதப்பட்டன. நல்லவை பல கெட்டவை என்று முடிவு செய்யப்பட்டன.*

---

* மதங்களின் வரலாறு பற்றிய இந்த இஸ்லாமியக் கண்ணோட்டம், அறிவு வளர்ச்சிக்கேற்ப படிப்படியாக மதங்கள் ஏற்பட்டன (Evolutionary View of Religion) எனும் சித்தாந்தக் கண்ணோட்டத்திற்கு முற்றிலும் வேறுபட்டது. இறைவழிபாட்டின் முதல் கட்டமாக இயற்கை வழிபாடுகள் இருந்தன என்பது இரண்டாவதாக கூறிய கண்ணோட்டத்தின் வாதமாகும். இயற்கை வழிபாடே ஆதி வழிபாடு என்று கூறுவோர், பழங்கால மக்களிடையே இயற்கை வழிபாடு இருந்து வந்தது என்பதற்கான தெளிவான ஆதாரங்களைக் கண்டதும் தங்களுடைய ஆராய்ச்சியை அந்த இடத்தி லேயே நிறுத்திக் கொள்கின்றனர். அதற்கும் முற்பட்ட ஆதிகாலத்தில் என்ன நிலை இருந்து வந்தது என்பதைக் கண்டறிய அவர்கள் முற்படுவதில்லை. அது பற்றிய அவர்களுடைய கருத்து குளறுபடியாகவே இருக்கிறது. ஆனால், ஆதி முதலில் ஒரே இறைவனை வணங்கும் வழிபாட்டு முறை தான் மக்களிடையே இருந்து வந்தது என்றும், மற்ற முறைகளெல்லாம் அதன்பிறகு காலப்போக்கில் மாறியவை என்றும் அண்மைக்கால விஞ்ஞான ஆராய்ச்சிகள் உறுதிப்படுத்துகின்றன. இதைப் பற்றி மேலும் ஆராய விரும்புவோர் கீழ்க்கண்ட நூலைப் படிக்கலாம்:

*'The Origin Growth of Religions'*
*By Professor W. Schmidt*
ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர்:
*H.J. Rose (London, Methuen)*

இச்சந்தர்ப்பத்தில் அல்லாஹ் ஒவ்வொரு சமூகத்திற்கும் தன் தூதர்களை அனுப்ப முற்பட்டான். முதன் முதலாக ஆதம் (அலை) அவர்கள் மக்களுக்குச் செய்த அதே இஸ்லாமிய போதனைகளையே அத்தூதர்களும் செய்யத் தொடங்கினார்கள். அவர்கள் தத்தம் சமுதாயத்தினர் மறந்துவிட்ட பாடத்தை நினைவூட்டினார்கள். ஒரே இறைவனையே வணங்கக் கற்பித்தார்கள். இறைவனுக்கு இணைவைத்தலிலிருந்தும் சிலை வணக்கத்திலிருந்தும் தடுத்தார்கள். இறைவனின் விருப்பத்துக்கு ஏற்ப வாழும் முறையைக் கற்பித்தார்கள். சரியான சட்டங்களை எடுத்துக்காட்டி அவற்றைப் பின்பற்றும்படி போதித்தார்கள். இந்தியா, சீனா, பாரசீகம், இராக், எகிப்து, ஆஃப்ரிக்கா, ஐரோப்பா உட்பட உலகில் உள்ள எந்த நாடாயினும் சரி, இறைவனிடமிருந்து அவனுடைய உண்மைத் தூதர்கள் வராத நாடே இல்லை. அவர்கள் எல்லாரும் போதித்த மார்க்கம் ஒன்றேயாகும்.

நாம் இப்போது ‘இஸ்லாம்’ என்று பெயரிட்டு அழைக்கிறோமே அதையே அவர்களும் போதித்தார்கள்.* ஆனால் போதனை முறைகளும், வாழ்க்கைச் சட்டங்களும் (அக்காலத்தில் அந்த அந்தச் சமுதாயத்துக்கு தேவையானவாறு) கொஞ்சம் மாறுபட்டிருந்தன. எச்சமுதாயத்தில் எவ்வித அறியாமை மிகுதியாகப் பரவியிருந்ததோ அதை அகற்றுவதற்கு அதிக அழுத்தம் கொடுக்கப்பட்டது. எத்தகைய தவறான கருத்துகள் வேரூன்றியிருந்தனவோ அவற்றைக் களைய அதிகக் கவனம்

---

* மேற்கத்திய எழுத்தாளர்களிடையே தவறான கருத்து ஒன்று சாதாரணமாக நிலவிவருகிறது. முஹம்மத் (ஸல்) அவர்கள்தாம் இஸ்லாத்தைக் கொண்டுவந்தார்கள் என அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். முஹம்மத் (ஸல்) அவர்களை ‘இஸ்லாத்தின் நிறுவனர்’ என்று கூறும் அளவுக்குக்கூட, அவர்களில் சிலர் சென்றுவிடுகின்றனர். இது உண்மைக்கு முரணானது. இறைவனின் தூதர்கள் எல்லாருக்குமே இஸ்லாம்தான் மார்க்கமாக இருந்து வந்தது. அவர்கள் எல்லாருமே இறைவனிடமிருந்து இதே செய்தியைத்தான் கொண்டு வந்தார்கள். இறைவனுடைய தூதர்கள் இஸ்லாத்தின் நிறுவனர்களாய் என்றுமே இருந்ததில்லை. அவர்கள் அதன் தூதுவர்களாய் மட்டுமே இருந்தார்கள். உண்மையான இறைத்தூதர்கள் மூலம் மனித குலத்திற்காக இறைவனால் அருளப்பெற்ற போதனைகளைக் கொண்டதுதான் இஸ்லாம்.

செலுத்தப்பட்டது. நாகரிகம், சமூக உறவு (Social inter-course), கல்வி, அறிவு முதலியவற்றில் அப்போது சமூகங்கள் தொடக்க நிலையில் இருந்ததால் அவற்றுக்குச் சாதாரணப் போதனையும், சாதாரண மார்க்கச் சட்டங்களும் அருளப் பட்டன. சமூகங்கள் முன்னேற முன்னேறப் போதனைகளும் மதச்சட்டங்களும் விரிவுபடுத்தப்பட்டு வந்தன. அவற்றில் வெறும் வெளிப்படையான முரண்பாடுகளே காணப் பட்டன. ஆனால் அனைத்தின் உயிரும் ஒன்றே, அதாவது ஒரே இறைவனைப் பற்றிய கொள்கை, நற்செயல்கள், சாந்தி வழிச் செல்லுதல், மறுமையில் பெறப்போகும் வெகுமதி, தண்டனை பற்றிய நம்பிக்கை ஆகியவை ஒன்றாகவே இருந்தன.

இறைத்தூதர்களோடும் மனிதன் விசித்திரமாகவே நடந்து கொண்டான். முதலில் அவர்கள் பல இன்னல்களுக்கு ஆளாக்கப்பட்டார்கள்; அவர்களுடைய போதனைகள் நிராகரிக்கப்பட்டன; சிலர் நாட்டை விட்டு வெளியேற்றப் பட்டனர்; சிலர் படுகொலை செய்யப்பட்டனர்; சிலர் தம் வாழ்வு முழுவதும் மக்களுக்குப் போதனையும், பயிற்சியும் அளித்த பின்பும் அவர்களைப் பின்பற்றியோர் ஐந்து அல்லது பத்து என்ற எண்ணிக்கையில்தான் இருந்தனர். ஆனால், இறைவனின் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த நல்லடியார்கள், தொடர்ந்து தங்கள் பணியைச் செய்து வந்தனர். நாளடைவில் அவர்களுடைய போதனைகள் பலனளித்தன. மிகப் பெரிய சமுதாயங்கள் அவர்களைப் பின்பற்றத் தொடங்கின. அதற்குப் பின்பு மக்கள் வழி தவறியதால், புதிய திருப்பம் ஏற்பட்டது.

இறைத்தூதர்களின் மரணத்திற்குப்பின் அவர்களைப் பின் பற்றியவர்கள் அவர்களுடைய போதனைகளை மாற்றியமைத் தார்கள். அவர் தந்த வேத நூல்களில் தாங்களாகவே பல்வேறு கருத்துகளைக் கலந்துவிட்டார்கள். வணக்கங்களில் புதிய புதிய முறைகளைக் கடைப்பிடித்தார்கள். மற்றும் சிலரோ இறைத்தூதர்களையே வணங்கத் தலைப்பட்டார்கள். சிலர், தங்கள் இறைத் தூதரைக் கடவுளின் அவதாரம் என்று முடிவு

கட்டினார்கள். (அதாவது கடவுள் மனித உருவில் இறங்கி வருவதாக நினைத்தார்கள்.) சிலர், இறைத்தூதரைக் கர்த்தரின் மகன் என்றனர். சிலர் தங்கள் இறைத்தூதரை இறைமையில் இணையாக்கினர்.

எவர்கள் சிலைகளைத் தகர்த்தார்களோ அவர்களையே சிலைகளாக்கி மனிதன் அவர்கள் மீது விந்தைமிகு கொடுமைகளை இழைத்தான். பிறகு எந்த மதச் சட்டங்களை இறைத்தூதர்கள் தங்களைப் பின்பற்றுவோருக்கு வழங்கினார்களோ அவை விதவிதமாக உருக்குலைக்கப்பட்டன. அவற்றுள் பலவிதமான அறியாமை மிக்க சடங்குகள் சேர்க்கப்பட்டன. பொய்க் கதைகளும், பொய்ச் சம்பவங்களும் புனையப்பட்டன. மூலச் சட்டங்களோடு மனிதனால் இயற்றப்பட்ட சட்டங்களும் இரண்டறக் கலக்கப்பட்டன. சில நூற்றாண்டுகளுக்குப் பின் இறைத்தூதரின் மூலபோதனை எது, மூலச் சட்டங்கள் எவை, பிறகு வந்தவர்களால் அவற்றுள் என்னென்ன கலக்கப்பட்டன என்பதை அறிய ஒரு வழியும் இல்லாத அளவுக்கு இந்தக் கலப்பு செய்யப்பட்டது.*

தற்போது நம்ப முடியாத அளவுக்கு இறைத் தூதர்களின் வாழ்க்கை வரலாறுகள் பொய்க் கதைகளில் தலைகீழாக மறைந்து கிடக்கின்றன. ஆயினும் இறைத்தூதர்களின் முயற்சிகள் அனைத்தும் வீண்போகவில்லை. எல்லாக் கலப்படங்களுக்குப் பின்பும் கொஞ்ச நஞ்சம் சத்தியத்தின் சில அம்சங்கள் ஒவ்வொரு சமூகத்திலும் எஞ்சியிருக்கின்றன. இறைவனைப் பற்றிய எண்ணமும் மறுமை வாழ்வைப் பற்றிய எண்ணமும் ஏதாவது ஒரு வகையில் எல்லாச் சமூகங்

---

* இறைத்தூதர்களைப் பின்பற்றியவர்கள் இவ்வாறாகவே மூல மார்க்கத்தைச் சிதைத்து, அதாவது இஸ்லாத்தைக் கெடுத்து இப்போது பல்வேறு பெயர்களில் உலகில் வழங்கும் மதங்களை உண்டாக்கினர். எடுத்துக்காட்டாக, ஈஸா (அலை) (இயேசுநாதர்) எந்த மார்க்கத்தைப் போதித்தாரோ அது இஸ்லாமாகவே இருந்தது. ஆனால் அவருக்குப் பின் அவரைப் பின்பற்றியவர்கள் இயேசு நாதரையே வணக்கத்துக்குரியவராய் ஆக்கிவிட்டனர். அவருடைய போதனைகளுடன் வேறு விஷயங்களையும் சேர்த்து இப்போது 'கிறிஸ்துவ மதம்' என்று வழங்கும் மதத்தை உண்டாக்கினர்.

களிலும் நிலைத்துள்ளன. நன்மை, நேர்மை, ஒழுக்கம் தொடர்பான சில விதிகள் பொதுவாக உலகில் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. உலகில் யாதொரு வேறுபாடுமின்றி மனித குலம் முழுமைக்கும் ஒரே மதத்தைப் பற்றிய போதனை பரப்பப்படுவதற்கு ஏற்றவாறு எல்லாச் சமூகங்களைச் சேர்ந்த இறைத்தூதர்களும் தத்தம் சமூகங்களைத் தனித்தனியே ஆயத்தப்படுத்தி வைத்திருந்தார்கள்.

நாம் முன்பே குறிப்பிட்டுள்ளபடி தொடக்கத்தில் ஒவ்வொரு சமூகத்திலும் தனித்தனி இறைத்தூதர்கள் வந்து கொண்டிருந் தார்கள். அவர்களுடைய போதனை அவர்களுடைய சமூகத் திற்குள் மட்டுமே இருந்து வந்தது. அதற்குக் காரணம் என்ன வெனில், அக்காலத்தில் எல்லாச் சமூகங்களும் தனித்தனியே வாழ்ந்து வந்தன. அவர்களிடையே அதிகமான உறவு, தொடர்பு இருந்ததில்லை. ஒவ்வொரு சமூகமும் தன்னு டைய தாயகத்தின் எல்லைக்குள் சிறைப்பட்டிருந்தது என்றே கூறலாம். அத்தகைய நிலைமையில் ஒரே பொதுவான போதனை எல்லாச் சமூகங்களிலும் பரவுவது கடினம். அதைத் தவிர ஒரு சமூகத்தின் நிலைமை மற்றொரு சமூகத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது. அறியாமை மிகுந்திருந்தது.

அறியாமையின் காரணமாக கொள்கை, கோட்பாடு, ஒழுக்கம் ஆகியவற்றில் தோன்றியிருந்த சீர்கேடுகள் ஒவ்வொரு வித மாக இருந்தன. ஆகையால் இறைத்தூதர்கள், ஒவ்வொரு சமூகத்திலும் தனித்தனியே போதனையும் அறவுரையும் செய்ய வேண்டியதும், சிறுகச் சிறுக தவறான கருத்துகளை ஒழித்துச் சரியான கருத்துகளைப் பரப்பவேண்டியதும் அவசியமே. அதேபோல் அறியாமை மிக்க வழிமுறைகளைத் தகர்த்து உயர்தரமான சட்டங்களைப் பின்பற்றிப் பயிற்சி அளிக்கவேண்டியதும் அவசியமே. அதேபோல் சிறுவர் களுக்கு எவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாகப் பயிற்சி அளிக்க வேண்டுமோ, அவ்வாறு பயிற்சியளிக்க வேண்டியதும் அவசியமாக இருந்தது. இவ்வாறு சமுதாயங்களுக்குப் போதனை செய்வதில் எத்தனை ஆயிரம் ஆண்டுகள் கழிந்தனவோ, இறைவனே அறிவான்!

நாளாக நாளாக, சிறுகச் சிறுக முன்னேறிக் கொண்டே வந்த மனித குலம், குழந்தைப் பருவத்தைக் கடந்து இளமைப்பருவத்தை அடையத் தொடங்கிற்று. வாணிகமும் கைத்தொழிலும் முன்னேற முன்னேற சமுதாயங்களிடையே தொடர்புகளும் ஏற்பட்டன. சீனா, ஜப்பானிலிருந்து ஐரோப்பா, ஆஃப்ரிக்கா போன்ற தூர நாடுகள் வரை கப்பல் போக்குவரத்தும் தரைப் பயணமும் ஆரம்பமாயின. பெரும்பாலான சமுதாயங்களில் எழுத்துப் பயிற்சி உண்டாயிற்று. கல்விகளும், கலைகளும் பரவின. சமுதாயங்களுக்கு இடையே கருத்துகளும் கல்வி-கலை தொடர்பான உரைகளும் பரிமாற்றம் செய்து கொள்ளப்பட்டன. மாபெரும் வெற்றி வீரர்கள் பிறந்தார்கள். அவர்கள் பெரிய பெரிய அரசுகளை நிறுவி பல்வேறு நாடுகளையும் பல்வேறு சமுதாயங்களையும் ஒரே அரசியல் நிர்வாகத்தின்கீழ் கொண்டுவந்தார்கள்.

இவ்வாறாக, முன்பு மனித சமுதாயங்களில் காணப்பட்ட பிரிவினையும் வேற்றுமையும் சிறுகச் சிறுக குறைந்து கொண்டே சென்றன. இஸ்லாத்தின் ஒரே போதனையும், ஒரே மார்க்கச் சட்டமும் (ஷரீ அத்) உலகம் முழுவதற்குமாக இறைவன் அனுப்பவேண்டிய சூழ்நிலை உருவானது. சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் மனிதன் ஒரு பொதுவான மதத்தை விரும்பும் அளவுக்குச் சூழ்நிலை முன்னேறியது.

புத்த மதம், முழுமைபெற்ற மதமாக இல்லாத போதிலும், அதில் சில ஒழுக்க விதிகள் மட்டுமே இருந்தபோதிலும், இந்தியாவிலிருந்து கிளம்பி ஒருபுறம் ஜப்பான், மங்கோலியா வரையும், மற்றொருபுறம் ஆப்கானிஸ்தானம், புகாரா வரையும் பரவியது. அதன் பிரசாரகர்கள் வெகுதொலைவிலுள்ள நாடுகளுக்கும் போய்ச் சேர்ந்தார்கள்.

அதற்குச் சில நூற்றாண்டுகள் கழித்து கிறிஸ்தவ மதம் தோன்றிற்று. ஈஸா (அலை) அவர்கள், இஸ்லாமிய போதனையையே கொண்டுவந்த போதிலும், அவருக்குப்பின் கிறிஸ்தவ மதம் எனும் பெயரால் ஓர் அரைகுறையான மதம் உண்டாக்கப்பட்டது. கிறிஸ்தவர்கள் அந்த மார்க்கத்தைப் பாரசீகத்தி

*லிருந்து ஆஃப்பிரிக்கா, ஐரோப்பா போன்ற தொலைதூர நாடுகளிலும் பரப்பினார்கள்.*

*அக்காலத்தில் முழு உலகமும் மனிதகுலம் அனைத்திற்கு மான ஒரே பொதுவான மதத்தை விரும்பி நின்றது என்பதை இந்நிகழ்வுகள் நிரூபிக்கின்றன. அத்தேவையை நிறைவு செய்வதற்காக முழுமையான சரியான மதம் எதுவும் அக்கால உலகிற்குக் கிடைக்கவில்லை. எனினும் அரைகுறையான மதங்கள் கூட மனித சமுதாயங்களில் பரவும் அளவுக்கு உலகம் தயாராகியிருந்தது.*

## முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் இறைத்தூது

*இந்தக் காலகட்டத்தில் அகில உலகத்திற்காகவும் - மனித சமுதாயங்கள் அனைத்திற்காகவும் ஓர் இறைத்தூதர்- முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அரேபிய நிலப்பரப்பில் தோன்றினார்கள்; அவர்கள் இஸ்லாத்தில் நிறை ஞானமும், முழுமையான சட்டங்களும் அளிக்கப்பட்டு அவற்றை உலகம் முழுவதிலும் பரப்பும் தொண்டுபுரிவதற்காக நியமிக்கப்பட்டார்கள்.*

*உலக வரைபடத்தை எடுத்துப் பாருங்கள். அரபு நாட்டைக் காட்டிலும் அகில உலக இறைத்தூதுக்காக இத்தரைமீது மிகவும் பொருத்தமான இடம் வேறு எதுவும் இருக்க முடியாது என்பதை ஒரே பார்வையில் நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள். இந்த நாடு ஆசியாவுக்கும் ஆஃப்ரிக்காவுக்கும் இடையே சரியாக நடுவில் இருக்கிறது. ஐரோப்பாவும் அங்கிருந்து மிகவும் அருகில் இருக்கிறது. குறிப்பாக முன் னேற்றம் அடைந்த ஐரோப்பியச் சமூகங்கள் அக்காலத்தில் பெரும்பாலும் ஐரோப்பாவின் தென்பகுதியில்தான் வசித்து வந்தன. அந்தப் பகுதி, அரபு நாட்டுக்கு இந்தியா எவ்வளவு அருகே இருக்கிறதோ அவ்வளவு அருகே இருக்கிறது.*

*மேலும், அக்கால வரலாற்றைப் படித்தால், அத்தகைய இறைத்தூதுக்காக அரேபிய சமுதாயத்தைக் காட்டிலும் மிகவும் பொருத்தமான சமுதாயம் அப்போது வேறு எதுவும்*

இருக்கவில்லை என்பதைத் தெரிந்துகொள்வீர்கள். அப்போது இதர, வலுவான பெரிய சமுதாயங்கள் தத்தம் வல்லமைக ளைக் காட்டி ஓய்ந்து உயிரற்றுப் போயிருந்தன.

அரேபியச் சமுதாயமோ புத்துணர்வுடன் இருந்தது. 'நாகரிக முன்னேற்றத்தின்' காரணமாக இதர அரபியரல்லாத சமு தாயங்களின் பழக்கவழக்கங்கள் மிகவும் சீர்குலைந்து போயி ருந்தன. அரபியர்களைச் சுகபோகிகளாகவும், ஆடம்பரப் பிரியர்களாகவும், இழிவானவர்களாகவும் ஆக்கத்தக்க 'நாகரிகம்' எதுவும் அக்கால அரபிய சமுதாயத்தில் இருக்க வில்லை. மேலும் ஆறாவது நூற்றாண்டு அரபியர்கள் அக் காலத்தில் 'நாகரிகம்' பெற்ற சமுதாயங்களின் தீய பாதிப்பி லிருந்து முற்றிலும் விடுபட்டு இருந்தார்கள். 'நாகரிக' வாசனையே காணப்படாத சமுதாயத்தில் இருக்கும் மனிதச் சிறப்பியல்புகள் அனைத்தும் அவர்களுள் நிரம்பியிருந்தன.

அவர்கள் வீரர்களாயிருந்தார்கள். அச்சமற்றவர்களாயிருந்தார் கள். தாராள மனப்பான்மை உடையவர்களாயிருந்தார்கள். வாக்குறுதிக்குக் கட்டுப்பட்டவர்களாயிருந்தார்கள். சுதந்திர எண்ணம் படைத்தவர்களாயும், சுதந்திரத்தில் ஆர்வம் உள்ள வர்களாயும் இருந்தார்கள். எந்த சமுதாயத்திற்கும் அவர்கள் அடிமைகளாயிருக்கவில்லை. தன்மானத்திற்காக உயிரையே விட்டுவிடுவது அவர்களுக்கு எளிய செயலாயிருந்தது. மிகவும் எளிய வாழ்வே வாழ்ந்து வந்தார்கள். ஆடம்பரத்தை அறியாதிருந்தார்கள்.

அவர்களிடையே பல தீமைகள் இருந்தன என்பதில் ஐய மில்லை. அவற்றைப் பற்றி போகப்போக நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். ஆனால் அந்தத் தீமைகள், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாக அவர்களிடையே எந்த இறைத்தூதரும் வராத காரணத்தால் ஏற்பட்டவையேயாகும். *அரபியர் களுடைய ஒழுக்கத்தை மேம்படுத்தவும் நாகரிகம்

---

* நபி இப்றாஹீம் (அலை), நபி இஸ்மாயீல் (அலை) ஆகியோரின் காலம் முதல், முஹம்மத் (ஸல்-அம்) அவர்கள் வரும்வரை இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் கடந்து போயிருந்தது. அந்த நீண்ட இடைக்காலத்தில் அரபு நாட்டில் எந்த இறைத்தூதரும் வரவில்லை.

கற்பிக்கவும் எந்த வழிகாட்டியும் பிறக்கவில்லை. பல நூற்றாண்டுகளாகத் தனியே, சுதந்திரமாக வாழ்ந்த காரணத்தால் அவர்களிடையே அறியாமை பரவியிருந்தது.

அவர்களை மனித அந்தஸ்துக்கு உயர்த்துவது ஒரு சாமான்ய மனிதரின் சக்திக்கு அப்பாற்பட்டது. அந்த அளவுக்கு அவர்கள் அறியாமையில் ஆழ மூழ்கி விட்டிருந்தனர். ஆயினும் அம்மக்களிடையே ஒரு சிறப்பான ஆற்றல் இருந்தது. வலிமை வாய்ந்த மனிதர் ஒருவர் அவர்களிடையே தோன்றி தனது போதனையின் மூலம் சீர்திருத்திவிட்டால் - அவ்வாற்றலைத் தட்டி எழுப்பினால் ஓர் உயர்ந்த இலட்சியத்திற்காக வீறுகொண்டெழுந்து, இவ்வுலகையே ஆட்டிப் படைக்கும் ஆற்றல் பெற்றவர்களாக அவர்கள் திகழ்வார்கள். அகில உலக இறைத்தூதர் ஒருவரின் போதனைகளைப் பரப்புவதற்காக அத்தகைய இளமையும் வலிமையும் வாய்ந்த சமுதாயமே தேவையாயிருந்தது.

இதற்குப்பின் அரபி மொழியைப் பாருங்கள். இம்மொழியைக் கற்றால், இதன் இலக்கியத்தைப் பயின்றால் உயர் சிந்தனைகளை வெளியிடவும், இறைஞானத்தின் நுண்ணிய, நுட்பமான விஷயங்களை விளக்கவும், நெஞ்சங்களுக்கு உணர்வூட்டவும், இதைக் காட்டிலும் பொருத்தமான மொழி வேறு இல்லை என்பதை நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். இம்மொழியின் சின்னஞ்சிறு சொற்றொடர்களில் பெரிய பெரிய கருத்துகள் அடங்கிவிடுகின்றன. அவை நெஞ்சில் ஈட்டியைப்போல் ஆழப்பதிந்து கண்களில் நீரைப் பெருக்கும் வல்லமை வாய்ந்தவை. அது தேனினும் இனிய மொழி, அதைக் கேட்கும்போது காதுகளில் தேன்பாய்வதைப் போல் தோன்றும். அதன் இசைநயம் கேட்போரை மெய்மறக்கச் செய்யும். குர்ஆன் போன்ற வேதநூலுக்கு இத்தகைய மொழியே அவசியமாயிருந்தது.

ஆகையால், அகில உலக இறைத்தூதுக்காக அரேபியாவைத் தேர்ந்தெடுத்ததில் அல்லாஹு தஆலாவின் மிகப்பெரும் நுட்பம் அடங்கியிருந்தது.

*வாருங்கள்! இத்தொண்டிற்காக இறைவன் தேர்ந்தெடுத்த அந்தப் புனிதர் எத்தகைய சிறப்பு மிக்கவர் - இணையற்றவர் என்பதைப் பார்ப்போம்.*

**முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைத்தூதரே என்பதற்கான சான்று:**

*ஓராயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முந்திய காலத்தை மனக் கண்ணால் பாருங்கள்! அக்காலம் இப்போதுள்ள நமது காலத்தைவிட முற்றிலும் மாற்றம் உடையதாக இருந்தது. அப்போது தொலைத்தொடர்பு வசதிகள் கிடையாது. தொலை விலுள்ளவர்களோடு கருத்துகளைப் பரிமாறிக் கொள்ள வாய்ப்புகள் இல்லை. உலகில் வானொலியோ, தொலை பேசியோ இருக்கவில்லை. மகிழூந்துகளோ, தொடர் வண்டியோ, அச்சகங்களோ இல்லை. செய்திப் பத்திரிகை களோ, சஞ்சிகைகளோ கிடையா. இன்று இருப்பதைப் போன்ற பயண வசதிகளும் இல்லை. ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குப் போக மாதக்கணக்காகப் பயணம் செய்ய வேண்டியிருந்தது. கல்வி ஆடம்பரமாகக் கருதப் பட்டது. கல்விக் கூடங்களோ அரிது. அவைகூட மிகத் தொலைவில் இருந்தன.*

*இந்நிலையில் உலகநாடுகளிடையே அரபுநாடு மற்ற நாடுகளி லிருந்து தனிமைப்பட்டுக் கிடந்தது. அதைச் சூழ பாரசீகம், ரோமாபுரி, எகிப்து ஆகிய நாடுகள் இருந்தன. அவற்றில் கல்வி, கலைகளைப் பற்றிய சர்ச்சை இருந்தது. பரந்த பாலை நிலப்பரப்புகள், அரபு நாட்டை அந்த நாடுகளிலிருந்து பிரித்து வைத்திருந்தன. அரபு வணிகர்கள், வணிகத்தின் பொருட்டு மாதக்கணக்காகப் பயணம் செய்து சுற்றியிருந்த நாடுகளுக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். அந்தத் தொடர்பும், பண்டங் களை வாங்கும், விற்கும் அளவுக்குத்தான் இருந்தது.*

*அரபு நாட்டிலோ குறிப்பிடத்தக்க உயர் தரப் பண்பாட்டு நாகரிக வளர்ச்சியோ, சமூக முன்னேற்றமோ காணப்பட வில்லை. கல்விக் கூடமோ நூல் நிலையமோ கிடையாது. மக்களிடையே கல்வியைப் பற்றிய சர்ச்சையே இல்லை. நாடு*

முழுவதிலுமாக மிகச் சிறு தொகையினருக்கே எழுதப் படிக்கத் தெரிந்திருந்தது. அக்காலத்திய கல்வியையும், கலை களையும் அறிந்துகொள்ளும் அளவுக்கும் அவர்கள் நிலை இருக்கவில்லை.

அங்கு முறையான ஆட்சியும் இல்லை. எந்தவிதச் சட்டமும் இல்லை. ஒவ்வொரு குடும்பமும் (கபீலாவும்) சுய அதிகாரத் துடன் விளங்கிற்று. களவும், கொள்ளையும் மலிந்திருந்தன. நாள்தோறும் இரத்தம் சிந்தும் போராட்டங்கள் நடந்து கொண்டிருந்தன. மனித உயிருக்கு எத்தகைய மதிப்பும் இருக்கவில்லை. எவனை எவன் வேண்டுமானாலும் கொன்று அவனுடைய சொத்தைத் தனதாக்கிக் கொள்வான்.*

ஒழுக்கம், நாகரிகம் ஆகியவற்றின் வாசனைகூட அவர்கள் மீது படவில்லை. தீச்செயல், கள்குடித்தல், சூதாடல் ஆகி யவை மலிந்து காணப்பட்டன. ஒருவர் மற்றவர் முன் கூச்ச மின்றி நிர்வாணமாகிவிடுவார். பெண்கள்கூட நிர்வாணமாகி கஅபாவை வலம் வந்துகொண்டிருந்தனர். ஆகுமானவை, ஆகாதவை (ஹலால் ஹராம்) எனும் பாகுபாடே அவர்களுக் குள் இருக்கவில்லை. எவரும் எத்தகைய விதிக்கும், சட்டத் துக்கும், திட்டத்துக்கும் கட்டுப்பட்டு நடக்கத் தயாராவ தில்லை. அவர்கள் எந்த அதிகாரிக்கும் கீழ்ப்படிய ஒப்புவ தில்லை. மேலும் சமுதாயம் முழுவதும் கற்சிலைகளை வணங்கும் அளவுக்கு அறியாமை முற்றியிருந்தது. வழியில் நடக்கும்போது, ஏதாவது ஒரு நல்ல கல் கிடைத்துவிட்டால் அதையே முன்னால் வைத்து வணங்கிக் கொள்வார்கள்.

---

* "Arab Civilization" எனும் நூலில் Professor Joseph Hell என்பார் குறிப்பிட்டிருப்பதாவது:

இப்போராட்டங்கள் தேசிய ஒற்றுமையை உருக்குலைத்து என்றுமே சீர்செய்ய முடியாத அளவில் ஒவ்வோர் அம்சத்திலும் பிளவு உணர்ச்சியை வளர்த்துவிட்டன. ஒவ்வொரு பழங்குடியினருக்கும் தாமே சுய ஆதிக்கம் உடையவர்கள் என்ற உணர்வையும், மற்றவர்களெல்லாம் தங்களால் வேலை வாங்கப்படவும், கொள்ளையடிக்கப்படவும், சூறையாடப் படவுமே இருப்பவர்கள் என்னும் எண்ணத்தையும் உண்டாக்கிவிட்டன. (பக்கம் 10) -**கு.அ.**

அதாவது எந்தத் தலைகள் மற்றவர்கள் முன்பு சாய மறுத்தனவோ அவை கற்களுக்கு முன் சாய்ந்துவந்தன. அக்கற்கள் தங்கள் தேவைகளை நிறைவு செய்யும் என்று அவர்கள் கருதினார்கள்.

இத்தகைய சமுதாயத்தில், இத்தகைய சூழ்நிலையில் ஒரு மனிதர் பிறக்கிறார். குழந்தைப் பருவத்திலேயே தாய் தந்தையரையும், பாட்டனாரையும் இழந்துவிடுகிறார். அந்த இக்கட்டான நிலையில் சாதாரணமாகக் கிடைக்கக்கூடிய பயிற்சியும் அவருக்குக் கிடைக்காமல் போகிறது. அறிவு தோன்றியதும் இதர அராபியச் சிறுவருடன் சேர்ந்து ஆடுகளை மேய்க்கத் தொடங்குகிறார். வாலிபப் பருவத்தை எய்தியதும் வணிகத்தில் ஈடுபடுகிறார். முன்பே நீங்கள் தெரிந்துகொண்டுள்ள நிலையில் உள்ள அதே அரபியருடனேயே நெருங்கிப் பழகுகிறார். கல்வியின் வாசனையே இல்லை. எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பில்லை. இவ்வாறு இருந்தபோதிலும், பழக்கவழக்கம், பண்பாடு ஆகியவற்றில் மற்றவர்களை விட அவர் மாறுபட்டிருக்கிறார்.

அவர், ஒருபோதும் பொய்யுரைப்பதில்லை. எவருடனும் கெட்ட பேச்சுப் பேசுவதில்லை. அவர் நாவில் கடுமையே காணப்படுவதில்லை. இனிமையே தொனிக்கும் அந்தப் பேச்சைக் கேட்டு மக்கள் அவர்மீது மயக்கம் கொள்கிறார்கள். தகாத முறையில் பிறருடைய ஒரு காசையும் அவர் பெறுவதில்லை. மக்கள் தங்களுடைய விலை உயர்ந்த சொத்துக்களை அவரிடம் பாதுகாப்புக்காக கொடுத்துவைக்கும் அளவுக்கு அவர் நம்பிக்கைக்குரியவராய்த் திகழ்கிறார். ஒவ்வொருவருடைய பொருளையும் அவர், தம் உயிர்போல் பாதுகாத்துக் கொடுக்கிறார். சமுதாயம் முழுவதுமே அவருடைய நாணயத்தின்மீது நம்பிக்கை வைக்கிறது. அதன் காரணமாக அவரை ‘அமீன்’ - நம்பிக்கைக்குரியவர் என்று அழைக்கிறது.

யாரும் அவரை ஆடையின்றிக் கண்டதேயில்லை. அவருடைய நாணத்தின் நிலை அத்தகையது! அவர் ஒருபோதும் எந்த அந்நியப் பெண்ணையும் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. அவருடைய ஒழுக்க நிலை அத்தகையது! அவர் ஒழுங்கீன

*மான-அசுத்தமான மக்களுடன் வளர்ந்து பழகி வந்தபோதி லும் ஒவ்வோர் ஒழுங்கீனத்தையும், எல்லாவிதமான அசுத்தத்தையும் அவர் வெறுக்கிறார்; அவருடைய ஒவ்வொரு செயலிலும் ஒழுங்கும் தூய்மையும் காணப்படுகின்றன. அவருடைய வாய்மையான வாழ்க்கை அத்தகையது!*

*தம்முடைய சமுதாயம் கொள்ளையடிப்பதையும் உதிரம் சிந்துவதையும் பார்த்து மனம் புழுங்குகிறார்; சண்டை, சச்சரவுகளின்போது அமைதியையும் சமாதானத்தையும் காக்க முயற்சி மேற்கொள்கிறார். அவருடைய எண்ணத் தூய்மை அத்தகையது!*

*அவர் ஒவ்வொருவருடைய துக்கத்திலும் பங்கெடுத்துக் கொள்கிறார்; அனாதைகளுக்கும், விதவைகளுக்கும் உதவி புரிகிறார்; பசித்தவருக்கு உணவு அளிக்கிறார்; பயணிகளுக்கு விருந்தளிக்கிறார். எவருக்கும் அவரால் எந்தவித துன்பமும் ஏற்படுவதில்லை! அவர் மற்றவர்களுக்காகத் தாமே அல்லலுக்கு ஆட்படுகிறார்; அவருடைய இதயம் அவ்வளவு மென்மையானது.*

*அவர் சிலை வணக்கம் புரியும் சமுதாயத்தில் இருந்தும் சிலைவணக்கத்தை வெறுக்கிறார்; ஒருபோதும் அவர் எந்தப் படைப்பினத்தின் முன்பும் தலை தாழ்த்தியதில்லை. 'விண்ணிலும் மண்ணிலும் எத்தனை பொருட்கள் காணப்படு கின்றனவோ அவற்றுள் எதுவும் ஆராதனைக்குரியதல்ல' என்று அவருக்குள்ளிருந்து ஒரு குரல் தானே ஒலிக்கிறது. ''இறைவன், ஒருவனாகத்தான் இருக்க முடியும் - அவன் ஒருவனாகத்தானிருக்கிறான்'' என்று அவருடைய நெஞ்சம் தானாகவே கூறுகிறது. அவருடைய அறிவுத் தெளிவு அத்த கையது. சுருங்கக்கூறின், அவர் அந்த அறியாமை மிக்க சமு தாயத்தில் - கற்குவியலில் ஒளிரும் வைரத்தைப்போல, கடும் இருளில் ஒளிவீசும் மணிவிளக்கைப்போல சிறப்புற்று திகழ்கிறார்.*

*நாற்பது ஆண்டுகள் வரை தூய்மையாகவும் சிறப்பாகவும் வாழ்ந்த அந்த மனிதர் தம்மைச் சூழ்ந்து பரவிக்கிடந்த*

அறியாமை எனும் இருளைக் கண்டு அதிர்ச்சியடைகிறார். மேலும் அவரைச் சூழ்ந்துள்ள அறியாமை, ஒழுங்கீனம், சீர்குலைவு, இறைவனுக்கு இணைவைத்தல், உருவ வழிபாடு ஆகிய பயங்கர அலைமோதும் கடலில் இருந்து அவர் வெளியேற விரும்புகிறார். ஏனெனில் அங்கிருக்கும் எதுவுமே அவர் இயல்புக்கு ஒத்ததாய் இல்லை.

இறுதியில் நகரத்துக்கு அப்பால் இருக்கும் ஒரு மலைக் குகைக்கு அடிக்கடிச் சென்று தனிமையான, அமைதியான சூழ்நிலையில் நாள்களைக் கழிக்கத் தொடங்குகிறார். பசியை அடக்கி அடக்கித் தம்முடைய ஆன்மாவையும், இதயத்தை யும், அறிவையும் மேலும் மேலும் தூய்மையாக்குகிறார். சிந்திக்கிறார்; ஆராய்கிறார்; நாலாபுறமும் பரவியிருந்த அந்த இருளைப் போக்குவதற்காக ஓர் ஒளியைத் தேடுகிறார். சீர்கெட்டுக் கிடந்த உலகைத் தகர்த்து எறிந்து, புதிய உலகைத் தோற்றுவித்து அதை அலங்கரிப்பதற்கு வேண்டிய சக்தியைப் பெற விழைகிறார்.

திடீரென்று அவருடைய நிலையில் ஒரு மகத்தான மாறுதல் ஏற்படுகிறது. அவர் இயல்பாகவே வேண்டிக்கொண்டிருந்த அந்தப் பேரொளி, அவர் இதயத்தில் திடுமெனத் தோன்று கிறது. அதற்கு முன் எப்போதும் தோன்றியிராத சக்தி அவருள் நிறைகிறது. அவர் குகையின் தனிமையிலிருந்து வெளியேறி தம்முடைய சமுதாயத்திடம் வருகிறார். மக்களைப் பார்த்துக் கூறுகிறார் :

''சிலைகள் எக்காரியத்திற்கும் உதவாதவை, அவற்றைக் கைவிடுங்கள்! இந்தப் பூமி, இந்த நிலவு, இந்தக் கதிரவன், இத்தாரகைகள், வானம், பூமியில் உள்ள சக்திகள் யாவும் ஒரே இறைவனின் படைப்புகளே. அந்த இறைவனே உங்களை யும் படைத்தவன். அவனே உணவளிப்பவன். அவனே உயிரை வாங்கவோ, உயிரை அளிக்கவோ செய்கிறான். மற்ற அனைத்தையும் விடுத்து அவனையே தொழுங்கள். மற்றவர் களை விடுத்து அவனிடமே உங்கள் விருப்பங்களைக் கேட்டுப் பெறுங்கள்! திருட்டு, களவு, கொள்ளை, கள் குடித்தல், சூதாட்டம், கெட்ட செயல் ஆகியவை யாவும் பாவ

மானவை. இவற்றை விட்டொழியுங்கள். இறைவன் இவற்றை விரும்பவில்லை. உண்மை பேசுங்கள்! நியாயம் வழங்குங்கள்! கொலை செய்யாதீர்கள்! எவருடைய பொருளையும் அபகரிக்காதீர்கள்! எதை வாங்கினாலும் நியாயமாக வாங்குங்கள்! எதைக் கொடுத்தாலும் நியாயமாகக் கொடுங்கள்! நீங்கள் அனைவரும் மனிதர்களே; மனிதனுக்கு மனிதன் சமமே ஆவான். பெருமையும், கண்ணியமும் மனிதனின் பரம்பரையிலோ, குலத்திலோ இல்லை. நிறத்திலோ, உருவத்திலோ, பொருளிலோ, செல்வத்திலோ இல்லை. அவை இறைவழிபாடு, நற்செயல், தூய்மை ஆகியவற்றில்தாம் இருக்கின்றன. எவன் இறைவனுக்கு அஞ்சுகிறானோ, நல்லவனாயும் தூய்மையுடையவனாயும் இருக்கிறானோ அவனே உயர்ந்த மனிதனாவான். அவ்வாறு எவன் இல்லையோ அவன் எந்தவித உயர்வும் இல்லாதவனாவான். இறந்தபின் நீங்கள் அனைவரும் உங்கள் இறைவன் முன் வர வேண்டியிருக்கிறது. அந்த உண்மை நீதிபதி முன் எந்த ஒரு பரிந்துரையும் பலனளிக்காது. இலஞ்சமும் செல்லாது. அங்கு யார் எந்தக் குலத்தைச் சார்ந்தவர் என்று கேட்கப் பட மாட்டார். அங்கே நம்பிக்கை (ஈமான்), நற்செயல் பற்றியே விசாரிக்கப்படும். எவரிடம் அவை இருக்குமோ அவர் சுவர்க்கம் புகுவார். எவரிடம் அவை இல்லையோ அவர் விருப்பம் நிறைவேறாதவராய் நரகம் செல்வார்.''

இவ்வாறு அவர் கூறியதைக் கேட்ட அந்த அறியாமை மிக்க சமுதாயம், ''மூதாதையர் காலம் முதல் இருந்து வரும் விஷயங்களை எப்படிக் கெட்டவை என்று சொல்லலாம்; முன்னோர்களின் வழிமுறைகளுக்கு எதிரான அறிவுரைகளை எப்படிச் செய்யலாம்?'' என்று கூறி அந்த நல்ல மனிதரைத் துன்புறுத்தத் தொடங்கிற்று. அனைவரும் அவரைத் திட்டினார்கள். கல்லால் அடித்தார்கள். அவரைக் கொல்லவும் சதி செய்தார்கள். இவ்வாறாக ஒன்றிரண்டு நாட்களல்ல; தன்னந்தனியே பதின்மூன்று ஆண்டுகள் வரை அவர், கடுமையிலும் கடுமையான கொடுமைகளைச் சகித்தார். ஒருநாள் தாயகத்தை விட்டே வெளியேறுமாறும் நிர்ப்பந்திக்கப்பட்டார். அக்கொடிய மக்கள், அவரைத் தாயகத்திலிருந்து வெளியேற்றிய பின்னரும் சும்மா இருக்கவில்லை. எங்கே அவர் புகலிடம்

தேடிக்கொண்டிருந்தாரோ அங்கும் அவருக்குத் தொல்லை கொடுத்துக்கொண்டே இருந்தார்கள்.

இந்த இன்னல்களை எல்லாம் அந்த நல்ல மனிதர் எதற்காகச் சகித்தார்? தம் சமுதாயத்துக்கு எப்படியும் நேர்வழிகாட்டிட வேண்டும் எனும் லட்சியத்திற்காகத்தானே! அவர் தம்முடைய அறிவுரைகளை விட்டுவிட்டால் அவருடைய சமூகம் அவருக்கு அரச பதவி அளிக்கத் தயாராயிருந்தது. செல்வக் குவியலை அவர் காலடியில் கொட்டச் சித்தமாயிருந்தது.*

ஆனால் அவர் அவற்றை எல்லாம் உதறித்தள்ளிவிட்டுத் தம் கொள்கையில் உறுதியாக இருந்தார். தம்முடைய நலத்தைக் கருதாமல் மற்றவர்களுடைய நன்மையை நாடிக் கொடுமைகளைச் சகித்தாரே, அதற்கும் மேலான நல்லெண்ணமும், நேர்மையும் இவ்வுலகில் இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? எவருடைய நன்மைக்காக அவர் முயற்சி செய்கிறாரோ - அந்த மக்களே அவரைக் கல்லால் அடிக்கிறார்கள். அவரோ, அவர்களின் நன்மையை நாடிப் பிரார்த்தனை புரிகிறார். மனிதர்கள் என்ன, வானவர்களும் அவருடைய நற்

---

* உண்மை வழியின் குறுக்கே புயலென உருவெடுத்து வந்த இன்னல்களையும் இடுக்கண்களையும் பெருமானார் முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் எதிர்த்து நிற்க வேண்டியிருந்தது. தமக்கு வந்த எதிர்ப்புகளையும், இடையூறுகளையும் கொடுமைகளையும் அவர்கள் புன்முறுவலோடு ஏற்றுக்கொண்டார்கள். வசைமொழிகளையும் வன்செயல்களையும் கண்டு கொஞ்சமும் அஞ்சாது உறுதியோடு நின்றார்கள். அச்சுறுத்தல்கள் எல்லாம் அவர்களுக்கு அச்சமூட்டவில்லை. அவர்கள் மீது ஏவப்பட்ட கொடூரமான கொடுமைகளெல்லாம் அவர்களையோ, அவர்களது தோழர்களையோ இம்மியளவும் அசைக்கவில்லை. இதைக் கண்ட அரபியர்கள் வேறு வழியைக் கையாண்டார்கள். ஆனால் அதுவும்கூட வீணாயிற்று.

குறைஷித் தலைவர்களின் குழு ஒன்று பெருமானார் அவர்களை அணுகி, கற்பனைக்கெட்டாத உலகச் செல்வங்களையெல்லாம் அவர்களது காலடியில் கொட்டுவதாகக் கூறி, அவர்களைத் தங்கள் பக்கம் திருப்ப முயன்றது.

''செல்வம் சேர்ப்பதுதான் உமது விருப்பம் என்றால், உமது ஆசை அடங்குமளவுக்கு நாங்கள் செல்வம் திரட்டித் தருகிறோம்; உயர்ந்த அந்தஸ்தும், அதிகாரமும் அடைவதுதான் உமது குறிக்கோளாயிருக்குமெனில்,

*செயல் கண்டு அவருக்காகத் தங்களை முழுமையாய் அர்ப் பணம் செய்யலாம்.*

*மேலும் பாருங்கள்! அம்மனிதர், அந்த அறிவுரையைப் பெற்று, தம் குகையிலிருந்து வெளிப்பட்ட பின் எவ்வளவு பெரிய புரட்சி அவருள் ஏற்பட்டிருக்கிறது! இப்போது அவரு டைய வாக்கில் எத்தகைய இலக்கிய நயம் செறிந்து விளங்கு கிறது! அதற்கு முன்பு எவரும் அத்தகைய உரை ஆற்றவும் இல்லை. அதற்குப்பின் இன்றுவரை எவராலும் ஆற்ற முடியவுமில்லை. அக்காலத்திலேயே அரபு மக்களுக்குத் தங் கள் கவிதை, எழுத்து வன்மை, பேச்சு வன்மை, இலக்கிய நயம் ஆகியன குறித்து அளவு கடந்த பெருமை இருந்தது. அம் மக்களைப் பார்த்து அம்மனிதர், 'இந்த வாக்கைப் போல் ஒரே ஒரு வசனத்தையேனும் நீங்கள் இயற்றிக் கொண்டு வாருங் கள், பார்ப்போம்!' என்று சவால் விட்டபோது அவர்களின் தலைகள் வெட்கத்தால் சாய்கின்றன. இதில் விசேஷம் என்ன வெனில் அந்த மனிதரின் சொந்தப் பேச்சு, வாக்கு ஆகிய*

---

*உம்மையே எம்முடைய தனிப்பெரும் தலைவராயும் மன்னராயும் ஏற்றுக்கொள்ள நாங்கள் சித்தமாயிருக்கிறோம்; அழகில்தான் உமக்கு மோகம் என்றால், எந்தப் பேரழகியை நீர் கேட்டாலும் அவளை உம் முன்னே கொண்டுவந்து நிறுத்துகிறோம்'' என்று சொன்னார்கள், அந்த அரபுத் தலைவர்கள். இவற்றுக்கெல்லாம் கைம்மாறாக அவர்கள் கோரியது, பெருமானார் அவர்கள் தங்களது பணியைக் கைவிட்டுவிட வேண்டும் என்பதுதான்.*

*சாதாரண எந்த மனிதனையும் அவர்களது இந்த ஆசை வார்த்தை மயக்கியிருக்கும். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்களின் கண்முன்னே அவையெல்லாம் தூசுகளாய்த் தோன்றின. பெருமானாரவர்கள் அளித்த பதில் குறைஷித்தலைவர்களின் தலையில் இடியென இறங்கியது. நிச்சயம் இந்த முயற்சியில் வெற்றியடையலாம் என அவர்கள் கட்டியிருந்த மனக்கோட்டை தகர்ந்து, ஏமாற்றமுற்றனர்.*

*''கேளுங்கள்! உங்களுடைய பொருளோ பேரரசோ எனக்குத் தேவை யில்லை. மனித குலத்திற்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்கே இறைவன் என்னை அனுப்பியிருக்கிறான். அவனுடைய செய்தியைத்தான் நான் உங்களிடம் சமர்ப்பிக்கிறேன். அதை ஏற்றுக்கொண்டால் இவ்வு லகத்தில் பாராட்டும் மகிழ்ச்சியும் அடைவீர்கள்; மறுவுலகிலும் உங்க ளுக்கு நிலையான பேரின்பம் கிட்டும். இறைவனின் அறிவுரையை*

வற்றின் மொழிகூட அந்தக் குறிப்பிட்ட வாக்கைப் போன்று (குர்ஆன் வசனங்களைப் போன்று) அவ்வளவு உயர்ந்ததா யிருக்கவில்லை. இன்றுங்கூட நாம் அவருடைய சொந்த உரைகளோடு அந்தக் குறிப்பிட்ட வாக்கை (குர்ஆனை) ஒப்பிட்டுப் பார்க்கும்போது இரண்டிலும் வெளிப்படையான வேறுபாட்டை உணர முடிகிறது.

அந்த மனிதர்-அந்தக் கல்லாத பாலைவனவாசி ஞானமும் நுட்பமும் செறிந்த விஷயங்களைக் கூறத்தொடங்கினார். அத்தகைய விஷயங்களை அதற்கு முன் எந்த மனிதனும் கூறியதில்லை. அதற்குப் பின் இன்று வரையிலும் யாராலும் அதுபோல் கூறமுடியவில்லை. நாற்பது வயதுக்கு முன்பாக அந்த மனிதரின் சொந்த நாவிலிருந்தும்கூட அத்தகைய விஷயங்கள் வெளிவந்ததை யாரும் கேட்டதே இல்லை.

அந்தக் கல்லாத மனிதர், ஒழுக்கவியல், சமூகவியல், வாழ்வியல், அரசியல் மற்றும் மனித வாழ்வு தொடர்பான எல்லா விவகாரங்களைப் பற்றியும் உயர்ந்த, நுட்பமான சட்டங்களை வழங்கினார். மிகப்பெரும் கல்வி மேதைகளும் அறிஞர்களும் தமது சிந்தனை, நீண்டகால அனுபவம் ஆகியவற்றால் அச்சட்டங்களின் நுட்பங்களைத் தம் வாழ்நாள் முழுவதும் அலசி ஆராய்கிறார்கள். அந்த ஆராய்ச்சியும், மனித அனுபவமும் எந்த அளவுக்குப் பெருகியதோ அந்த அளவுக்கு அச்சட்டங்

---

நீங்கள் புறக்கணித்தால் நிச்சயமாக எனக்கும் உங்களுக்குமிடையே அவன் தீர்ப்பு வழங்குவான்'' என்று பதில் அளித்தார்கள் பெருமானார் (ஸல்) அவர்கள்.

மற்றும் ஒருமுறை அரபுத் தலைவர்களின் நிர்ப்பந்தத்தைச் சகிக்க முடியாமல், பெருமானார் (ஸல்) அவர்களின் பணியைக் கைவிடச்செய்ய அவர்களது பெரிய தந்தையார் முயன்றபோது பெருமானார் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்:

''பெரிய தந்தை அவர்களே! எனது வலக்கையில் சூரியனையும், இடக்கையில் சந்திரனையும் கொண்டுவந்து வைத்து எனது பணியைக் கைவிடுமாறு அவர்கள் கோரிய போதிலும், நான் அதைக் கைவிட மாட்டேன். எனக்கு இறைவன் வெற்றியைத் தருகிற வரையில் அல்லது அம்முயற்சியில் நான் மடிகிற வரையில் அதைக் கைவிட மாட்டேன்.''

இதுதான் இஸ்லாத்தின்-திருநபியவர்களின் குணநலனாயிருந்தது. **கு.அ.**

களில் பொதிந்திருக்கும் நுட்பங்களும் அதில் அமைந்துள்ள விவேகமும் மேன்மேலும் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கின்றன. அச்சட்டங்கள் அத்தகைய ஆழ்ந்த நுட்பங்களும் சிறப்பம்சங்களும் கொண்டு திகழ்கின்றன. உலக அனுபவங்கள் எந்த அளவுக்குப் பெருகி வருகின்றனவோ அந்த அளவுக்கு அவற்றின் நுட்பங்கள் மேலும் அதிகமாக வெளிப்பட்டு வருகின்றன. ஆயிரத்து முந்நூறு ஆண்டுகள் கடந்துவிட்ட பின்னரும் அவர்கள் வழங்கிய சட்டங்களில் எத்தகைய மாறுதலும் செய்யவேண்டிய அவசியம் இன்றளவும் தோன்றவில்லை. உலகச் சட்டங்கள் ஆயிரம் முறை ஆக்கப்பட்டன; அழிக்கப்பட்டன. ஒவ்வொரு சோதனையிலும் அவை பயனற்றுப் போயின; ஒவ்வொரு முறையும், அவற்றில் மாறுதல் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால் அந்தப் படிக்காத பாலைவனவாசி, யாருடைய துணையுமின்றித் தன்னந்தனியே உருவாக்கி உலகுக்கு அளித்த சட்டங்களிலே ஓர் அம்சம் கூட அகற்றிவிடத் தக்கதாய் இல்லை.

அம்மனிதர், இருபத்து மூன்று ஆண்டுகாலத்தில் தம்முடைய ஒழுக்கம், நற்செயல், கண்ணியம் மற்றும் உயர் போதனை ஆகியவற்றின் வலிமையால் தம்முடைய பகைவர்களையும் தம் நண்பர் ஆக்கினார். எதிர்த்தவர்களையும் தமக்கு ஒத்தவர்களாய் மாற்றினார். பெரும் பெரும் சக்திகள் அவரை எதிர்த்துக் கிளம்பின. ஆனால் இறுதியில் அவை தோல்வியுற்று அவர் காலடியில் வந்து வீழ்ந்தன.

அவர் வெற்றிபெற்ற பின் எந்தப் பகைவன் மீதும் பழிக்குப் பழி வாங்கவில்லை. எவர் மீதும் கொடுமை இழைக்கவில்லை. தம்முடைய சிறிய தந்தையைக் கொலை செய்து, அவருடைய ஈரலை கடித்துத் துப்பிய வன்னெஞ்சர்களை அவர்* வெற்றி கொண்ட நிலையிலும் மன்னித்தார். தம்மைக் கல்லால் அடித்து, தாயகத்திலிருந்து வெளியேற்றி

---

* உஹதுப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது பெருமானார் (ஸல்) அவர்களின் சிறிய தந்தை ஹம்ஸா (ரலி) அவர்கள் களத்தில் வீழ்ந்ததும், அவருடைய ஈரலை எடுத்துக் கடித்தாள் அரபு இறைநிராகரிப்பாளர்களின் தலைவனுடைய மனைவியான ஹிந்தா என்பாள்.

*யவர்களைத் தாம் வெற்றி கொண்ட நிலையிலும் மன்னித்து அருளினார். அவர் எவருக்கும் ஒருபோதும் மோசம் செய்த தில்லை. வாக்குக் கொடுத்து முறித்ததில்லை. போரின்போது கூட எவர் மீதும் அக்கிரமம் புரியவில்லை. அவருடைய கடுமையிலும் கடுமையான பகைவர்களால்கூட ஒருபோதும் அவர் கொடுமை இழைத்ததாகவோ, பாவம் செய்ததாகவோ குற்றம் சாட்ட இயலவில்லை. இத்தகைய நற்செயல்கள்தாம் இறுதியாக அனைத்து அரபு நாட்டினரின் நெஞ்சங்களையும் கவர்ந்தன.*

*பிறகு அம்மனிதர், தம்முடைய போதனைகளாலும், அறிவு ரைகளாலும் நீங்கள் முன்பே படித்து அறிந்த இருட்டறை மக்களைக் காட்டுமிராண்டித் தனத்திலிருந்தும் அறியா மையிலிருந்தும் மீட்டு உயர்தரமான, நாகரிகம் மிக்க சமுதாய மாக்கினார். எத்தகைய சட்டத்திற்கும் கட்டுப்படத் தயாரா யில்லாத அரபியர்களை, மாபெரும் சட்டங்களுக்குக் கட்டுப் பட்டிருக்கும்படிச் செய்தார். உலக வரலாற்றிலேயே வேறு எந்தச் சமுதாயமும் அவ்வாறு சட்டங்களுக்குக் கட்டுப்பட்டி ருந்ததாய்க் காண முடியவில்லை. எவருக்கும் கீழ்ப்படியச் சித்தமாயில்லாத அரபியர்களை அவர் ஒரு மகத்தான ஆட்சிக்குக் கீழ்ப்படியும்படிச் செய்தார்.***

---

** இஸ்லாத்தைப் பற்றி எந்த வகையிலாயினும் குறைகூற வேண்டும் என்பதிலேயே குறியாக இருக்கும்* Sir William Muir *என்பார்,* Life of Mohammad *எனும் தமது நூலில் பின்கண்டவாறு குறிப்பிட்டிருக்கிறார்:*

*''அக்காலத்தில், அராபிய மக்களிடையே எண்ணிலடங்காமல் மண்டிக்கிடந்த குலப்பிரிவுகள்தாம் நம் கவனத்தை ஈர்க்கும் முதல் வியப்பாகும். அவர்கள் தனித்தனிக் கூட்டங்களாக வாழ்ந்தனர். போரும் பூசலும் அடிக்கடி அவர்களி டையே நிகழ்ந்து கொண்டேயிருந்தன. இரத்தத் தொடர்பு, மற்ற தொடர்புகளால் ஒன்றுபட்டவர்களும்கூட, அற்பமான காரணங்களைக் கூறிப் பிளவுபட்டு, ஒருவருக்கொருவர் தீராத பகைமை பாராட்டிக் கொள்வதற்கான சந்தர்ப்பங்களை எதிர்நோக்கி இருந்தார்கள். இஸ்லாம் தோன்றிய காலத்தில் அரேபியா இருந்த நிலையை ஆராயும்பொழுது, இவ்வாறு பல உருவம் காட்டும் கண்ணாடிபோல, எல்லாவற்றிலுமே வேறுபாடு கொண்ட உடன்பாடுகளும் முரண்பாடுகளும் காட்சியளிக்கின்றன. அவர்களை ஒன்றுபடுத்த அதுவரை நடந்த எல்லா முயற்சிகளும் கருவில் சிதைந்தவையாகிவிட்டன. அவர்களுடைய பிளவைப் போக்கி ஒன்றுபடுத்தவல்ல சக்தி எது என்பது தீராத பிரச்னையாக என்றென்றும் இருந்து வந்தது. இறுதியில் முஹம்மத் (ஸல்) ஒருவரால் தாம் அதைத் தீர்க்க முடிந்தது.''*

*எந்த மக்கள்மீது ஒழுக்கத்தின் வாசனையே படாமல் இருந்ததோ, அந்த மக்களின் ஒழுக்கத்தை பெருமளவு தூய்மையாக்கிவிட்டார். இதைக்கண்டு இன்று அந்த மக்களின் வரலாறுகளைப் படித்து உலகமே பிரமிப்படைகிறது.**

*அதுவரை உலகச் சமுதாயங்களிலே மற்றவர்களைவிட மிகவும் பிற்போக்கு அடைந்து கிடந்த அரபியர்கள், அந்தத் தனிமனிதரின் முயற்சியால் இருபத்து மூன்றே ஆண்டுகளில் ஒரேயடியாக பெரும் வலிமை வாய்ந்தவர்களாய் மாறினார்கள். எந்த அளவுக்கு எனில், அவர்கள் பாரசீகம், ரோமாபுரி, எகிப்து ஆகிய நாடுகளின் மாபெரும் ஆட்சிகளையே தோல்வி காணச் செய்தனர். அதேநேரம், அவர்கள் உலகுக்கு நேர்மையான நாகரிகம், பண்பாடு, ஒழுக்கம், மனிதத்தன்மை பற்றிய பாடங்களைப் போதித்தனர். இஸ்லாத்தின் ஒரே போதனையையும், ஒரே (ஷரீ அத்தையும்) மார்க்கச் சட்ட திட்டத்தையும் கொண்டு ஆசியா, ஆப்ரிக்கா, ஐரோப்பாவைச் சேர்ந்த நாடுகளின் தொலைதூர மூலைமுடுக்குகளிலும் அவர்கள் பரந்து நின்றனர்.*

*இவை யாவும் அராபியச் சமுதாயத்திற்குக் கிடைத்த பலன்களாகும். இவற்றைக் காட்டிலும் அதிகமாக வியப்புக்குரிய பலன்கள், அந்தக் கல்வியறிவற்ற மனிதரின் அறிவுரைகளால் உலகம் முழுவதற்குமே கிடைத்தன. அவர் அகில உலகின் எண்ணங்களிலும், சட்டங்களிலும், பழக்கவழக்கங்களிலும் பெரும் புரட்சியையே தோற்றுவித்தார். அம்மனிதரைத் தங்களுடைய வழிகாட்டியாக ஏற்றுக் கொண்டவர்களை விடுங்கள்! பெரும் வியப்பு என்னவெனில், எவர் அவரைப் பின்பற்றிட மறுத்தனரோ, எவர் எதிரிகளோ, பகைவர்களோ அவர்களும் அம்மனிதரின் செல்வாக்கிலிருந்து தப்பிக்க*

---

** ஜாஃபர் இப்னு அபீதாலிப் (ரலி) அவர்களின் முக்கியமான சொற்பொழிவு ஒன்றை இங்கே எடுத்துரைப்பது மிகப் பொருத்தமாக இருக்கும். மக்கமா நகரிலிருந்த முஸ்லிம்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் எல்லையைக் கடந்தபொழுது அவர்களில் சிலரை அண்டை நாடான அபிசீனியாவிற்கு குடிபெயர்ந்து செல்ல பெருமானார் (ஸல்) அவர்கள் அனுமதித்தார்கள். முஸ்லிம்களின் கூட்டம் ஒன்று அவ்வாறே அங்கு குடிபெயர்ந்து சென்றது. ஆனால் முஸ்லிம்களுக்கு எல்லா வகையிலும்*

முடியவில்லை. அக்காலத்தில் உலகம் ஏகத்துவக் கொள் கையை மறந்திருந்தது. அம்மனிதர், மீண்டும் இந்தப் பாடத்தை நினைவூட்டினார். உருவ வழிபாடு செய்பவர்கள், இணைவைப்பவர்கள் ஆகியோரின் மதங்களும்கூட ஏகத்து வத்தை ஏற்றுக்கொண்டு அதற்கு ஆதரவாகப் பேசுவதைத்

---

*தொல்லை கொடுக்க வேண்டும் என்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்த குறைஷிகள், அதைக் கண்டு வாளாவிருக்கவில்லை. அவர்களும் அந்த முஸ்லிம்களைப் பின்தொடர்ந்து அபிசீனியா சென்றனர். குடி பெயர்ந்து வந்தவர்களைத் தங்களிடம் திரும்ப ஒப்படைக்குமாறு அவர்கள் அபிசீனிய மன்னர் நஜாஷியிடம் வேண்டினர். அப்பொழுது மன்னர் நஜாஷியின் அரசவையில், இறைத்தூதர் அவர்கள் அரேபியாவில் எத்தகைய புரட்சியைத் தோற்றுவித்துள்ளார்கள் என்பதை விளக்க ஜாஃபர் (ரலி) உரையாற்றினார். அதன் சுருக்கம் பின்வருமாறு:*

*''மன்னரே! நாங்கள் அறியாமையில் சிக்கியிருந்தோம். சிலைகளை வணங்கி வந்தோம். இறந்த மிருகங்களின் மாமிசங்களைக் கூடப் புசித்து வந்தோம். எல்லா விதமான இழிசெயல்களையும் செய்துகொண்டிருந்தோம். எங்களுடைய உறவினர்களுக்கு அளித்த வாக்குறுதிகளை மீறிக் கொண்டிருந்தோம். அண்டை வீட்டினரைக் கொடுமைப்படுத்திக் கொண்டிருந்தோம். எங்களிடையே வலுத்தவர்கள், இளைத்தவர்களை அடக்கி ஆண்டு வந்தார்கள். இறுதியாக எங்களை நல்வழிப்படுத்த இறைவன் ஒரு தூதரை அனுப்பினான். அவருடைய ஒழுக்கம், நேர்மை, உண்மை, இறைபக்தி ஆகியவற்றை நாங்கள் அனைவரும் நன்றாக அறிந்திருந்தோம். அவர் ஒரே இறைவனை வணங்குமாறு எங்களுக்குப் போதித்தார். கற்களையும் சிலைகளையும் வணங்க வேண்டாமென்று கூறினார். உண்மையையே பேசுமாறும், பொறுப்புகளை நிறைவேற்றுமாறும், உறவுகளை மதித்து நடக்குமாறும், அண்டை வீட்டுக்காரருக்கு நன்மை செய்யுமாறும் எங்களைத் திருத்தினார். அநியாயங்கள் புரிவதையும் இரத்தம் சிந்துவதையும் தவிர்க்குமாறு அறிவுறுத்தினார். பொய் சொல்லுதல், அனாதைகளின் உடைமைகளை அபகரித்தல், பெண்களின் கற்பைப் பற்றி அவதூறு கூறுதல் போன்ற கேவலமான செயல்கள் எல்லாவற்றையுமே எங்களுக்கு அவர் விலக்காக்கினார். ஆதலால் அவர்மீது நம்பிக்கை கொண்டோம். அவரைப் பின்பற்றினோம். அவருடைய அறிவுரையின்படி செயலாற்றினோம்...''*

Arthur Leonard *என்பார் கூறுகிறார்: ''இஸ்லாம் உண்மையிலேயே ஓர் அரும்பணி ஆற்றியிருக்கிறது. மனித குல வரலாற்றில் அது தனி முத்திரை ஒன்றைப் பதித்திருக்கிறது. எக்காலத்திலும் அழிக்க முடியாத வண்ணம் அந்த முத்திரை ஆழப் பதிந்திருக்கிறது. உலகம் அறிவொளி பெற்று வளரும் பொழுதுதான் அது முழுமையாக ஒப்புக்கொள்ளப்படும்.''*

John Dovenport *எனும் தலைசிறந்த விஞ்ஞானி குறிப்பிடுகிறார்: ''பத்தாம் நூற்றாண்டு முதல் ஐரோப்பாவில் வளர்ந்தோங்கி வரும் ஞானங்களெல்லாம் அவை பௌதீகமாகவோ, கணிதமாகவோ, வானவியலாகவோ, தத்துவ இயலாகவோ இருந்தபோதிலும் சரி, அவை ஆரம்பத்தில் அரேபியப் பள்ளிகளி லிருந்து இங்கு வந்தவை என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஸ்பெயின்*

தவிர வேறு வழியில்லாது போகுமளவுக்கு, அம்மனிதர் ஏகத்துவக் கொள்கையை உரக்க முழங்கினார். வழங்கிய ஒழுக்க விதிகள், அனைத்துலக ஒழுக்கவியல்களிலும் பரவு மளவுக்கும் என்றும் பரவிக்கொண்டே இருக்குமளவுக்கும் அம்மனிதர் வலிமை வாய்ந்த ஒழுக்கப் போதனைகளை

---

*நாட்டைச் சேர்ந்த ஸாரஸன் என்பார் தாம் ஐரோப்பியத் தத்துவ இயலின் தந்தை என்று கருதப்படுகிறார்.* 'Islam's Contribution to Science and Civilization' *எனும் தன்னுடைய நூலில் ஏ.கரீம் தேவான் போர்டின் இந்தக் குறிப்பைத் தந்துள்ளார்.*

*புகழ்பெற்ற பிரிட்டிஷ் தத்துவ மேதை* Bertrand Russell *எழுதுகிறார்:*

*''இராணுவ பலத்தில் மாத்திரம்தான் கீழை நாடுகள் உச்சநிலை வகித்தன என்பதில்லை. ஐரோப்பா அநாகரிகத்தில் மூழ்கிக் கிடந்த அந்தக் காலத்தில் விஞ்ஞானம், தத்துவம், கலைகள், கவிதைகள் மற்றும் எல்லாத் துறைகளிலும் இஸ்லாமிய உலகம் செழிப்புற்று விளங்கியது. மன்னிக்க முடியாத புரட்டாக, அந்தக் காலத்தை 'இருண்ட காலம்' என்று ஐரோப்பியர் கூறுகின்றனர். உண்மையில் ஐரோப்பாவில்தான், அதிலும் கிறிஸ்தவர்களின் கையிலிருந்த ஐரோப்பாவில்தான் அப்பொழுது இருள் சூழ்ந்திருந்தது. அச்சமயத்தில் முஸ்லிம் களின் ஆட்சியிலிருந்த ஸ்பெயினிலோ கலைப் பண்பு ஒளிவீசிக் கொண்டிருந்தது.''* Pakistan Quarterly Volume IV NC.3

*தலைசிறந்த வரலாற்று நூலாசிரியர்* Robert Briffault *என்பார்,* 'The Making of the Humanity' *என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்:*

*''முன்பிருந்த பரிணாம வளர்ச்சிகளையெல்லாம் கடந்து இன்றுள்ள நிலையை அடைவதற்கு எந்தக் குணவியல்புகள் காரணமாக இருந்ததோ - அந்தக் குணவியல்புக்கு வேண்டிய உத்தரவாதத்தை அரேபியர்களின் தொடர்பு இல்லாதிருந்தால் ஐரோப்பா நவீன நாகரிகத்தை அளித்திருக்க முடியாது. இஸ்லா மியப் பண்பாட்டின் திடமான செல்வாக்கு ஊடுருவாத எந்த ஒரு சிறு அம்சத்தை யும் மனிதகுல வளர்ச்சியில் காணவே முடியாது. இன்றைய புத்துலகின் தலையான சக்தியாயும், இயற்கை விஞ்ஞானத்திலும் விஞ்ஞான உணர்விலும் அதன் வெற்றிக்கும் பிரதான பிறப்பிடமாயும் திகழ்கிற அந்தச் சக்தியின் தோற்றுவாய் மிகத் தெளிவானதாகவும் வியக்கத்தக்கதாகவும் விளங்குவதைக் காணலாம். புதிய சிந்தனையின் காரணமாகவும், புதுமுறை ஆராய்ச்சிகளின் விளைவாகவும் சோதனைகள் செய்யப்பட்டவிதம், மதிப்பீடுகள் ஆகியவற்றின் பலனாகவும் கிரேக்கர்களுக்கு அதுவரை தெரியாதிருந்த கணித முறை வளர்ச்சியின் அடிப்படையில் அளவை முறைகளைக் கையாண்டனர். அதன் காரணமாகவே ஐரோப்பாவில் விஞ்ஞானம் வளர்ந்தது. அந்த உணர்வுகளும் புதிய முறைகளும் அரேபியர்களால்தான் ஐரோப்பிய உலகுக்கு அறிமுகப் படுத்தப்பட்டிருந்தன.''*

Robert L. Gulick Jr. *என்பார்,* Mohammed the Educator *எனும் தமது நூலில் முன்னேற்றக் கல்விச் சங்கத்தின் நிறுவனரான* Stanwood Cobb *என்பாரின் கீழ்க்கண்ட குறிப்பைத் தந்துள்ளார்:*

*''ஐரோப்பாவில் மறுமலர்ச்சியை உண்டாக்கியதே இஸ்லாம்தான்.''*

வழங்கினார். அம்மனிதர் சட்டம், அரசியல், நாகரிகம், சமூக வியல் தொடர்பாக மிக முதிர்ந்த, உண்மையான கொள்கை களை வழங்கினார். மாற்றாரும்கூட எடுத்துத் தமதாக்கிக் கொள்ளுமளவுக்கு இக்கொள்கைகள் சிறந்து விளங்கின; தொடர்ந்து விளங்கிக் கொண்டேயிருக்கின்றன.*

உங்களுக்கு முன்பே விளக்கியுள்ளபடி அம்மனிதர் ஒரு மௌட்டீகச் சமுதாயத்தில்-இருள் சூழ்ந்த ஒரு நாட்டில் பிறந்தார். நாற்பது வயதுவரை ஆடுகளை மேய்ப்பதிலும், வணிகம் செய்வதிலும் ஈடுபட்டிருந்ததைத் தவிர அவர் வேறு எந்தத் தொழிலும் புரியவில்லை. எத்தகையக் கல்வியும், பயிற்சியும் பெறவில்லை. கொஞ்சம் சிந்தியுங்கள்! நாற்பதா வது வயதை அடைந்தவுடன் எங்கிருந்து அவருள் திடீ ரென்று அத்தனை சக்திகளும் ஒரேயடியாக வந்துசேர்ந்தன? எங்கிருந்து அவருக்கு அத்தகைய ஞானம் பிறந்து வந்தது? எங்கிருந்து அவருள் அந்த வல்லமை தோன்றியது?

ஒரே ஒரு தனி மனிதர் ஒரே வேளையில் இணையற்ற படைத் தளபதியாகவும் இருக்கிறார்; உயர்தரமான நீதிபதியாகவும் விளங்குகிறார்; சட்ட நிபுணராகவும் இருக்கிறார்; ஈடற்ற தத்துவ ஞானியாகவும் விளங்குகிறார்; ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் சீர்திருத்துபவராகவும் திகழ்கிறார்;

---

* சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் 25.11.69 பதிப்பில் ஜப்பானின் முன்னாள் இந்தியத் தூதுவர் பத்ருத்தீன் தய்யூப்ஜீ அவர்கள் எழுதிய கட்டுரையிலுள்ள கீழ்க்கண்ட கருத்துகள் கவனித்தக்கவை:

● ''ஹிந்துச் சட்டத்தில் வாரிசு உரிமைகள், விதவைத் திருமணம் ஆகியவை பற்றிய சட்டங்கள் மிகவும் பிற்போக்கான முறையில் இருந்ததால், இஸ்லாமிய ஷரீஅத் சட்டத்தைத் தழுவி, ஹிந்துச் சட்டத்தில் பல திருத்தங் களை இந்திய அரசு செய்தது. ஹிந்துச் சட்டத்தை இஸ்லாமியச் சட்டத்திற்குச் சமமாக உயர்த்த வேண்டும் என்பதே இந்திய அரசின் நோக்கமாயிருந்தது.''

● ''எவரேனும் ஒருவர் தம் கடன்களைத் தீர்க்காமல் இறந்திருந்தால், அதை நானே தீர்த்து விடுகிறேன். எவரேனும் ஒருவர் தம் குடும்பத்தினரை அநாதைகளாக விட்டு இறந்திருந்தால், அக்குடும்பத்தினருக்கு ஆதரவு அளிக்கிறேன். அத்தகையோர் என்னிடம் வரட்டும்'' என்று ஒருமுறை பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார். அவருடைய வாழ்வு முழுமையும் இதற்கு விரிவாகச் சான்று கூறுகிறது.

வியப்புக்குரிய அரசியல் மேதையாகவும் இலங்குகிறார். அவர் இத்தனை அலுவல்களுக்கு மத்தியிலும் இரவில் மணிக்கணக்காகத் தம்முடைய இறைவனையும் தொழு கிறார்; தம் மனைவி, மக்களின் உரிமைகளையும் வழங்கு கிறார்; ஏழைகளுக்கும் துன்பப்படுவோருக்கும் தொண்டு புரிகிறார். ஒரு பெரிய நாட்டின் அரச பதவி கிடைத்த பின்பும், அவர் ஃபக்கீர் போன்று எளிய வாழ்வே வாழ்கிறார்; பாய்மீது துயில்கிறார்; முரட்டுத் துணிமணிகளையே அணிகிறார்; எழைகள் உண்ணும் உணவே உண்ணுகிறார்; சிற்சில சமயங் களில் பட்டினி கிடக்கும் நிலைமைக்கும் ஆளாகிறார்.

இத்தகைய வியப்புக்குரிய ஆற்றல்களைக் காட்டி, ''நான் மனிதரைக் காட்டிலும் மேம்பட்டவன்'' என்று அவர் கூறியிருந்தாலும், அவரை எவரும் மறுத்திருக்க முடியாது. ஆனால் அவர் என்ன சொன்னார் தெரியுமா? இவை யாவும் தம் வல்லமைகள் என்று கூறவில்லை. தமக்குச் சொந்தமாகத் தம்மிடம் ஒன்றுமே இல்லை என்றுதான் அவர் எப்பொழு தும் தெரிவித்தார். ''எல்லாம் இறைவனுடையவை; இறை வனிடமிருந்து வந்தவை. நான் எந்த வாக்கைச் சமர்ப்பித் திருக்கிறேனோ, எதற்கு ஈடாக ஒரு வசனத்தைக்கூட கொண்டு வரவும் மற்றவர்களால் முடியவில்லையோ, அது, என்னு டைய உரையல்ல. அது என் மூளைத் திறமையின் விளைவு மன்று; அது இறைவனின் வாக்காகும். அதற்குரிய பாராட்டு கள் அனைத்தும் இறைவனுக்கே உரியன. என்னுடைய செயல்கள் அனைத்தும் எனது திறமையினால் நடைபெறுப வையல்ல; இறைவனின் ஆணையின்படி நடைபெறுபவை யாகும். இறைவனிடமிருந்து எத்தகைய சமிக்ஞை வருகிறதோ, அதன்படியே நான் செயலாற்றுகிறேன். அதன்படியே போதிக்கிறேன்'' என்றே கூறினார்.

இப்போது கூறுங்கள்! இத்தகைய உண்மை மனிதரை ஏன் இறைத்தூதர் என்று ஒப்புக்கொள்ளக் கூடாது? அகில உலகி லும் ஆதி காலந்தொட்டு இன்றுவரை, இம்மனிதரிடம் இருந்துவந்த உயர் தனிச் சிறப்புகளைப் போல் வேறு எம்மனி தரிடமும் இருந்ததில்லை. இத்தகைய உயர்தனிச்

சிறப்புகளைப் பெற்றிருந்த போதிலும், அவர் பெருமைப் பட்டதேயில்லை. அவற்றைப் பற்றிய பாராட்டுகளைத் தாமே ஏற்க விரும்பவில்லை. எந்த இறைவன், அனைத்தையும் அருளியிருக்கிறானோ, அவனுக்கே யாவற்றையும் உரியன வாக்குகிறார். நாம் அவரை நம்பாமல் இருப்பதற்கு என்ன காரணம் இருக்கிறது? அவர், தம்முடைய சிறப்புகளைக் குறித்து இவையாவும் இறைவனால் அருளப்பட்டவை என்று கூறும்போது, நாம் ''இல்லை, இவையாவும் உங்கள் சொந்த மூளையின் படைப்புகள்'' என்று எப்படிக் கூற இயலும்?

ஒரு பொய்யனோ மற்றவர்களுடைய சிறப்புகளையும் தன்னுடையதாக்கிக் கொள்ள முயற்சி செய்கிறான். ஆனால் அம்மனிதரோ அவ்வாறு செய்யவில்லை. தம்மிடமிருந்த சிறப்புகள் அனைத்தும் தாமே தேடிக் கொண்டவை என்று எளிதாகச் சொல்ல முடிந்த சூழ்நிலையிலும், அச்சிறப்புகள் கிடைத்த மூலாதாரம் யாருக்கும் தெரியாதிருந்த சந்தர்ப்பத்தி லும், அவர் அச்சிறப்புகள் யாவும் தம்முடையவை அல்ல; அவை அனைத்தும் இறைவன் அளித்தவையே எனக் கூறி னார். மேலும், அச்சிறப்புகளின் அடிப்படையில் தாம் மனித தத்துவத்துக்கு மேம்பட்டவர் என்று வாதம் புரிந்தாலும், எவரும் அதை மறுத்திருக்க முடியாது. அப்படியிருந்தும் அவ்வாறு அவர் வாதித்ததேயில்லை. இப்போது கூறுங்கள், அவரைக் காட்டிலும் மேலான - உண்மையான மனிதர் யார் இருக்க முடியும்?

பாருங்கள்! அந்த மனிதர்தாம் அகில உலக இறைத்தூதர், முஹம்மத் முஸ்தஃபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லம் அவர்கள் ஆவார். அவருடைய உண்மையே, அவரு டைய இறைத்தூதுக்குப் போதிய சான்றாகும்; அவருடைய மகத்தான சாதனைகள், அவருடைய ஒழுக்கம், அவருடைய தூய்மையான வாழ்க்கை நிகழ்வுகள் யாவும் வரலாறுகளி லிருந்து நிரூபணமாகின்றன.

எவர் ஒருவர் திறந்த மனதோடு, உண்மையையும் நியாயத்தை யும் புரிந்து கொள்ளும் உணர்வோடு பெருமானாருடைய வாழ்க்கை வரலாற்றினைப் படிக்கிறாரோ - அவருடைய

நெஞ்சமே அம்மனிதர், நிச்சயமாக இறைவனின் தூதரே என்று சான்று பகரும், இறைத்தூதர் இறைவனின் சார்பில் சமர்ப்பித்த வாக்கே குர்ஆன் ஆகும். அந்த ஒப்பற்ற வேத நூலை நன்கு புரிந்து, திறந்த மனதோடு எவர் படித்தாலும் அது நிச்சயமாக இறைவனின் வேதநூல் என்பதையும் எந்த மனித னும் அத்தகைய நூலை ஆக்கவே முடியாது என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும்.

## இறைத்தூதின் முடிவு:

நிகழ்காலத்தில் இஸ்லாத்தின் உண்மையான, நேரிய வழி யைத் தெரிந்து கொள்வதற்காக முஹம்மத் முஸ்தஃபா (ஸல்-அம்) அவர்களுடைய அறிவுரைகள், புனித குர்ஆன் ஆகியவற்றைத் தவிர வேறு மூலாதாரம் இல்லை என்பதை இப்போது நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனிதகுலம் முழுமைக்கும் இறைவனின் தூதராவார்; அவரோடு இறைத் தூதின் தொடர் இறுதியாக்கப்பட்டுவிட்டது.

அல்லாஹ் மனிதனுக்கு எந்த அளவுக்குப் போதனைகளை அளிக்க விரும்பினானோ அவை அத்தனையையும் தன்னு டைய இறுதித்தூதர் மூலம் அளித்துவிட்டான். இனி எவன் ஒருவன் சத்தியத்தைப் பெற விரும்புகிறானோ - இறைவனின் கீழ்ப்படியும் அடியானாக (முஸ்லிமாக) விரும்புகிறானோ, அவன், இறைவனின் இந்த இறுதித் தூதர் மீது ஈமான் - நம்பிக்கை கொள்வதும் அவர் செய்துள்ள போதனைகளை ஏற்றுக்கொள்வதும் எந்த வழிமுறையை அவர் காட்டியி ருக்கிறாரோ அதைப் பின்பற்றுவதும் இன்றியமையாதவை யாகும்.

## இறைத்தூது முடிவுற்றதற்கு ஆதாரங்கள்

இறைத்தூதைப் பற்றிய உண்மையை நாம், முன்பே உங்களுக் குத் தெரிவித்துவிட்டோம். அதைப் புரிந்துகொள்வதாலும், அதைப்பற்றிச் சிந்திப்பதாலும் இறைத்தூதர், ஒவ்வொரு நாளும் பிறப்பதில்லை என்பதும், ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு சமுதாயத்திலும் ஓர் இறைத்தூதர் இருக்க

வேண்டியது அவசியமில்லை என்பதும் உங்களுக்குத் தெரிந்துவிடும். உண்மையில், இறைத்தூதரின் வாழ்வு, போதனையும் அறிவுரையும் செய்ய வேண்டிய வாழ்வாகும். எதுவரை அவருடைய போதனையும் அறிவுரையும் உயிருடன் இருக்கிறதோ, அது அத்தூதரே உயிருடன் இருப்பது போலாகும். இதன்படி முந்திய இறைத்தூதர்கள் உயிருடன் இல்லை. ஏனெனில் அவர்கள் எந்த அறிவுரையை வழங்கியிருந்தார்களோ, அதை உலகம் மாற்றிவிட்டது. அவர்கள் மூலம் வந்த வேத நூல்களுள் ஒன்றேனும் கொண்டு வந்த நிலைமையில் இல்லை. ''நம்முடைய இறைத்தூதர்களுக்கு அருளப்பட்ட மூலவேத நூல்கள் நம்மிடம் இருக்கின்றன'' என்று அத்தூதர்களைப் பின்பற்றுவோரும் வாதம் புரிய முடியாது.

அவர்கள், தங்கள் இறைத்தூதர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் மறந்துவிட்டார்கள். முந்திய இறைத்தூதர்களில் எவருடைய உண்மையான ஆதாரபூர்வமான வரலாறும் இன்று எங்கும் கிடைக்கவில்லை. அவர்கள் எந்தக் காலத்தில் பிறந்தார்கள்? எங்கே பிறந்தார்கள்? அவர்கள் என்ன சாதனைகள் புரிந்தார்கள்? எவ்வாறு வாழ்ந்தார்கள்? எவ்விஷயங்களைப் பற்றி அறிவுறுத்தினார்கள்? மக்களை எச்செயல்களிலிருந்து தடுத்தார்கள்? என்பனவற்றைத் திட்டவட்டமாகக் கூற முடியவில்லை.

இந்த அடிப்படையில் அவர்கள் உயிருடன் இல்லை. ஆனால் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிருடன் இருக்கிறார். ஏனெனில், அவருடைய போதனையும் அறிவுரையும் உயிருடன் இருக்கின்றன. அவர் வழியாக அருளப்பட்ட குர்ஆன் மூலச் சொற்களுடன் இருக்கிறது. அதில் ஓர் எழுத்தும், ஒரு புள்ளியும், ஒரு ஜேர், ஜபரும் மாறவில்லை. அவருடைய மொழிகளும், அவருடைய செயல்களும் அப்படி அப்படியே அனைத்தும் பாதுகாப்பாக இருக்கின்றன. ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கும் மேற்பட்டு காலம் கடந்து போனபின்னரும், நாம் அண்ணல் அவர்களை நேரில் காண்பதைப் போலவே வரலாற்றில்

அவருடைய உருவத்தைத் தெளிவாகப் பார்க்கிறோம். அண்ணல் அவர்களின் வாழ்க்கையைப் போல் உலகில் வேறு எந்த மனிதருடைய வாழ்க்கையும் அவ்வளவு பாதுகாப்பா யில்லை. நாம், நமது வாழ்க்கையின் ஒவ்வொரு விவகாரத் திலும், எல்லா வேலைகளிலும் அண்ணல் அவர்களின் வாழ்விலிருந்து பாடம் பெற முடியும். அது ஒன்றே அண்ணல் அவர்களுக்குப் பின்பு, வேறு எந்த இறைத்தூதரும் தேவையில்லை என்பதற்குப் போதிய ஆதாரமாகும்.

ஓர் இறைத்தூதருக்குப் பின்னர் மற்றோர் இறைத்தூதர் வரு வதற்கு மூன்று காரணங்கள்தாம் இருக்க முடியும்.

1. முந்திய இறைத்தூதரின் போதனையும், அறிவுரையும் அழிந்துபோய், அவற்றை மீண்டும் வழங்க வேண்டிய தேவை இருக்க வேண்டும்.

2. முந்திய இறைத்தூதரின் அறிவுரை முழுமை பெறாமல் இருந்து, அதில் மாறுதலோ, கூடுதலோ செய்ய வேண்டிய அவசியம் இருக்க வேண்டும்.

3. முந்திய இறைத்தூதரின் அறிவுரை ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்கு மட்டும் கிடைத்து இதர சமுதாயம், அல்லது சமுதாயங்களுக்காக வேறு இறைத்தூதரின் தேவையும் அவசியமும் ஏற்பட வேண்டும்.

இந்த மூன்று காரணங்களும் இப்போது இல்லை.

1. முஹம்மத் (ஸல்-அம்) அவர்களின் போதனையும், அறி வுரையும் உயிருடன் இருக்கின்றன. அவருடைய (தீன்) மார்க்கம் என்னவாயிருந்தது, எத்தகைய அறிவுரையை அவர் கொண்டுவந்தார், எந்த வாழ்க்கை முறையை அவர் நிலை நாட்டினார், எந்த வழிமுறைகளை அழிக்கவும், ஒழிக்கவும் முயற்சி மேற்கொண்டார் எனும் விஷயங்களை எல்லா சமயமும் அறிந்துகொள்ளக்கூடிய விதத்தில் அவற்றின் மூலாதாரங்கள் அனைத்தும் முழுமையாய், பாதுகாப்பாக இருக்கின்றன. ஆகையால், அண்ணலாரின் போதனையும், அறவுரையும் அழியாமலே இருக்கும்போது, அவற்றை

மீண்டும் புதிதாகச் சமர்ப்பிப்பதற்கு என்று வேறு தூதர் வரவேண்டிய அவசியம் இல்லை.

2. அண்ணலாரின் மூலமாக உலகத்திற்கு இஸ்லாத்தின் முழுமையான போதனை கொடுக்கப்பட்டுவிட்டது. இதில் இப்போது கூட்டவோ, குறைக்கவோ வேண்டிய அவசியமோ, ஏதாவது குறை இருந்து அதை நிறைவு செய்ய வேறு தூதர் வரவேண்டிய அவசியமோ இல்லை. ஆகையால் இரண்டாவது காரணமும் நீங்கிவிடுகிறது.*

---

* காலம் கடந்துவிட்டதைத் தகுந்த காரணமாகக் காட்டிப் புதிய வழிகாட்டுதல் தேவை என்றும், சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன்னர் அறிவிக்கப்பட்ட ஒரு மதம், அநேகமாகப் பழைய புராணமாயிருக்கு மென்றும், இக்காலத் தேவைகளுக்கு அது பொருத்தமாக இருக்காது என்றும் சிலர் கூறுகின்றனர். அந்த ஆட்சேபணைகள் முழுக்க முழுக்க ஆதாரமற்றதாகும். அதற்கான காரணங்கள் சுருக்கமாகக் கீழே தரப்பட்டிருக்கின்றன:

1. என்றென்றும் நிலையாக இருப்பவனும், நடந்தது, நடந்து கொண்டிருப்பது, நடக்கவிருப்பது ஆகிய அனைத்தையும் முற்றிலும் அறிந்தவனுமான அல்லாஹ்வினால் இஸ்லாமிய அறிவுரைகள் அருளப்பட்டிருப்பதால், அந்த அறிவுரைகளுக்கு எக்காலத்திலும் அழிவு கிடையாது. மனிதனுடைய அறிவுக்குத்தான் எல்லையுண்டு. மனிதனுடைய கண்கள் தாம் வருங்காலம் எனும் நீண்ட நெடுஞ்சாலையின் தொலைதூரத்திற்குள்ளே தன் பார்வையை ஊடுருவிச் செலுத்த முடியாது. ஆனால் இறைவனுடைய அறிவோ காலம், இடம் போன்ற எல்லா எல்லைகளையும் கடந்தது; அவனால் அறிய இயலாதது எதுவும் இல்லை.

2. இஸ்லாம் மனித இயல்பை (Human Nature) அடிப்படையாகக் கொண்டது. மனித இயல்போ எக்காலத்திலும், எந்த யுகத்திலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. ஆரம்பகால மனிதர்கள் எந்த உருவில் படைக்கப்பட்டார்களோ, அதே உருவில்தான் எல்லா மனிதர்களுமே படைக்கப்படுகிறார்கள். அடிப்படை மனித இயல்புகளும் மாறாமல் அப்படியேதான் இருக்கின்றன.

3. மனித வாழ்வில் மாறுகின்ற அம்சங்களுக்கும் மாறாத அம்சங்களுக்குமிடையே அழகான சமநிலை ஒன்றிருக்கிறது. அனைத்துமே நிரந்தரமாக இருப்பவையுமல்ல. அனைத்துமே மாறக் கூடியவையுமல்ல. அடிப்படைக் கோட்பாடுகளும் அடிப்படைத் தத்துவங்களும் மாற வேண்டியதில்லை. கால மாறுதலோடு வெளித்தோற்றங்கள்தாம் மாறுகின்றன. அவையும்கூடக் கடைப்பிடிக்கப்பட வேண்டிய சில விதிகளைக் (Principles) கருத்தில் கொண்டே மாறுகின்றன. இஸ்லாமோ

*3. அண்ணலார் அவர்கள், ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்காக மட்டுமின்றி, அகில உலகிற்காகவும் தூதராக அனுப்பப் பட்டிருக்கிறார். எல்லா மக்களுக்கும் அவருடைய அறிவுரை போதுமானதாகும். ஆகையால் இனி ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்காகத் தனித்தூதர் வரவேண்டிய அவசியம் இல்லை. இவ்வாறாக மூன்றாவது காரணமும் தேவை இல்லாமல் போகிறது.****

இதே அடிப்படையில்தான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் ***'காத்தமுன் நபிய்யீன்'*** அதாவது இறைத்தூதின் தொடரை முடிவுக்குக் கொண்டு வருபவர் - இறுதித்தூதர் என்று

---

*மாறுபவை, மாறாதவை ஆகிய இரண்டின் தேவைகளுக்குமே பொருத்தமாக அமைந்திருக்கிறது. திருக்குர்ஆனும் ஹதீஸும் இஸ்லாத்தின் நிலையான-மாறா அடிப்படைத் தத்துவங்களை விளக்குகின்றன. அதே சமயத்தில், காலங்கள் தோறும் தேவைகளுக்கு ஏற்ப மார்க்க மாமேதைகள் வழங்கும் விளக்கங்களின் (இஜ்திஹாத்) வாயிலாக அந்த அடிப்படைத் தத்துவங்கள் அமல் நடத்தப்படுகின்றன. நிலையான வாழ்க்கைத் தத்துவங்களுக்கும் அடிப்படைக் கோட்பாடுகளுக்கும் ஏற்ப, மனித சமுதாயப் பரிணாமம் நிரந்தரமாக இயங்குவதற்கு ஓர் அமைப்பை ஏற்படுத்திய ஒரே மதம் இஸ்லாம்தான்.*

*4. விஞ்ஞான பூர்வமாகப் பார்த்தாலும்கூட, பூமியில் மனிதன் எந்த 'நிலை'யில் படைக்கப்பட்டானோ, அந்த 'நிலை'யின் அடிப்படைகள் இன்றளவும் மாறவில்லை; அதே நிலையில்தான் மனித இனம் இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கிறது. இந்த வாழ்க்கை நிலையில் எந்த அடிப்படைப் பரிணாம மாற்றமும் ஏற்படவில்லை. எத்தனையோ நாகரிகங்கள் எழுச்சியுற்று மடிந்துவிட்டன. எத்தனையோ பேரரசுகள் தோன்றிச்சிதைந்துவிட்டன. எனினும் மாபெரும் பிரபஞ்சப் பரிணாமச் சங்கிலித் தொடரில் அந்த நிலை அப்படியேதான் இருந்துகொண்டிருக் கிறது. ஆதலால் சில நூற்றாண்டுகளுக்கு முன் அருளப்பட்ட வழிகாட்டுதல், காலம் கடந்தவுடன் பழமையுற்று-பயனற்றுப் போய்விடுகிறது எனும் வாதம் ஆதாரமற்றதும் பிற்போக்கானதுமாகும். -* ***கு.அ.***

*** நான்காவது காரணம் ஒன்றும் இருக்க முடியும். ஓர் இறைத்தூதர் இருக்கும்போதே அவருடைய உதவிக்காக மற்றோர் இறைத்தூதர் அனுப்பப்படவேண்டிய அவசியமும் ஏற்படுவதுண்டு. நாம், அதைப் பற்றிக் குறிப்பிடாததற்குக் காரணம், குர்ஆனில் இரண்டு உதாரணங்கள் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வுதாரணங்களால் துணை இறைத்தூதர் அனுப்புவது அல்லாஹ்விடம் பொதுவான விதியாக இருக்கவில்லை என்று தெரிகிறது.*

கூறப்படுகிறார்.* இனி உலகுக்கு வேறு இறைத்தூதருக்கான அவசியம் இல்லை. அண்ணல் நபி (ஸல்-அம்) அவர்களின் வழிமுறைகளின்படி நடப்பவர்கள், மற்றவர்களையும் அவற்றின்படி நடக்கச் செய்பவர்கள், அவர்களுடைய அறிவுரைகளைப் புரிந்து, அவற்றைப் பின்பற்றி ஒழுகுபவர்கள், அண்ணலார் அவர்கள் எந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தார்களோ அதன்படி இயங்கும் ஓர் அரசை நிறுவுவோர் ஆகியோரே இப்போது தேவை.

---

وَلٰكِنْ رَّسُوْلَ اللّٰهِ وَخَاتَمَ النَّبِيّٖنَ ط

* திருமறையும் ஹதீஸும் இந்த விஷயத்தை மிகத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

*திருக்குர்ஆன் கூறுகிறது:*

*''முஹம்மத் அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களில் இறுதியானவராகவும் இருக்கிறார்.'' (33:40)*

مَثَلِي وَمَثَلُ الْاَنْبِيَاۤءِ كَمَثَلِ قَصْرٍ اُحْسِنَ بُنْيَانُهٗ تُرِكَ مِنْهُ مَوْضِعُ لَبِنَةٍ فَطَافَ بِهِ النُّظَّارُ يَتَعَجَّبُوْنَ مِنْ حُسْنِ بُنْيَانِهٖ اِلَّا مَوْضِعَ تِلْكَ اللَّبِنَةِ فَكُنْتُ اَنَا سَدَدْتُّ مَوْضِعَ اللَّبِنَةِ خُتِمَ بِيَ الْبُنْيَانُ وَخُتِمَ بِيَ الرُّسُلُ (بخاری ومسلم)

*''தூதர்கள் எனும் நீண்ட சங்கிலித் தொடரில் எனக்குள்ள தொடர்பு ஓர் அரண்மனைக்கு ஒப்பானதாகும். அந்த அரண்மனையோ மிக நேர்த்தியாகக் கட்டப்பட்டிருக்கிறது. அதில் எல்லாமே பூர்த்தியடைந்துவிட்டன; ஒரே ஒரு செங்கல் வைக்கவேண்டிய இடம்தான் காலியாக இருந்தது. அந்தக் காலி இடத்தையும் நான் நிரப்பிவிட்டேன். கட்டடமும் நிறைவடைந்தது. தூதுத்துவமும் இத்துடன் முடிவுற்றுவிட்டது.''*

***(ஆதாரம்: புகாரி-முஸ்லிம்)***

# 4. நம்பிக்கையும் (ஈமானும்) அதன் உட்பிரிவுகளும்

*மேலே படிப்பதற்குமுன் நீங்கள் ஒருமுறை முந்திய அத்தியாயங்களில் தெரிந்துகொண்டவற்றை நினைவுப் படுத்திக் கொள்ளவேண்டும்.*

1. *இறைவனுக்கு மட்டும் கீழ்ப்படிந்து, அவன் ஆணைகளை நிறைவேற்றுவதற்கே 'இஸ்லாம்' என்று பொருள். எனினும் இறைவனைப் பற்றிய உண்மை, அவனுடைய பண்புகள், அவன் விருப்பத்திற்கேற்ப வாழும் வழிமுறை, மறுமையில் பெறப்போகும் வெகுமதி அல்லது தண்டனையைப் பற்றிய சரியான தகவல் ஆகியவற்றை இறைத் தூதர் மூலமாக மட்டுமே தெரிந்துகொள்ள முடியும். எனவே, இஸ்லாம் மார்க்க விளக்கத்திற்கான சரியான சூத்திரம் இப்படியமையும்: ''இறைத்தூதரின் அறிவுரைகள் மீது நம்பிக்கை (ஈமான்) கொண்டு அவர் காட்டிய வழிமுறைப்படி இறைவனுக்குக் கீழ்ப்படிவதுதான் நிறைவான இஸ்லாம்.'' இறைத்தூதரை விடுத்து ஒருவன் தான் உண்மையில் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து அவன் ஆணைகளை நிறைவேற்றுவதாக வாதிட்டாலும் அவன் முஸ்லிம் (இறைவனுக்குக் கீழ்ப்படிபவன்) அல்லன்.*

2. *பண்டைக்காலத்தில் ஒவ்வொரு சமுதாயத்திற்காகவும் தனித்தனி இறைத்தூதர்கள் வந்திருந்தார்கள். ஒரே சமூகத்திலே ஒருவருக்குப்பின் ஒருவராகப் பல தூதர்களும்*

வந்து கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் ஒவ்வொரு சமூகத்திலும் அதன் சொந்த இறைத்தூதர் அல்லது தூதர்கள் போதித்த மதத்திற்கே 'இஸ்லாம்' என்னும் பெயர் இருந்தது. இஸ்லாத்தின் உண்மை நிலை எல்லா நாட்டிலும், எல்லாக் காலத்திலும் ஒன்று போலவே இருந்தபோதிலும் மதச்சட்டங்களும் (ஷரீஅத்) வணக்க முறைகளும் சிறிது மாறுபட்டிருந்தன. இதனால் ஒரு சமூகத்திற்கு இன்னொரு சமூகத்தைச் சேர்ந்த இறைத்தூதரைப் பின்பற்ற வேண்டிய அவசியம் இருக்கவில்லை. ஆனால் அவர்கள் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ளவேண்டியது அவசியமாயிருந்தது.

3. முஹம்மத் முஸ்தஃபா (ஸல்) அவர்கள் இறைத்தூதராக நியமனம் செய்யப்பட்டு அனுப்பப்பட்டதன் மூலமாகவே இஸ்லாமிய அறிவுரைகள் முழுமையாக்கப்பட்டன. அகில உலகிற்கும் ஒரே ஷரீஅத் சட்டம் அனுப்பப்பட்டது. அண்ணலார் அவர்களின் இறைத்தூது ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கோ நாட்டுக்கோ மட்டும் ஏற்பட்டதல்ல. மனித இனம் அனைத்திற்கும் எல்லாக் காலத்திற்கும் ஏற்பட்டதாகும். முந்திய இறைத்தூதர்கள் சமர்ப்பித்த இஸ்லாமிய ஷரீஅத்கள் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்களின் வருகைக்குப்பின் ரத்துச் செய்யப்பட்டு விட்டன. இனிமேல் இறுதித் தீர்ப்பு (கியாமத்) வரை இறைத்தூதர் ஒருவரும் வரப்போவதும் இல்லை. இறைவனிடமிருந்து வேறு ஷரீஅத் இறங்கப் போவதும் இல்லை. ஆகையால் இப்போது முஹம்மது (ஸல்) அவர்களைப் பின்பற்றுவதற்கு மட்டுமே இஸ்லாம் எனப்படும். அவருடைய இறைத்தூதை ஏற்றுக் கொள்ளுதல், அவர் மீது நம்பிக்கை கொண்டு அவர் எதன் மீதெல்லாம் நம்பிக்கை (ஈமான்) கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தியிருக்கிறாரோ அவற்றையெல்லாம் நம்புதல், அவருடைய கட்டளைகளை எல்லாம் இறைவனின் கட்டளைகள் என்று நினைத்து அவற்றுக்குக் கீழ்ப்படிதல் ஆகியனவே இஸ்லாம் ஆகும். இனி முஸ்லிமாயிருப்பதற்கு எவரை நம்பவேண்டியது அவசியமோ, எவரை நம்பாவிட்டால்

*மனிதன் இறை நிராகரிப்பாளன் ஆகிவிடுவானோ அத்த கைய மனிதர் எவரும் இறைவனின் சார்பாக வரப்போவ தில்லை.*

*வாருங்கள்! முஹம்மத் (ஸல்) அவர்கள் எந்த எந்த விஷயங்கள் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்தியிருக்கிறார்; அவை எத்தகைய உண்மை யான விஷயங்கள்; அவற்றை ஒப்புக் கொள்வதால் மனித னின் அந்தஸ்து எவ்வளவு உயர்ந்து விடுகிறது என்பதைப் பற்றி இப்போது நாம் பார்ப்போம்.*

**இறைவன்மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ளல்**

*அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அறிவுரைகளுள் முதலானதும் மிக முக்கியமானதுமான அறிவுரை :*

**லா இலாஹ இல்லல்லாஹு**

*அதாவது அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்கு உரியவன் வேறு எவரும் இல்லை என்பதாகும்.*

لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ

*இந்தக் கலிமாதான் இஸ்லாத்தின் அடிப்படையாகும். ஒரு காஃபிர் - இறை மறுப்பாளன், ஒரு முஷ்ரிக் - இறைவனுக்கு இணைவைப்பவன், ஒரு நாத்திகன் ஆகியோரிலிருந்து ஒரு முஸ்லிமை (இறைவனுக்கு வழிபடுபவனை) வேறுபடுத்து கிற கலிமாவும் இதுவேயாகும்; இந்தக் கலிமாவை ஒப்புக் கொள்வதாலோ, மறுப்பதாலோதான் ஒரு மனிதனுக்கும் இன்னொரு மனிதனுக்கும் இடையே மிகப் பெரிய வேறுபாடு ஏற்பட்டுவிடுகிறது.*

*இதை ஒப்புக்கொள்பவர்கள் ஒரு பிரிவினராயும் ஒப்புக் கொள்ளாதவர்கள் வேறு ஒரு பிரிவினராயும் அமைந்துவிடுகி றார்கள். இதை ஒப்புக் கொள்கிறவர்களுக்கு இவ்வுலகில் இருந்து மறுஉலகு வரை முன்னேற்றம், வெற்றி, நிறைவு ஆகியவை கிடைக்கும். ஒப்புக்கொள்ளாதவர்களுடைய விருப்பம் நிறைவேறாது - இழிவும் தாழ்வும் கிடைக்கும்.*

ஒரு மனிதனுக்கும், மற்றொரு மனிதனுக்குமிடையே ஏற்படும் இந்தப் பெரிய வேறுபாடு சில எழுத்துகளைக் கொண்ட ஒரு சிறிய வாக்கியத்தை நாவால் உச்சரிப்பதால் உண்டாகிவிடுவதில்லை. நாவால் இலட்சக்கணக்கான தடவை மருந்து, மருந்து என்று கூவினாலும் உங்கள் நோய் தீர்ந்து விடாது. மருந்தை உட்கொண்டால்தான் தீரும். இதைப் போலவே வெறும் நாவால் 'லாஇலாஹ இல்லல்லாஹு' என்ற கூறிவிட்டு அதன் பொருள் என்ன - அதைச் சொன்னதால் எவ்வளவு பெரிய விஷயத்திற்கு நீங்கள் ஒப்புதல் அளித்து விட்டிருக்கிறீர்கள்; அந்த ஒப்புதலால் எவ்வளவு பெரிய பொறுப்பு உங்கள் மீது ஏற்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளாவிட்டால் - அவ்வாறு புரிந்து கொள்ளாத உச்சரிப்பால் யாதொரு பயனும் இல்லை. உண்மையில் வேறுபாடு எப்போது ஏற்படும் எனில் 'லா இலாஹ இல்லல்லாஹு'வின் பொருள் உங்கள் மனதில் ஆழப்பதிந்து விட வேண்டும். அதன் பொருள் மீது உங்களுக்கு முழுமையான நம்பிக்கை ஏற்பட்டுவிட வேண்டும். அதற்கு எதிராக எத்தனை கோட்பாடுகள் இருக்கின்றனவோ அவற்றிலிருந்து உங்கள் நெஞ்சம் முற்றிலும் தூய்மையடைந்துவிட வேண்டும்.

தீ சுட்டு விடக்கூடியது என்பதை எவ்வளவு உறுதியாக நம்புகிறீர்களோ அவ்வளவு உறுதியாக இந்தக் கலிமாவின் நம்பிக்கை, உங்கள் மனதிலும் மூளையிலும் ஆழப்பதிந்து விடவேண்டும். எவ்வாறு நெருப்பின் இயல்பைப் பற்றிய நம்பிக்கை அடுப்புக்குள் கை நீட்டுவதிலிருந்து உங்களைத் தடுக்கிறதோ, நஞ்சின் தன்மை பற்றிய நம்பிக்கை அதனை உட்கொள்வதிலிருந்து உங்களை விலக்குகிறதோ அவ்வாறே 'லாஇலாஹ இல்லல்லாஹு' மீதுள்ள நம்பிக்கை உங்களை இறைவனுக்கு இணைவைத்தல், இறைவனை நிராகரித்தல், நாத்திக வாதம் ஆகியவற்றிலுள்ள சின்னஞ் சிறிய விஷயத்திலிருந்தும் தடுத்துவிட வேண்டும்; அவை கோட்பாடு தொடர்பானவையாயிருப்பினும் சரி, நடைமுறை தொடர்பானவையாயினும் சரியே.

**لَآ اِلٰهَ اِلَّا اللّٰهُ 'லாஇலாஹ இல்லல்லாஹு' வின் பொருள்:**

எல்லாவற்றுக்கும் முதலாவதாக 'இலாஹ்' என்று யாரைக் கூறுகிறோம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அரபி மொழியில் 'இலாஹ்' என்பதற்குப் பொருள் 'வணக்கத்துக்கு உரியவன்' என்பதாகும். அதாவது பெருமை, வல்லமை, மேன்மை முதலியவற்றில் ஒப்பற்றவனாக - வழிபடுவதற்கும், அடிமையாகி பணிந்து நிற்பதற்கும், வணக்கத்திற்காகச் சிரம் சாய்ப்பதற்கும் தகுதி வாய்ந்தவனாக விளங்கும் ஒருவன் என்றும் பொருள் தரும்.

'இலாஹ்' எனும் சொல்லுக்கு இப்படியும் ஒரு பொருள் உண்டு: மனிதனால் உணர முடியாத; பிரமிப்பும், திகைப்பும் ஊட்டக்கூடிய அளவுக்கு எல்லையற்றுப் பரந்து விரிந்த சக்தி உடையவன். மேலும் அவன்,எவரையும் சார்ந்திராதவன். மற்றவை அனைத்தும் தம் வாழ்க்கை விவகாரங்களில் அவனைச் சார்ந்திருப்பவை, அவனிடமே உதவிகோரும் நிர்ப்பந்தத்தில் உள்ளவை எனும் கருத்தும் 'இலாஹ்' எனும் சொல்லில் அடங்கியிருக்கின்றது.

'இலாஹ்' எனும் சொல்லில் மறைவு எனும் கருத்தும் காணப்படுகிறது. அதாவது எவனுடைய சக்திகள் மர்மம் நிறைந்தவையாக இருக்குமோ அத்தகையவன் என்றும் கூறுவார்கள். பாரசீக மொழியில் 'குதா', ஹிந்தியில்'தேவ்தா', ஆங்கிலத்தில் 'காட்' (god) எனும் சொற்களின் பொருளும் இதற்குப் பொருத்தமாய் அமைகின்றது. உலகில் இதர மொழிகளிலும் இப்பொருள்படும் குறிப்பிட்ட சொற்கள் உண்டு.*

அல்லாஹு எனும் சொல், உண்மையில் இணைதுணையற்ற ஏக இறைவனின் பெயராகும். லா இலாஹ இல்லல்லாஹு என்பதற்கு அல்லாஹு எனும் பெயர் படைத்த அவனைத் தவிர வேறு 'இலாஹ்'- இல்லை என்று பொருளாகும். இதன்

---

* எடுத்துக்காட்டாக, கிரேக்க மொழியில் Deos, லத்தீன் மொழியில் தேவ்ஸ், கோத்திக் மொழியில் குத் (Guth), டேனிஷ் மொழியில் காத் (Gott) என்பனவாகும். அதிகமான விவரங்கள், 'என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா', 10-ஆம் தொகுப்பு பக்கம் 460 (சிக்காக்கோ 1956) இல் பார்க்கலாம். - **கு.அ.**

*கருத்து என்னவெனில், இப்பிரபஞ்சம் முழுவதிலும் அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்கு உரியவன் வேறு யாரும் இல்லை; அவனைத் தவிர வணக்கத்திற்கும் பணிவதற்கும் கீழ்ப்படிவதற்கும் உரியவன் வேறு யாரும் இல்லை; அவன் ஒருவனே எல்லா உலகங்களின் எஜமானனும் ஆணையாளனும் உரிமையாளனும் ஆவான்; எல்லாப் பொருள்களும் அவனைச் சார்ந்திருக்கின்றன; எல்லாம், அவனிடமே உதவி கோரும் நிர்ப்பந்தத்தில் உள்ளன; அவன் புலனுணர்வுக்கு மறைவாயுள்ளான்; அவனைப் புரிந்து கொள்வதில் அறிவு மலைப்படைகிறது என்பதேயாகும்.*

### لَآ إِلٰهَ إِلَّا اللهُ ‘லா இலாஹ இல்லல்லாஹு’வின் தத்துவம்:

*மேலே கூறப்பட்டவை சொற்களின் கருத்தாகும். இனி அதன் தத்துவத்தைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.*

*நமக்குக் கிடைத்துள்ள - மனிதனின் மிகவும் பண்டைக்கால வரலாற்றுச் சம்பவங்களிலிருந்தும், நமக்குக் காணக் கிடைத்துள்ள பழமையிலும் பழமையான சமுதாயங்களின் சின்னங்களிலிருந்தும் மனிதன், எல்லாக் காலத்திலும் எவரையாவது ஒருவரைக் கடவுளாக ஒப்புக்கொண்டிருந்தான் என்றும், எதையாவது ஒன்றை நிச்சயமாக வணங்கிக் கொண்டிருந்தான் என்றும் தெரிய வருகிறது. இன்றும்கூட உலகில் எத்தனைச் சமூகங்கள் இருக்கின்றனவோ அவை மிகவும் காட்டுமிராண்டித்தனமாய் இருப்பினும் சரி, மிகவும் நாகரிகம் அடைந்தவையாயிருப்பினும் சரி, எவரையாவது கடவுளாக ஒப்புக் கொண்டிருக்கின்றன; அவரை வணங்கியும் வருகின்றன எனும் விஷயம் அவற்றில் காணப்படுகிறது. இதனால் மனிதனிடம் இயற்கையிலேயே இறைவனின் எண்ணம் குடிகொண்டிருக்கிறது என்றும் மனிதனுள் ஓர் உள்ளுணர்வு இருந்து, எவரையாவது கடவுளாக ஏற்றுக் கொள்ளும்படித் தூண்டுகிறது என்றும் தெரிகிறது.*

*அவர் எவர்? அது எந்தப் பொருள்? எனும் கேள்வி பிறக்கிறது.*

நீங்களாகவே உங்கள் இயல்பு மீதும், மக்கள் அனைவருடைய இயல்புமீதும் நோட்டமிட்டுப் பாருங்கள். இக்கேள்விக்கு விடைபெற முடியும்.

மனிதன், உண்மையில் ஒப்பற்ற ஓர் ஆற்றலின் ஆணைக்கு அடிபணிந்தவனாகவே பிறந்திருக்கிறான்; அவன் இயற்கையாகப் பிறரைச் சார்ந்திருக்க வேண்டியவனாகவே இருக்கிறான், பலவீனனாயிருக்கிறான், ஏழையாயிருக்கிறான். அவன் வாழ்வை நிலைத்திருக்கச் செய்வதற்காகக் கணக்கற்ற பொருள்கள் தேவைப்படுகின்றன. ஆனால் அவையோ அவன் வசத்திலில்லை. தாமாகவும் அவை கிடைத்தும் விடுகின்றன; பறிபோயும் விடுகின்றன.

மனிதனுக்குப் பயனுள்ள பல பொருள்கள் இருக்கின்றன. அவன், அவற்றை அடைய விரும்புகிறான். ஆனால் சில சமயம் அவனுக்கு அவை கிடைத்துவிடுகின்றன. சில சமயம் கிடைப்பதில்லை. ஏனெனில் அவற்றைப் பெறுவது அவனுடைய சுயாதிகாரத்துக்கு உட்பட்டதாயில்லை.

அவனுக்கு நஷ்டம் விளைவிக்கும் பல பொருள்கள் இருக்கின்றன. அவனுடைய முழுவாழ்வின் உழைப்பையும் ஒரே நொடியில் அவை பாழ்படுத்திவிடுகின்றன; அவனுடைய ஆசைகளை மண்ணோடு மண்ணாக்கிவிடுகின்றன. சில அவனை நோயிலும், அழிவிலும் ஆழ்த்திவிடுகின்றன. அவன், அவற்றைச் சரிசெய்ய விரும்புகிறான். சில சமயம் சரியாகிவிடுகின்றன; சில சமயம் சரியாவதில்லை. இதனால் அவன் அவை வருவதும், வராததும், சரிசெய்யப்படுவதும், செய்யப்படாததும் தன்னுடைய சுயாதிகாரத்தில் இல்லை என்பதை உணர்ந்துகொள்கிறான்.

மேலும் பல பொருள்கள் இருக்கின்றன. அவற்றின் பிரம்மாண்டத்தையும், பெருமையையும், மேன்மையையும் கண்டு மனிதன் அச்சங்கொள்கிறான். உயர்ந்த மலைகளைப் பார்க்கிறான். நீண்ட நதிகளை நோக்குகிறான். பயங்கரமான பெரிய மிருகங்களைக் காண்கிறான். சூறாவளியையும், வெள்ளப்பெருக்கையும், நில நடுக்கங்களையும் கவனிக்கிறான். மேகங்களின் குமுறல், மின்வெட்டு, இடி முழக்கம்,

விடாது பெய்யும் பெருமழை போன்றவை அவன் முன் தோன்றுகின்றன. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவை சுற்றி வருவது தெரிகிறது. இவை யாவும் எவ்வளவு பெரியன, வலிமை மிக்கன, பெருமை வாய்ந்தன; அவற்றோடு ஒப்பிடும்போது, தான் எவ்வளவு பலவீனமானவன், துச்சமானவன் என்பதை எண்ணுகிறான்.

இயற்கையின் பல்வேறு தோற்றங்களையும், தன்னுடைய பலவீனத்தின் பல்வேறு நிலைமைகளையும் பார்க்கிறான். அவன் மனதில் தானாகவே தன் அடிமைத்தனம், பிறவற்றைச் சார்ந்திருக்கும் இயல்பு, பலவீனம் பற்றிய உணர்வு பிறக்கிறது. அவ்வுணர்வு பிறந்தவுடன் கூடவே இறையுணர்வு -- அதாவது இறைவனைப் பற்றிய எண்ணமும் உண்டாகி விடுகிறது. அம்மாபெரும் சக்திகளுக்கு உரிய பின்னணியைப் பற்றிச் சிந்திக்கிறான். அவற்றின் மேன்மையைப் பற்றிய உணர்வு அவற்றை வணங்கிட சிரம் சாய்க்கும்படி அவனை நிர்ப்பந்திக்கிறது. அவற்றின் சக்தியைப் பற்றிய உணர்வு, அவற்றுக்குமுன் தன் பணிவைச் சமர்ப்பிக்கும்படி அவனைக் கட்டாயப்படுத்துகிறது. அவற்றின் நன்மை விளைவிக்கும் சக்திகளைப் பற்றிய உணர்வு அவற்றுக்குமுன் தன் கஷ்டங்களைத் தீர்க்கும்படிக் கையேந்த கட்டாயப்படுத்துகிறது. அவற்றின் நஷ்டம் விளைவிக்கும் சக்திகளைப் பற்றிய உணர்வு, அவற்றை அஞ்சும்படியும் அவற்றின் கோபத்திலிருந்து தப்பிக்கும்படியும் அவனைக் கட்டாயப்படுத்துகிறது.

எப்பொருள்கள் பிரமாண்டமானவையாகவும் பெரும் சக்தி வாய்ந்தவையாகவும் தோன்றுகின்றனவோ, அல்லது எவ்விதத்திலேனும் லாபமோ, நஷ்டமோ தரக்கூடியன எனும் உணர்வை ஏற்படுத்துகின்றனவோ அவற்றையே கடவுள் என்று மனிதன் கருதத் தொடங்குகிறான். இவ்வாறு அறியாமையின் ஆகக் கீழான படித்தரத்தில் நின்று நினைப்பதால் அவன் மிருகங்களையும், ஆறுகளையும், மலைகளையும் பூஜிக்கிறான். பூமியை வணங்குகிறான். நெருப்பு, மழை, காற்று, சந்திரன், சூரியன் ஆகியவற்றை வழிபடத் தொடங்குகிறான்.

இந்த அறியாமை கொஞ்சம் குறைந்து, சிறிது ஞான ஒளி ஏற்பட்டபின் இப்பொருள்கள் யாவும் தன்னைப் போலவே பிறவற்றைச் சார்ந்திருப்பதும், பலவீனமானவையாக இருப் பதும் அவனுக்குத் தெரிய வருகிறது. மிகப்பெரிய மிருகமும் ஒரு சின்னஞ்சிறு கொசுவைப்போல் இறக்கிறது. மிகப்பெரிய ஆறுகளும் வறண்டு போகின்றன. அவை சிலசமயம் பெருகவும் செய்கின்றன. வடியவும் செய்கின்றன. மலை களை மனிதனே உடைத்துத் தகர்த்துவிடுகிறான். பூமி, பூத்துக் காய்த்து வளம்பெற்று விளங்குவது அதன் சுயாதிகாரத்தி லில்லை. நீர் அதற்குத் துணைபோகவில்லையானால், அது காய்ந்து போகிறது. நீரும் சுயாதிகாரமற்று இருக்கிறது. அதன் வருகை காற்றைச் சார்ந்திருக்கிறது. காற்றும் சுயாதிகாரம் பெற்றிருக்கவில்லை. அது பயனளிப்பதோ அளிக்காமல் போவதோ வேறு பல காரணங்களுக்கு உட்பட்டே இருக்கிறது.

சந்திரனும், சூரியனும், நட்சத்திரங்களும் ஏதோ ஒரு நியதிக்கு உட்பட்டிருக்கின்றன. அந்நியதிக்கு எதிராக அவை ஒரு போதும் ஒருசிறிதும் இயங்க முடியாது. இவை யாவற்றையும் சிந்தித்தபின், மனிதனின் மூளை மறைவான, மர்மம் நிறைந்த சக்திகளின் பக்கம் திரும்புகிறது. கண்முன்னே தோற்ற மளிக்கும் இப்பொருள்களுக்குப் பின்னே சில மறைவான சக்திகள் இருக்கின்றன. அவையே இவை மீது ஆட்சி செய்து கொண்டிருக்கின்றன. எல்லாம் அவற்றின் அதிகாரத்தில் இருக்கின்றன என்று மனிதன் எண்ணும்போதுதான் கடவுளரைப் பற்றிய - தேவதைகளைப் பற்றிய கொள்கை உருவாகிறது. ஒளி, காற்று, நீர், நோய், உடல்நலன் மற்றும் யாவற்றுக்கும் தனித்தனித் தெய்வங்கள் இருப்பதாக நம்பி, அத்தெய்வங்களைப் பற்றிய கற்பனை உருவங்கள் சமைத்து மனிதன் அவற்றை வழிபடத் தொடங்குகிறான். இதுவும்கூட அறியாமையைச் சேர்ந்த ஒரு கட்டமே.

இதற்குப்பின் மேலும் அறிவு ஒளி ஏற்படுகிறது. உலக இயக்கம் ஒரு வலிமை வாய்ந்த சட்டத்துக்கும் ஒரு பெரிய திட்டத்துக்கும் கட்டுப்பட்டிருப்பதை மனிதன் காண்கிறான்.

*காற்றோட்டம், மழையின் வருகை, கோள்களின் சுழற்சி, பருவ காலங்களின் மாறுதல் ஆகியவற்றில் எத்தகைய ஒழுங்கு காணப்படுகிறது! எண்ணற்ற சக்திகள் ஒன்றோடு மற்றொன்று இணைந்து எவ்வாறு செயல்படுகின்றன!*

*எத்தகைய சக்தி வாய்ந்த சட்டம் இது! எந்த வேலைக்காக எந்தக் காலம் நிர்ணயிக்கப்பட்டுள்ளதோ, சரியாக அதே காலத்தில் பிரபஞ்சத்தின் எல்லாச் சக்திகளும் இணைந்து ஒன்று மற்றொன்றோடு ஒத்துழைக்கின்றன! வானமண்டலத்தில் உள்ள ஏற்பாட்டில் காணப்படும் இந்த இணக்கமான சூழ்நிலையைப் பார்த்து இறைவனுக்கு இணை கற்பிக்கும் மனிதன் கூட எல்லாவற்றிற்கும் பெரிய கடவுள் ஒருவரும் இருக்கிறார் என்றும், அவரே சிறு சிறு கடவுளர் மீது ஆட்சி புரிகிறார் என்றும் இல்லையானால் ஒவ்வொரு தேவதையும் தனித்தனியாகவும், முற்றிலும் சுயாதிகாரம் பெற்றதாகவும் இருந்தால் உலகக் காரியங்கள் எல்லாம் தட்டுத்தடுமாறிப் போகும் என்றும் நம்ப வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகிறான்.*

*அவன் அந்தப் பெரிய கடவுளுக்கு 'அல்லாஹ்' - 'பரமேசுவரன்' 'குதாயெ-குதாயெகான்' ('இறைவர்க்கெல் லாம் இறைவன்') முதலிய பெயர்களைச் சூட்டுகிறான். ஆனால் வழிபாட்டின்போது பெரிய கடவுளோடு சிறிய கடவுளரையும் சேர்த்து வைக்கிறான். இறையாட்சியும் உலக மன்னர் ஆட்சியைப் போலவே இருக்கிறது என்று அவன் நினைக்கிறான். எவ்வாறு உலகில் ஓர் அரசன் இருந்தால், அவனுக்கு அமைச்சர்களும் இதர அதிகாரம் பெற்ற அலுவலரும் இருப்பார்களோ அவ்வாறே பிரபஞ்சத்திலும் ஒரு பெரிய கடவுள் இருக்கிறார் என்றும், பல சின்னஞ்சிறிய தேவதைகள் அவருக்கு உட்பட்டு இருக்கின்றன என்றும் சிறிய தேவதைகளைத் திருப்திப்படுத்தாவிட்டால் பெரிய கடவுள் வரை போய்ச் சேர முடியாது என்றும் அவன் கருதுகிறான். ஆகையால் அவற்றையும் வணங்கவேண்டும்; அவற்றின் முன்பும் கையேந்த வேண்டும் என்றும், அவற்றின் அதிருப்திக்கு அஞ்சவேண்டும் என்றும், பெரிய கடவுள் வரை போய்ச்சேருவதற்கு, அவற்றைக் கருவிகளாக்கிக்*

கொள்ள வேண்டும் என்றும் அவற்றைக் காணிக்கை களாலும், நேர்ச்சைகளாலும் மகிழ்விக்க வேண்டும் என்றும் கருதுகிறான்.

பிறகு அறிவில் மேலும் முன்னேற்றம் ஏற்படுகிறது. கடவுள ரின் எண்ணிக்கை குறையத் தொடங்குகிறது. அறியாமை மிக்கவர்கள், எத்தனை கற்பனைக் கடவுள்களை உண்டாக்கி வைத்திருக்கிறார்களோ அவை ஒவ்வொன்றைப் பற்றியும் சிந்திக்கச் சிந்திக்க அவையும் கடவுள்கள் அல்ல; அவை நம்மைப் போன்ற அடியார்கள் மட்டுமல்ல, நம்மைக் காட்டிலும் சக்தியற்றவை என்று தெரியத் தொடங்குகிறது.

இவ்வாறு அவற்றை ஒவ்வொன்றாக மனிதன் கழித்துக் கொண்டே போகிறான். இறுதியில் ஒரு கடவுள் எஞ்சுகிறார். ஆயினும், அந்தக் கடவுள் தொடர்பாகவும் மனிதனின் எண்ணத்தில் மிகுந்த அறியாமை சூழ்கிறது. கடவுளுக்கும் நம்மைப் போன்ற உடல் இருக்கிறது. ஓரிடத்தில் அமர்ந்து ஆட்சி புரிகிறார் என்று ஒருவன் நினைக்கிறான். கடவுளுக்கும் மனைவி, மக்கள் இருக்கின்றனர். மனிதனைப் போலவே அவ ரும் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கொண்டிருக்கிறார் என்று வேறு ஒருவன் கருதுகிறான். கடவுள் மனித உருவில் பூமி மீது இறங்கி வருகிறார் என்று மற்றொருவன் எண்ணு கிறான். கடவுள் இவ்வுலக அலுவலகத்தை இயக்கி விட்டு விட்டுச் சும்மா உட்கார்ந்துவிட்டார்; எங்கோ ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார் என்று ஒருவன் கூறுகிறான். கடவுளரிடம் பெரியார்களுடைய அல்லது ஆவிகளுடைய பரிந்துரையைக் கொண்டுபோக வேண்டியது அவசியம்; அவர்களை நடுவர் கள் ஆக்கினால் ஒழிய அங்கு காரியம் ஆகாது என்று ஒருவன் கருதுகிறான்.

ஒருவன், தன் கற்பனைப்படி கடவுளுக்கு ஓர் உருவம் கொடுக்கிறான். அந்த உருவத்தை வழிபாட்டின்போது முன்னால் வைக்கவேண்டியது அவசியம் என்றும் கருதுகி றான். இவ்வாறாக ஒரே கடவுட்கொள்கை கொண்டிருக்கும் மனிதனிலும் பல தவறான கருத்துகள் எஞ்சி நின்றுவிடு கின்றன. அவற்றின் காரணமாக அவன் இறைவனுக்கு

இணைவைப்பதிலும் (ஷிர்க்) இறைவனை நிராகரிப்பதிலும் (குஃப்ரு) மூழ்கிவிடுகிறான். இவையாவும் அறியாமையின் விளைவுகளாகும்.

**'லா இலாஹ இல்லல்லா ஹு':** இது, ஒவ்வொரு காலத்திலும் இறைவனே தன் தூதர்கள் மூலம் மனிதனுக்கு அனுப்பி வைத்த ஞானமாகும். இதன் அந்தஸ்து எல்லாவற்றுக்கும் மேலாக இருக்கிறது. அனைவருக்கும் முதலாவதாக ஆதம் (அலை) அவர்களுக்கே இந்த ஞானம் அளிக்கப்பட்டு, பூமி மீது இறக்கப்பட்டிருந்தார். ஆதம் (அலை) அவர்களுக்குப் பின் நூஹ் (அலை), இப்றாஹீம் (அலை), மூஸா (அலை) மற்றும் இதர இறைத்தூதர்கள் அனைவருக்கும் இதே ஞானம் அளிக்கப்பட்டிருந்தது. பிறகு இறுதியாக இதே ஞானத்தைக் கொண்டே முஹம்மத் (ஸல்) அவர்கள் வந்துதித்தார். இது தூய்மையான ஞானம். இதில் அறியாமையின் சாயல் ஒரு சிறிதும் இல்லை.

இதுவரை நாம் இறைவனுக்கு இணைவைத்தல், சிலை வழிபாடு, இறைநிராகரிப்பு ஆகியவை பற்றி எத்தனை விளக்கங்கள் கொடுத்துள்ளோமோ அவற்றிலெல்லாம் மனிதன் மூழ்கியதற்குக் காரணம், அவன் இறைத்தூதர்களின் அறிவுரைகளைப் புறக்கணித்து தன் புலன்களின் ஆற்றல் மீதும், தனது அறிவின் மீதும் நம்பிக்கை கொண்டதேயாகும்.

வாருங்கள்! 'லாயிலாஹ இல்லல்லாஹு' எனும் சின்னஞ் சிறு சொற்றொடரில் எத்துணைப் பேருண்மை அடங்கி யுள்ளது என்பதை நாம் பார்ப்போம்.

1. அனைத்திற்கும் முதன்மையானது இறைமையைப் பற்றிய சிந்தனையாகும்.

   பரந்து விரிந்த இப்பிரபஞ்சத்தையும், அதன் தோற்றத் தையும் முடிவையும் சிந்திப்பதில் நமது மூளை சோர் வடைந்து விடுகிறது. இப்பிரபஞ்சம் ஆதி காலந்தொட்டே இருந்து வருகிறது; இன்னும் நினைத்துப் பார்க்க முடியாத நீண்ட காலத்துக்கும் இயங்கிக் கொண்டேயிருக்கும். எண்ணற்ற உயிரினங்கள் அதில் தோன்றின. நாளுக்கு நாள்

தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. மேலும் இதில் விதவிதமான - பிரமிப்பூட்டுகின்ற அதிசயங்களெல்லாம் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றைக் கண்டு அறிவு மலைப்படைந்து நின்று விடுகிறது. நாம் நமது பார்வையினால் இப்பிரபஞ்சத்தைப் பார்த்துப் புரிந்துகொள்ள முடியாதவர்களாய் இருக்கின்றோம். இவையனைத்தும் தற்செயலாய் ஏற்பட்டதென்று நம் அறிவு நம்ப மறுக்கிறது. இப்பிரபஞ்சம் தற்செயலாய்த் தோன்றிய பொருள்களின் தொகுதியல்ல; அது தொடர்பில்லாத பல பொருள்களின் குவியல் அல்ல; ஒழுங்கில்லாத, அர்த்தமற்ற பொருள்களின் திரட்சியுமல்ல.

இங்கோ, ஒரு சிறிய அணு முதல் பெரிய பெரிய கோள்கள் வரைத் தமக்கு உரிய பாதைகளில் மிகவும் வியப்பிற்குரிய கட்டுப்பாட்டின்படிச் சுழன்று கொண்டிருப்பதை நாம் காண்கிறோம். இவையனைத்தும் ஒரு படைப்பாளன் இன்றியோ நிர்வாகியின்றியோ, ஆணையாளனின்றியோ, திட்டமிடுபவனின்றியோ நடைபெற முடியாது. ஆனால் இந்த பிரம்மிக்கத்தக்க பிரபஞ்சத்தைப் படைத்து, வியப்பூட்டுமளவுக்குக் கட்டுப்பாட்டுடன் நிர்வகிக்கும் சக்தி யாருடையதாயிருக்கும்? எவன் எல்லையற்றவனோ, கணக்கற்ற காலந்தொட்டு இருந்து வருபவனோ, இனியும் எப்போதும் இருப்பவனோ, யாரையும் சார்ந்து இல்லாதவனோ, தேவையற்றவனோ, இயற்கையின்மீது முழு ஆதிக்கம் செலுத்துபவனோ, சூட்சுமமும் பேரறிவும் படைத்தவனோ, ஒவ்வொன்றைப் பற்றியும் எல்லாம் அறிந்து வைத்திருப்பவனோ, எவனுக்கு எப்பொருளும் மர்மமானதாய் இருக்காதோ, எல்லாவற்றையும் சூழ்ந்து மேலோங்கி இருப்பவனோ, அவனால்தான் இத்தகைய சாதனையைப் புரிய முடியும். மேலும் அவன் இப்பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றின் மீதும் முழு ஆதிக்கம் செலுத்தும் வல்லமையுடையவனாக இருக்க வேண்டும். எல்லையற்ற அதிகாரம் உடையவனாயும், பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் அவன் ஆணையை மீற முடியாத அளவுக்குக் கணக்கற்ற சக்திகளுக்கு எஜமானனாயும்,

யாவற்றின் வாழ்வுக்கும் உணவுக்கும் தேவையான வற்றை அளித்துக் கொண்டிருப்பவனாயும் இருக்க வேண்டும். மேலும் அவன் களங்கம், குறை, பலவீனம் ஆகியவற்றிலிருந்து தூய்மையாயிருப்பதுடன், அவனுடைய செயல்களில் யாரும் தலையிட முடியாத அளவுக்கு வல்லமையுடையவனாகவும் இருக்க வேண்டும். அத்தகைய ஒருவனே இப்பிரபஞ்சத்தைப் படைத்து நிர்வகித்து ஆட்சி புரிவதற்குத் தகுதியுடைய வனாவான்.

2. இறைமையின் பண்புகள் யாவும் அந்த ஒருவனிடம் குடிகொண்டிருக்க வேண்டியது அவசியமாகும். இருவர் இப்பண்புகளைச் சரி சமமாய்ப் பெற்றிருப்பது அசாத்திய மாகும். ஏனெனில் அனைத்தையும் சூழ்ந்தவனாகவும், அனைத்தின் அதிகாரியாகவும் ஒருவனே இருக்க முடியும். இப்பண்புகள் பல கடவுள்களிடம் இருக்கும்படிப் பங்கிடப்படுவதும் சாத்தியமில்லை. ஏனெனில் ஒரு கட வுள் அனைத்தையும் அறிந்தவனாயும், வேறொரு கடவுள் ஆணையாளனாயும், இன்னொரு கடவுள் உணவளிப் பவனாயும் இருந்தால் ஒரு கடவுள் மற்றொரு கடவுளைச் சார்ந்திருக்க வேண்டிய நிலை ஏற்படும். ஒரு கடவுள் மற்றொரு கடவுளுடன் ஒத்துழைக்க வில்லையானால் பிர பஞ்சம் முழுவதும் ஒரேயடியாக அழிந்து விடும். ஒரு சமயம் ஒரு கடவுளிடம் இருக்கும் அதிகாரம், மற்றொரு சமயம் மற்றொரு கடவுளிடம் இருக்கும்படி மாற்றப் படுவதும் சாத்தியமில்லை. ஏனெனில் எந்தக் கடவுள் தானே உயிருடன் இருக்கும் சக்தியைப் பெற்றிருக்க வில்லையோ அவர் பிரபஞ்சம் முழுமைக்கும் வாழ்வு அளிக்க முடியாது. எந்தக் கடவுள் தன் இறைமையைத் தானே காப்பாற்றிக் கொள்ள முடியவில்லையோ அவர் இவ்வளவு பெரிய பிரபஞ்சத்தினை ஆட்சிபுரிய முடி யாது. ஆகவே எந்த அளவுக்கு உங்களுக்கு அறிவொளி கிடைக்குமோ அந்த அளவுக்கு இறைமையின் பண்பு ஒரே ஒருவனிடமே இருக்க வேண்டியது அவசியம் என்பதில் உறுதி ஏற்பட்டுக் கொண்டேபோகும்.

3. இறைமையைப் பற்றிய இந்த நிறைவான, சரியான கருத்தை நினைவில் வையுங்கள். பிறகு பிரபஞ்சம் முழு வதின் மீதும் பார்வையைச் செலுத்துங்கள். எத்தனை பொருள்களை நீங்கள் பார்க்கிறீர்களோ, எத்தனை பொருள்களை நீங்கள் எதன் மூலமாவது உணர்கிறீர்களோ, எத்தனை பொருள்களை உங்கள் அறிவு எட்டுகிறதோ அவற்றில் ஒன்றேனும் இப்பண்புகளுடையதாயில்லை. அண்டத்தில் உள்ள அனைத்தும் பிறிதொன்றைச் சார்ந்திருப்பவை; ஆணைக்கு உட்பட்டு உள்ளவை; ஆகியும் அழிந்தும் வருபவை; பிறந்தும் இறந்தும் வரு பவை. எந்த நிலையிலும் எதுவும் நிலைப்பதில்லை. தன் சுயாதிகாரத்தால் எதுவும் எதையும் செய்யச் சக்தியற்றது. ஓர் உயர்ந்த சட்டத்திற்கு எதிராக இம்மியளவும் அசைய எதற்கும் அதிகாரம் இல்லை. அவற்றில் எதுவும் கடவுள் இல்லை என்று அவற்றின் நிலைமையே சான்று பகர்கின்றது. இறைமையின் சிறிய சாயலும் எதிலும் காணப்படவில்லை. எதற்கும் இறைமையில் இம்மியள வும் தலையீடு இல்லை. 'லாஇலாஹ' என்பதற்கு இதுவே பொருளாகும்.

4. பிரபஞ்சத்தின் எல்லாப் பொருள்களிலிருந்தும் இறையதி காரத்தைப் பறித்து விட்டபின், வேறு ஒருவன் இருக்கி றான்; அவன் எல்லாவற்றுக்கும் மேலானவன்; அவன் ஒருவனே இறைமையின் பண்புகள் அனைத்தையும் பெற்றிருக்கிறான்; அவனைத் தவிர வேறு இறைவ னில்லை என்பதை நீங்கள் ஏற்க வேண்டியிருக்கிறது, 'இல்லல்லாஹு' என்பதற்கு இது பொருளாகும்.

இதுவே எல்லாவற்றுக்கும் மேலான ஞானமாகும். நீங்கள் எவ்வளவு ஆய்ந்தோய்ந்து பார்த்தாலும் ஞானத்தின் தொடக்கமும் இதுவே; இறுதி எல்லையும் இதுவே என் பதைத் தெரிந்து கொள்வீர்கள். பிரபஞ்சத்தின் உண்மை களைக் கண்டுபிடிப்பதற்காக எத்தனை அறிவியல்கலை கள் உள்ளனவோ அவற்றுள் பௌதிகம், ரசாயனம், வானவியல், புவியியல், உயிரியல், தாவரவியல்,

*விலங்கியல், மனித இயல் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொள்ளுங்கள். அதில் எவ்வளவு ஆராய்ச்சி செய்து கொண்டு முன்னேறுகிறீர்களோ அவ்வளவுக்கு* ***லா இலாஹ இல்லல்லாஹு*** *வின் உண்மையும் நேர்மையும் விளங்கிக்கொண்டே செல்லும். அதன் மீது உங்கள் உறுதி வளர்ந்துகொண்டே போகும். அனைத்திற்கும் முதலாவதான, மேம்பட்ட இந்தப் பெரிய உண்மையை மறுத்து விட்டால் நீங்கள் ஒவ்வோர் அறிவியல் ஆராய்ச்சிக் களத்தில் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியிலும், இப்பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் அர்த்தமற்றதாகிவிடும் என்பதை அறிந்து கொள்வீர்கள்.*

**மனித வாழ்வில் ஏக தெய்வக் கொள்கையால் ஏற்படும் நன்மைகள்:**

***லா இலாஹ இல்லல்லாஹு*** *என்பதை ஒப்புக்கொள்வதால் மனித வாழ்வில் எத்தகைய விளைவு ஏற்படுகிறது - அதை ஒப்புக்கொள்ளாதவன் இம்மையிலும், மறுமையிலும் ஏன் நிர்க்கதி அடைகிறான் என்பதை நாம், உங்களுக்கு இப்போது தெரிவிக்கிறோம்.*

1. *இக்கலிமாவின் மீது நம்பிக்கை வைத்திருப்பவன் குறுகிய நோக்கமுடையவனாக இருக்கமாட்டான். இம்மண்ணுலகையும், விண்ணுலகையும் படைத்தவனும், கிழக்கு மேற்கின் எஜமானனும், இவ்வகிலம் அனைத்தையும் பரிபாலித்துக் காப்பவனுமான அல்லாஹ்வை அவன் ஒப்புக்கொண்டிருப்பவன் ஆவான். இத்தகைய நம்பிக்கைக்கு (ஈமானுக்கு)ப் பிறகு இவ்வண்டங்களில் உள்ள எப்பொருளும் அவனுக்கு அந்நியமாகத் தென்படாது. அவை அனைத்தையும் தன்னைப் போலவே ஒரே எஜமானனின் உடைமைகளாகவும், ஒரே அரசனின் குடிகளாகவும் கருதுகிறான். அவனுடைய மதிப்பு, அன்பு, தொண்டு ஆகியன ஒரு வட்டத்திற்குள் கட்டுப்பட்டு இரா. அல்லாஹ்வின் ஆட்சி எவ்வாறு எல்லையற்றதாயிருக்கிறதோ அவ்வாறே அவனுடைய நோக்கும்*

எல்லையற்றதாகிவிடுகிறது. சின்னஞ்சிறிய தேவதைகளை நம்புகிறவனுக்கும், மனிதனுள் இருப்பதைப் போன்ற எல்லைக்கு உட்பட்ட, குறையுள்ள பண்புகளே இறைவனிலும் இருக்கின்றன என்று நினைப்பவனுக்கும், அறவே இறைவனையே ஏற்றுக் கொள்ளாதவனுக்கும் இத்தகைய பண்புகள் ஏற்படா.

2. இக்கலிமா, மனிதனுள் எல்லையற்ற தன்னம்பிக்கையையும் தன்மானத்தையும் உண்டாக்கி விடுகிறது. இதன்மீது நம்பிக்கை கொண்டிருப்பவன், அனைத்துச் சக்திகளுக்கும் உரிமையாளன் ஒரே இறைவனே, அவனைத் தவிர ஆதாயமோ இழப்போ உண்டாக்கக் கூடியவன் வேறு யாரும் இல்லை; உயிர் கொடுப்பவனோ வாங்குபவனோ வேறு யாரும் இல்லை; அதிகாரம் அனைத்தையும் பெற்றவனும், எல்லாவற்றின் மீதும் ஆதிக்கம் செலுத்துபவனும் வேறு யாரும் இல்லை. இவற்றை அறிகின்ற ஞானமும், உறுதியும் அவனை, பிற சக்திகளைத் துச்சமாகக் கருதச் செய்வதுடன் அவற்றின் அச்சத்தையும் போக்கிவிடுகிறது. அவன் தலை, எந்தப் படைப்பினத்தின் முன்பும் சாய்வதில்லை. அவன் கை யார் முன்பும் ஏந்தப்படுவதில்லை. அவனுடைய நெஞ்சில் யாருடைய மேன்மையைப் பற்றிய முத்திரையும் பதிவதில்லை. இப்பண்பு ஓரிறைக் கொள்கையால் தவிர வேறு எக்கொள்கையாலும் ஏற்பட முடியாது. மனிதன், படைப்பினங்களின் முன் குனிவதும், அவற்றை ஆதாயமோ, இழப்போ ஏற்படுத்தும் வல்லமையுடையவை என்று நினைப்பதும் அவற்றைக் கண்டு அஞ்சுவதும், அவற்றின் மீதே நம்பிக்கை கொள்வதும் இறை நிராகரிப்பு, இறைவனுக்கு இணை வைத்தல், நாத்திகம் ஆகியவற்றால் ஏற்படும் இயற்கையான விளைவுகள் ஆகும்.

3. இக்கலிமா, மனிதனிடம் தன்னம்பிக்கையோடு பணிவுடைமையையும் உண்டாக்குகிறது. இதை ஒப்பியவன் ஒருபோதும் செருக்குள்ளவனாகவும் தற்பெருமையுடையவனாகவும் இருக்கமுடியாது. அவனுடைய மனதில், தன்

னுடைய சக்தி, செல்வம், திறமை பற்றிய அகந்தை குடி கொள்ளவே முடியாது. ஏனெனில் தன்னிடம் இருப்பவை யாவும் இறைவன் அளித்தவை. இறைவன் எவ்வாறு கொடுப்பதற்குச் சக்தி படைத்தானோ அவ்வாறே அவற்றைப் பிடுங்கிக் கொள்வதற்கும் சக்தி படைத்தவன் என்பதை அவன் நன்கு அறிகிறான். இதற்கு நேர்மாறாக நாத்திகக் கொள்கையுள்ள மனிதனுக்கு ஏதேனும் உலக வல்லமை கிடைத்து விட்டால் அவன் அகந்தை கொண்டு விடுகிறான். ஏனெனில் அவன் தன்னுடைய வல்லமையை தனது திறமையின் விளைவுதான் என்று கருதுகிறான். இதைப் போலவே இறைநிராகரிப்பு, இணைவைத்தல் ஆகிய பழக்கமுடையவர்களுக்கு தற்பெருமை ஏற்பட்டு விடுவதும் இயற்கையாகும். ஏனெனில், இறைவனை நிராகரிப்பவனும், இணைவைப்பவனும் கடவுளரோடும், தேவதைகளோடும், தமக்கு விசேஷத் தொடர்பு இருப்ப தாகவும், அது மற்றவர்களுக்கு இல்லை என்றும் நினைக்கிறான்.

4. இக்கலிமா மீது நம்பிக்கை கொண்டிருப்பவன் தன் னுடைய உளத்தூய்மையையும் நன்னடத்தையையும் தவிர தன் நன்மைக்கும், ஈடேற்றத்திற்கும் வேறு வழியில்லை என்பதை நன்கு அறிகிறான். ஏனெனில் அவன், யாருடைய தயவையும் நாடாதவனும், யாருட னும் எத்தகைய சொந்த பந்தமில்லாதவனும், பாரபட்ச மற்று நீதி வழங்குபவனும், தன்னுடைய இறைமையில் யாருடைய தலையீடும், செல்வாக்கும் இல்லாதவனு மான ஏக இறைவன் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறான். இதற்கு நேர்மாறாக இறைவனை நிராகரிப்பவரும், இணைவைப்பவரும் எப்போதும் பொய் நம்பிக்கை களின் மீது வாழ்வைக் கழிக்கிறார்கள். அவர்களுள் சிலர் கர்த்தரின் மகன் தங்களை இரட்சிப்பவராயிருக்கிறார் என்றும், சிலர் நாம் கடவுளுக்கு மிகவும் வேண்டியவர் கள்; நமக்குத் தண்டனையே கிடைக்காது என்றும், சிலர் நம் பெரியவர்களைக் கொண்டு இறைவனிடம் பரிந்துரை செய்து கொள்வோம் என்றும், சிலர் தங்கள் தேவதை

களுக்குக் காணிக்கைகளும், நைவேத்தியங்களும் படைத்துவிட்டுத் தங்களுக்கு இனி உலகில் எதை வேண்டுமானாலும் செய்ய அனுமதி கிடைத்துவிட்டது என்றும் நம்புகிறார்கள். இத்தகைய பொய்க் கொள்கை கள், அவர்களை எப்போதும் பாவங்களிலும் கெட்ட செயல்களிலும் ஆழ்த்துகின்றன. அவற்றின் மீது உள்ள நம்பிக்கையால் உளத் தூய்மையையும், நற்செயல்களை யும் அவர்கள் அலட்சியப்படுத்தி விடுகிறார்கள். எஞ்சிய வர்கள் நாத்திகர்கள். அவர்கள் தங்களுடைய நற்கருமங் களைப் பற்றியோ கெட்ட செயல்களைப் பற்றியோ விசாரிக்கும் ஓர் இறைவன் இருப்பதாகவே அடியோடு நம்புவதில்லை. ஆதலால் அவர்கள் தங்களை விடுதலை பெற்றவர்களாய்க் கருதுகிறார்கள். அவர்களுக்குத் தங்கள் மனவேட்கையே கடவுள். அவர்கள் அதன் அடியார்களாய் வாழ்கிறார்கள்.

5. இக்கலிமாவை ஒப்புவோன், எத்தகைய நிலைமையிலும் மனம் உடைந்து விரக்தி அடைவதில்லை. அவனோ விண்ணுலக மண்ணுலகக் கருவூலங்களின் உரிமையாள னும், பேரருளும் கருணையும் எல்லையின்றிப் பெற்றி ருப்பவனும், எங்கும் நிறைந்த சக்திகளைக் கொண்டிருப் பவனுமான ஏக இறைவனை நம்புகிறவன். இந்த நம்பிக் கையானது (ஈமான்) அவனுக்கு அசாதாரண ஆறுதலை அளிக்கிறது. அது எப்போதுமே நெஞ்சை நம்பிக்கைக ளாலும் திருப்தியாலும் நிரப்பி விடுகிறது. உலகில் அவன் எல்லாராலும் கைவிடப்பட்டாலும் சரி, எல்லா உறவுகளும் முறிந்துவிட்டாலும் சரி, ஒவ்வொன்றாக உதவிகளும், சாதனங்களும் விலகிப் போனாலும் சரி, ஏக இறைவனின் மீதுள்ள நம்பிக்கையின் பலம், எத்தகைய நிலைமையிலும் அவனைக் கைவிட்டு விடுவதில்லை. அந்த ஆதாரத்தைத் துணையாகக் கொண்டு அவன், புதிய நம்பிக்கைகளுடன் முயற்சிகளுக்கு மேல் முயற்சிகள் செய்துகொண்டே போகிறான்.

இந்த மனத்திருப்தியை ஏக தெய்வக் கொள்கையால் தவிர, வேறு எந்தக் கொள்கையாலும் பெற முடியாது.

*இறைவனை நிராகரிப்போரும், இணைவைப்போரும், நாத்திகர்களும் குறுகிய நெஞ்சினராயிருக்கிறார்கள். எல்லைக்குட்பட்ட சக்திகள் மீதே அவர்களுடைய நம்பிக் கைகள் இருக்கின்றன. ஆகையால் கஷ்ட காலங்களில் விரக்தி அவர்களை சூழ்ந்து கொள்கிறது. பெரும்பாலும் இத்தகைய நிலைமைகளில் அவர்கள் தற்கொலையும் செய்து கொள்கிறார்கள்.**

6. *இக்கலிமாவின் நம்பிக்கை, மனிதனின் நல்விருப்பம், திறமை, பொறுமை, இறைவன் மீது நம்பிக்கை ஆகிய வற்றினால் ஒரு வலுவான சக்தியைத் தோற்றுவித்து விடு கிறது. அம்மனிதன் இறைவனின் திருப்தியை நாடி உல கில் பெரும் சாதனைகள் புரியப் புறப்படும்போது, அவன் மனதில், தனக்குப் பின் மண்ணக, விண்ணகங்களின் பேரரசனுடைய சக்தி துணை நிற்கும் எனும் உறுதி பிறக் கிறது. இந்த எண்ணம் அவனுள் மலைபோன்ற உறுதி யைத் தோற்றுவித்து விடுகிறது. உலகின் எல்லாத் துன்பங் களும், துயரங்களும், எதிர்ப்புச் சக்திகளும் ஒன்று சேர்ந் தால் கூட அவனைத் தன் உறுதியிலிருந்து அசைக்க முடி யாது. இறை நிராகரிப்பு, இணை வைத்தல், நாத்திகம் ஆகியவற்றில் இந்த சக்தி ஏது?*

---

* *இந்த நிராசையும் ஏமாற்றமும் எத்தகைய வேதனையான நிலைமையை உண்டாக்கி விடுகிறது என்பதை அறிய நவீன கால வாழ்க்கையைப் பற்றி சிந்தனையைத் தூண்டும் வண்ணம்* "Collin Wilson" *எழுதியுள்ள* "The Outsider" *(11-ஆம் பதிப்பு 1957 லண்டன்) என்னும் நூலை வாசகர்கள் பார்க்க!*

*இது பற்றி பேராசிரியர்* "Joad" *கொடுத்துள்ள விளக்கம் மிகவும் தெளிவாக இருக்கிறது. மேலை நாடுகளின் நிலைபற்றி அவர் கூறுகிறார்.*

*'வரலாற்றிலேயே முதல் தடவையாக இப்பொழுது அபூர்வ ஆடவர், பெண்டிர் அடங்கிய தலைமுறை ஒன்று வளர்ந்து வருகிறது. அதற்கு மதம் எதுவும் கிடையாது. மதம் தேவை என்று அத்தலைமுறையினர் கருதவு மில்லை. அதைப் புறக்கணிப்பதில் அவர்கள் உவகை அடைகின்றனர். ஆனால் அவர்களுடைய வாழ்க்கையிலோ மகிழ்ச்சியில்லை. தற்கொலை செய்துகொள்வோரின் எண்ணிக்கை சர்வசாதாரணமாக அவர்களிடையே அதிகமாக இருக்கிறது'.*

7. இந்தக் கலிமா, மனிதனை வீரனாக்கி விடுகிறது! மனித னைக் கோழையாக்கிவிடுவது இரண்டு விஷயங்கள் தாம். ஒன்று: உயிர், சொத்து, மனைவி-மக்கள் மீது கொண்டுள்ள பாசம். இரண்டாவது: இறைவனைத் தவிர அழிக்கக்கூடிய வன் வேறு ஒருவனும் இருக்கிறான் எனும் எண்ணமும், மனிதன், தன் மதியால் மரணத்தை வெல்ல முடியும் எனும் எண்ணமும் ஆகும்.

இவ்விரண்டு எண்ணங்களையும் **'லா இலாஹ இல்லல்லாஹு'** மீதுள்ள நம்பிக்கை மனதிலிருந்து நீக்கி விடுகிறது. கலிமாவை ஒப்புவோன் தன் உயிர், உடைமை மற்றும் எல்லாப் பொருள்களின் உரிமையாளன் இறை வனே என்று எண்ணி அவனுடைய திருப்திக்காக எல்லா வற்றையும் தியாகம் செய்து விட ஆயத்தமாகி விடும் போது முதலாவது எண்ணம் தகர்க்கப்பட்டு விடுகிறது. 'லா இலாஹ இல்லல்லாஹு' கூறுபவனிடம், உயிர் வாங்கும் சக்தி எந்த மனிதனிடமோ மிருகத்தினிடமோ, பீரங்கி, வாள், தடி, கல் ஆகியவற்றிடமோ இல்லை. அந்த அதிகாரம் இறைவனுக்கே உண்டு. அவன் மரணத்திற்காக எந்த வேளையை நிர்ணயம் செய்திருக்கிறானோ அதற்கு முன்பாக இம்மாநிலத்தின் சக்திகள் எல்லாம் ஒன்று சேர்ந்து விரும்பினால்கூட யாருடைய உயிரையும் போக்க

---

இது- C.E.M. Joad எழுதிய "The Present and Future of Religion" எனும் நூலிலிருந்து Sir Arnold Lunu என்பார் தம்முடைய And Yet So New எனும் நூலில் (1958, லண்டன், பக்கம்: 228) எடுத்தாண்டுள்ள மேற்கோளாகும்.

இஸ்லாத்தின் மீது எவ்வகையிலும் அனுதாபம் கொள்ளாத - முஸ்லி மல்லாத வரலாற்று ஆசிரியர் ஒருவரின் இஸ்லாமிய உலகைப் பற்றிய கருத்துகள் இங்கு கவனிக்கத்தக்கவையாகும்.

'இறைவன் ஒருவனே என்பதில் உள்ள இந்தத் திடமான உறுதிப்பாட்டி லும் சர்வ வல்லமையுள்ள அந்த இறைவனின் ஆட்சி மீது அவர்கள் கொண்டுள்ள எளிய உற்சாகமான நம்பிக்கையிலும்தான் இஸ்லாத்தின் வலிமை இருக்கிறது. மிகப் பெரும்பாலான மதங்களைப் பின்பற்று வோரிடையே காணமுடியாத மன மகிழ்ச்சியையும் நிம்மதியையும் இஸ்லாத்தைப் பின்பற்றுவோர் முழுமையாக அனுபவிக்கிறார்கள். முஸ்லிம் நாடுகளில் தற்கொலை மிக அரிதாகவே காணப்படுகிறது.

Philip K Hitti எழுதிய History of the Arabs (1951), பக்கம்: 129

முடியாது என எண்ணும்படி அந்தக் கலிமா பெரும் அற்புதம் செய்து விடுகிறது. இந்நிலையில் இரண்டாவது எண்ணமும் விலகிவிடுகிறது. இக்காரணங்களாலேயே அல்லாஹ் மீது நம்பிக்கை வைப்பவனைக் காட்டிலும் பெரிய வீரன் இவ்வுலகில் வேறு யாரும் இருக்கமுடியாது. அவனுக்கு முன் வாளாயுதங்களின் அரண், குண்டுகளின் மாரி, படைகளின் எதிர்ப்பு யாவும் வீணாகி விடுகின்றன. அவன், இறைவழியில் போராடப் புறப்படும் போது தன்னைக் காட்டிலும் பத்துமடங்கு சக்தியையும் முறியடித்து விடுகிறான். இறைமறுப்பாளர்களும் (காஃபிர்களும்), இணைவைப்பவர்களும் (முஷ்ரிக்குகளும்), நாத்திகர்களும் இத்தகைய சக்தியை எங்கிருந்து கொண்டு வருவார்கள்? அவர்களுக்கோ உயிர் மிகவும் பிரியமானது. பகைவன் வருவதால் மரணம் வருகிறது; அவன் ஓடிவிடுவதால் மரணமும் ஓடிவிடுகிறது என்று எண்ணுபவர்கள் ஆயிற்றே அவர்கள்!

8. ***‘லா இலாஹ இல்லல்லாஹு’***வின் ஒப்புதல், மனிதனிடம் போதும் எனும் மனதையும், எதற்கும் ஆசைப்படாத இயல்பையும் உண்டாக்கி விடுகிறது. பேராசை, பொறாமை ஆகிய தாழ்ந்த உணர்வுகளை அவன் இதயத்திலிருந்து அகற்றி விடுகிறது. மேலும் இந்த ஒப்புதல், வெற்றி பெறுவதற்காகத் தகாத-கீழ்த் தரமான வழிமுறைகளைக் கடைப்பிடிக்கும் எண்ணங்களைக் கூட அவனுடைய நெஞ்சில் உதிக்க விடுவதில்லை. உணவு, இறைவன் கையில் இருக்கிறது; அவன் யாருக்குக் கொடுக்க விரும்புகிறானோ அவனுக்கு அதிகமாகக் கொடுக்கிறான். யாருக்கு விரும்பவில்லையோ அவனுக்குக் குறைவாக அளிக்கிறான் என்றும், மரியாதை, சக்தி, புகழ், ஆட்சி ஆகியவை எல்லாம் இறைவனின் அதிகாரத்தில் இருக்கின்றன என்றும், அவன், தன் நியதிகளுக்கு ஏற்ப யாருக்கு எந்த அளவு விரும்புகிறானோ அந்த அளவு கொடுக்கிறான் என்றும் இந்தக் கலிமாவை ஒப்பியவன் எண்ணுகிறான். மேலும் முடிந்தவரை தகுந்த முறையில் முயற்சி செய்ய வேண்டியது மட்டும்தான் தன்

கடமை; பலன் தருவதோ, தராமல் இருப்பதோ இறைவனின் விருப்பம். அவன் கொடுக்க விரும்பினால் உலகின் எந்த சக்தியும் அதைத் தடுக்க முடியாது. கொடுக்க விரும்பவில்லையென்றால் எந்தச் சக்தியும் கொடுக்கும்படிச் செய்துவிட முடியாது என்றும் இக்கலிமாவை ஒப்பியவன் நம்புகிறான். இதற்கு நேர்மாறாக, இறைவனை நிராகரிப்போரும், இணைவைப்போரும், நாத்திகவாதிகளும் தங்களுடைய வெற்றி அல்லது தோல்வி தங்கள் சொந்த முயற்சி அல்லது உலகச்சக்திகளின் துணை அல்லது எதிர்ப்பைச் சார்ந்திருக்கிறது என்று கருதுகிறார்கள். இதனால் அவர்களைப் பேராசை ஆட்சி புரிகிறது. வெற்றி பெறுவதற்காக வஞ்சம், சூழ்ச்சி போன்ற எல்லா விதமான கீழ்த்தர முறைகளையும் கையாளுகிறார்கள். எதைச் செய்யவும் அஞ்சுவதில்லை. மற்றவர்களுடைய வெற்றியைக் கண்டு பொறாமையால் குமைகிறார்கள். எதிரிகளைத் தோல்வியுறச் செய்வதற்காக மிகவும் மோசமான சூழ்ச்சிகளைச் செய்யவும் தயங்குவதில்லை.

9. எல்லாவற்றுக்கும் மேலான விஷயம் என்னவெனில், ***'லா இலாஹ இல்லல்லாஹு'*** மீதுள்ள நம்பிக்கை மனிதனை அல்லாஹ்வின் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கும்படிச் செய்கிறது. இறைவன் மறைவான வெளிப்படையான ஒவ்வொரு விஷயத்தையும் அறிந்தவன் என்றும், அவன் நமது பிடரி நரம்புக்கும் மிக அருகே இருக்கிறான் என்றும், நாம் இரவின் இருளிலும் தனியே ஒரு மூலையிலும் ஏதேனும் பாவம் செய்தாலும் இறைவனுக்கு அது தெரிந்து விடுகிறது என்றும், நமது அடி மனதில் ஏதாவது ஒரு கெட்ட எண்ணம் பிறந்தாலும் இறைவன் வரை அச்செய்தி எட்டி விடுகிறது என்றும் கலிமா நம்பவைக்கிறது. நாம் மற்றவர்களிடமிருந்து எதையும் மறைக்கலாம், ஆனால் இறைவனிடமிருந்து மறைக்க முடியாது; மற்றவர்களிடமிருந்து நாம் தப்பித்து ஓடிவிடலாம், ஆனால் இறைவனின் அரசிலிருந்து வெளியேறிவிடமுடியாது; எல்லாரிடமிருந்தும் தப்பிக்கலாம், ஆனால் இறைவனின் பிடியிலிருந்து தப்பிக்க இயலாது என்றும்

இக்கலிமாவை ஏற்றுக்கொள்பவன் உறுதியாக நம்புகிறான். இந்த நம்பிக்கை எவ்வளவு உறுதியாயிருக்குமோ அவ்வளவு உறுதியாக மனிதன், தன் ஏக இறைவனின் கட்டளைகளைப் பின்பற்றுவான். எதை இறைவன் ஆகாதது (ஹராம்) என்று தடுத்துள்ளானோ அதன் அருகிலும் நெருங்க மாட்டான். எதைச் செய்யும்படி இறைவன் கட்டளையிட்டிருக்கிறானோ அதைத் தனிமையிலும், இருளிலும் கூட அவன் நிறைவேற்றுவான். ஏனெனில் மனிதனுடன் எப்பொழுதும் எத்தகைய நிலையிலும் அவனை விட்டு விலகாத இறைவனின் காவலர்கள் இருக்கிறார்கள். மனிதன் எவ்வழியிலும் தப்பித்து ஓடமுடியாத கைது ஆணையை (வாரண்டை)ப் பிறப்பிக்கும் நீதிமன்றத்தினுடைய அச்சம் அவனிடம் குடி கொண்டிருக்கிறது.

இதன் காரணமாகவே முஸ்லிம் ஆவதற்கு முதலாவது அவசியமான நிபந்தனையாக 'லா இலாஹ இல்லல் லாஹு' மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ள வேண்டும். முஸ்லிம் என்பதற்குப் பொருள் - தொடக்கத்தில் நாம் கூறியுள்ளபடி இறைவனின் ஆணைகளை நிறைவேற்றும் அடியான் என்பதேயாகும். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்கு உரியவன் வேறு யாரும் இல்லை என்று எதுவரை மனிதன் உறுதி கொள்ளவில்லையோ அதுவரை இறைவனின் ஆணைகளை நிறைவேற்றும் அடியானாக இருப்பதற்கு சாத்தியமே இல்லை.

முஹம்மத் (ஸல்) அவர்களின் அறிவுரைகளில் அல்லாஹ்வைப் பற்றிய நம்பிக்கை (ஈமான்) அனைத்திலும் முதன்மையானதும் அடிப்படையானதுமாகும். இதுவே இஸ்லாத்தின் கேந்திரமாகும்; இஸ்லாத்தின் ஆணிவேராகும்; இஸ்லாத்தின் சக்திகளின் தோற்றுவாய் ஆகும். இதைத் தவிர இஸ்லாத்தின் இதர கோட்பாடுகள், கட்டளைகள், சட்டங்கள் அனைத்தும் இதே அடிப்படை மீதே நிலைத்து நிற்கின்றன. அவை அனைத்திற்கும் இதே கேந்திரத்திலிருந்தே சக்தி கிடைக்கிறது. இதை அகற்றி விட்டால் இஸ்லாம் என்று சொல்வதற்கு ஒன்றுமே இருக்காது.

**வானவர் மீது நம்பிக்கை :**

*அல்லாஹ்வைப் பற்றிய நம்பிக்கைக்குப் பின் முஹம்மத் (ஸல்) அவர்கள், இரண்டாவதாக நம்பும்படி போதித்தருளி யது வானவர்களைப் பற்றியதாகும். இந்த அறிவுரையிலுள்ள நன்மை என்னவெனில், ஏக தெய்வ நம்பிக்கை இறைவ னுக்கு இணைவைக்கும் ஆபத்துகளிலிருந்து தூய்மையாக்கி விடுகிறது.*

*இறைவனுக்கு இணைவைப்போர் (முஷ்ரிகீன்கள்) இரு வகைப் படைப்பினங்களை இறைமையோடு இணைத்திருக் கிறார்கள் என்று முன்பே விளக்கப்பட்டுள்ளது. ஒரு வகை: உருவம் உள்ளவையும், கண்களுக்குத் தென்படுபவையும் ஆகும். எடுத்துக்காட்டாக, கதிரவன், நிலா, தாரகைகள், நெருப்பு, நீர், பெரியோர்கள் ஆகியவை. மற்றொரு வகை: உருவமற்றவையும், கண்களுக்குத் தெரியாதவையும் ஆகும். அவை பிரபஞ்சத்தின் செயல்களைக் கவனித்துக் கொண்டிருக் கின்றன என்றும் உதாரணமாக ஒன்று காற்றை வீசச்செய்கிறது என்றும், ஒன்று மழை பெய்விக்கிறதென்றும், ஒன்று ஒளி தருகிறதென்றும் கருதுகிறார்கள்.*

*இவற்றுள் முதலாவதாகக் கூறப்பட்டவை மனிதனின் கண்முன் இருக்கின்றன. இதனால் அவை இறைமையோடு தொடர்புடையவை அல்ல என்பது* ***'லா இலாஹ இல்லல்லாஹ¬'*** *எனும் சொற்களாலேயே தெளிவாகிறது. இரண்டாவது வகையான படைப்பினங்கள் மறைவானவை யாகவும், மர்மமானவையாகவும் இருக்கின்றன. இணை வைப்போர் பெரும்பாலும் அவற்றின் மீது நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். எனவே அவற்றைத் தேவதைகள் என்றும், கடவுளர்கள் என்றும், இறைவனின் சந்ததிகள் என்றும் கருதுகிறார்கள். அவற்றிற்கு கற்பனைச் சிலைகள் செய்து காணிக்கைகள் செலுத்தி நைவேத்தியங்களும் செய் கின்றனர். ஆகையால் ஏக தெய்வக் கொள்கையை இரண்டா வது வகை இணைவைப்புத் தேவதைகளிலிருந்து தூய்மை யாக்க ஓர் உறுதியான கொள்கை விளக்கப்பட்டுள்ளது.*

எவற்றை தேவதைகள் என்றும், கடவுள்கள் என்றும் கடவுளின் சந்ததிகள் என்றும் கூறுகிறார்களோ அவற்றை ஒளியால் படைக்கப்பட்ட, மறைவான உயிரினங்கள் - உண்மையில் இறைவனின் (மலக்குகள்) வானவர்கள் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நமக்குத் தெரிவிக்கிறார்கள். இறைமையில் அவர்களுக்கு யாதொரு பங்கும் இல்லை. அவர்கள் அனைவரும் இறைவனின் கட்டளைக்கு உட்பட்டிருக்கிறார்கள். இறைவனின் கட்டளைகளை இம்மியளவும் பிசகாமல் நிறைவேற்றுகிறார்கள். அக்கட்டளைகளை அவர்கள் மீறவே முடியாது. இறைவன் அவர்கள் மூலமாகத் தான் ஆட்சியை நடத்துகிறான். அவர்கள் மிகச்சரியாக அவன் கட்டளைகளை நிறைவேற்றுகிறார்கள். அவர்கள் சுயாதிகாரத்தைக் கொண்டு எதையும் செய்ய முடியாது. அவர்கள் இறைவனின் திருமுன் ஏதேனும் யோசனை சமர்ப்பிக்கவும் சக்தியற்றவர்கள். இறைவனுக்கு முன் யாருக்காகவும் பரிந்துரை செய்யவும் அவர்களால் முடியாது. அவர்களை வணங்குவதோ, அவர்களிடம் உதவி கோருவதோ மனிதனுக்கு இழிவாகும்.

ஏனெனில் தொடக்க நாளில் அல்லாஹ் வானவர்களை, ஆதம் (அலை) அவர்களுக்கு (ஸுஜூது) வணக்கம் புரியுமாறு செய்தான். வானவர்களைக் காட்டிலும் ஆதம் (அலை) அவர்களுக்கு அதிக ஞானத்தை அளித்தான். அவர்களை விடுத்து இம்மாநிலத்தில் ஆதம் (அலை) அவர்களுக்கு தன் (Vicegerency) பிரதிநிதித்துவத்தை அளித்தான். (அல்குர்ஆன் 2:34, 7:11)) எந்த மனிதன் வானவர்களால் வணங்கப்பட்டானோ அவன், தலைகீழ்ப்பாடமாக அவ்வானவர்களுக்கே வணக்கம் செலுத்துவதைக் காட்டிலும், அவர்களிடம் இரந்து கேட்பதைக் காட்டிலும் பெரிய இழிவு என்ன இருக்கப் போகிறது!

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஒரு புறம் நம்மை வானவர்களை வழிபடுவதிலிருந்தும், அவர்களை இறைமையில் இணையானவர்களாய் ஆக்குவதிலிருந்தும் தடுத்து விட்டார்கள். மறுபுறம், வானவர்கள், இறைவனின் உயர்ந்த படைப்புகள், பாவங்களிலிருந்தும் தூய்மையானவர்கள் என்றும்,

அவர்கள் இறைக் கட்டளைகளை மீறவே முடியாத இயல்பு கொண்டவர்கள்; அவர்கள் எப்போதும் இறைவனுக்குத் தொண்டு செய்வதிலும் ஈடுபட்டிருப்பவர்கள்; அவர்களுள் ஓர் உயர்ந்த, தேர்ந்தெடுக்கப்பட்ட வானவர் மூலமாகத்தான் அல்லாஹ், தன் தூதர்களுக்கு வஹீ (செய்தி) அனுப்புகிறான்; அவர் பெயர் ஜிப்ரீல் என்றும் தெரிவித்திருக்கிறார். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் மூலமாகத் தான் குர்ஆனின் வசனங்கள் இறங்கின.

உங்களை எப்போதும் தொடர்ந்து வரும் வானவர்களும் இதே வானவர்களுள்தான் இருக்கிறார்கள். அவர்கள் உங்களுடைய ஒவ்வொரு நல்ல கெட்ட நடவடிக்கையையும், ஒவ்வொரு வேளையிலும் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய ஒவ்வொரு நல்ல, கெட்ட பேச்சையும் எல்லா நேரங்களிலும் கேட்டுக் கொண்டும், குறிப்பு எடுத்துக் கொண்டும் இருக்கிறார்கள். அவர்களிடம் உங்கள் ஒவ்வொருவருடைய வாழ்க்கைக் குறிப்பும் பாதுகாப்பாக இருக்கிறது. இறந்தபின் நீங்கள் இறைவன் முன் வரும்போது அவர்கள் உங்கள் செயல் பட்டியலைச் சமர்ப்பிப்பார்கள். வாழ்வு முழுவதிலும் நீங்கள் செய்த வெளிப்படையான, ரகசியமான புண்ணியங்களும், பாவங்களும் எல்லாம் அதில் இருப்பதைக் காண்பீர்கள்.

வானவர்களைப் பற்றிய முழு உண்மைகளும் நமக்குத் தெரிவிக்கப்படவில்லை. அவர்களின் பண்புகள் மட்டுமே அறிவிக்கப்பட்டுள்ளன. அவர்கள் இருப்பதை உறுதியாக நம்பவேண்டும் என்றும் ஆணையிடப்பட்டுள்ளோம். அவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருக்கிறார்கள், எப்படிப் பட்டவர்களாயில்லை என்பதைத் தெரிந்து கொள்வதற்கு நம்மிடம் வழிவகை ஒன்றும் இல்லை. ஆகையால் நம்முடைய அறிவைக் கொண்டு அவர்கள் தொடர்பாக எதையும் கற்பனை செய்து கொள்வது அறிவீனமாகும். அவர்கள் இருப்பதை மறுப்பதும் இறை நிராகரிப்பு (குஃப்ரு) ஆகும். ஏனெனில் அவர்களை நிராகரிப்பதற்கான ஆதாரங்கள் எவரிடமும் இல்லை; தவிர அவ்வாறு நிராகரிப்பதற்குப் பொருள்

ரசூலுல்லாஹ்ி (ஸல்) அவர்களைப் பொய்யர் என்று தீர்மானிப்பதாகும். இறைவனின் உண்மைத்தூதர் நமக்கு வானவர்களைப் பற்றி அறிவித்திருக்கிறார்கள் என்பதா லேயே அவர்கள் உண்டு என நாம் நம்புகின்றோம்.

**இறைவேதங்களின் மீது நம்பிக்கை**

மூன்றாவதாக, இறைவன் தன் தூதர்களுக்கு வழங்கிய வேதங்களை நம்ப வேண்டும் என்று முஹம்மத் (ஸல்) அவர்கள் மூலம் நாம் போதனை பெற்றுள்ளோம். அல்லாஹ் எவ்வாறு முஹம்மத் (ஸல் ) அவர்களுக்கு குர்ஆனை அருளியிருக்கிறானோ அவ்வாறே அவர்களுக்கு முந்திய தூதர்களுக்கும் இறைவன் தன் வேதங்களை அருளியிருந்தான்.

அவற்றுள் சில வேதங்களின் பெயர்கள் நமக்கு அறிவிக்கப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக இப்றாஹீம் (அலை) அவர் களுக்கு ஸுஹுஃபே இப்றாஹீம் இறக்கப்பட்டது. மூஸா (அலை) அவர்களுக்கு தவ்ராத் வேதம் இறக்கப்பட்டது. தாவூத் (அலை) அவர்களுக்கு ஜபூர் வேதம் அளிக்கப்பட்டது. ஈஸா (அலை) அவர்களுக்கு இன்ஜீல் வேதம் அருளப் பட்டது. அவை தவிர வேறு தூதர்களுக்கு வழங்கப்பட்ட வேதங்களின் பெயர்கள் நமக்கு அறிவிக்கப்படவில்லை.

இதனால் நாம், வேறு மத வேதங்கள் தொடர்பாக அவை இறைவனிடமிருந்து வந்தவை என்றோ வராதவை என்றோ தீர்க்கமாகக் கூறமுடியாது. எந்த வேதங்கள் இறைவனிட மிருந்து வழங்கப்பட்டதோ அவை அனைத்தும் மெய்யா னவை என்று நாம் நிச்சயமாக நம்பிக்கை (ஈமான்) கொள்கிறோம்.

எந்த வேதங்களின் பெயர்கள் நமக்குத் தெரிவிக்கப் பட்டுள்ளனவோ அவற்றுள் ஸுஹுஃபே இப்றாஹீம் இப்போது உலகில் இல்லை. எஞ்சிய தவ்ராத், ஜபூர், இன்ஜீல் ஆகியவை யூதர்களிடமும், கிறிஸ்தவர்களிடமும் இருக் கின்றன. ஆனால் அந்த வேதங்கள் அனைத்திலும் மக்கள் இறைவனின் வாக்கை மாற்றி விட்டார்கள். தாங்களாக அநேக

விஷயங்களை அவற்றில் சேர்த்தும் விட்டார்கள் என்று குர்ஆனில் நமக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.*

கிறிஸ்தவர்களும், யூதர்களும் மூல நூல்கள் தங்களிடம் இல்லை என்றும், அவற்றின் மொழிபெயர்ப்புகளே எஞ்சியிருக்கின்றன என்றும் அவற்றில் நூற்றாண்டுக்கணக்காக மாறுதல்கள் செய்யப்பட்டுவருகின்றன என்றும் அவர்களாகவே ஒப்புக்கொள்கிறார்கள். மேலும் அந்த நூல்களைப் படித்தால் அவற்றில் உள்ள பல விஷயங்கள் மூலம் 'இவை இறைவனிடமிருந்து வந்தவையல்ல' என்பது தெளிவாகத் தெரியவருகிறது. ஆகையால் இப்போதுள்ள நூல்கள் இறைவனின் மிகச் சரியான வேதங்கள் இல்லை. அவற்றில் இறைவனின் வாக்கும், மனிதனின் வாக்கும் இரண்டறக் கலந்துவிட்டிருக்கின்றன. இறைவனின் வாக்கு எது, மனிதனின் வாக்கு எது என்று இப்போது கண்டுபிடிப்பதற்கு வழிவகை எதுவுமில்லை.

குர்ஆனுக்கு முன்பும் உலகில் உள்ள ஒவ்வொரு சமூகத்திற்கும் இறைவன் தன் தூதர்கள் மூலம் தன் கட்டளைகளை அனுப்பியிருந்தான். அவை அனைத்தும் குர்ஆன் எவனிடமிருந்து வந்ததோ அதே ஏக இறைவனின் கட்டளைகளே. இந்தப் பொருளில்தான் இன்றும் முந்தைய வேதங்களை நாம் நம்பவேண்டும் என்று நமக்கு ஆணையிடப்பட்டுள்ளது. குர்ஆன் ஒரு புதிய அறிமுகமில்லாத வேதமல்ல. அது, எதை முந்திய கால மக்கள் பெற்று இழந்து விட்டார்களோ, அல்லது

---

* பைபிள் பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து புத்தகங்களையும் புதிய ஏற்பாட்டின் நான்கு நற்செய்திகளையும் மேற்போக்காகப் படித்தாலே அவை மனிதர்களால் உருவாக்கப்பட்டவை என்பது விளங்கும். இவற்றில் தாவூது (அலை) (டேவிட்) அவர்களின் பிரார்த்தனைக் கீதங்களிலிருந்தும் ஏசுவின் நற்செய்திகளிலிருந்தும் சில அசலான பகுதிகளும் எடுத்து புகுத்தப்பட்டிருக்கின்றன. பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து புத்தகங்களிலும் அசல் தெளராத் காணப்படவில்லை. ஆனால் அந்த தெளராத்தின் பாகங்கள், மனிதர்களால் எழுதப்பட்ட மற்ற விரிவுரைகளினிடையே கலந்து வருகின்றன. இந்தப் போலியில் இறைவனின்அசல் வழிகாட்டுதல் புதையுண்டுவிட்டது. அதைப் போலவே ஏசுவின் நான்கு நற்செய்திகளும் ஈஸா நபி (அலை) அவர்கள் கொண்டுவந்தபடியே அசல்

மாற்றி விட்டார்களோ, அல்லது மனித வாக்குகளோடு இரண்டறக் கலந்து விட்டார்களோ அதே அறிவுரைகளை மீண்டும் உயிர்ப்பிப்பதற்காக அனுப்பப்பட்டுள்ள வேதமே ஆகும்.

புனித குர்ஆன், இறைவனின் நூல்கள் அனைத்திலும் இறுதி வேதமாகும். இதற்கும், முந்திய வேதங்களுக்கும் பல வகைகளில் வேறுபாடும் இருக்கிறது.

1. முன்னர் வழங்கப்பட்ட வேதங்களுள் பெரும்பாலான வற்றின் மூலப்பிரதிகள் உலகிலிருந்து மறைந்துவிட்டன. அவற்றின் மொழிபெயர்ப்புகள் மட்டுமே எஞ்சியுள்ளன. ஆனால் குர்ஆன் எந்தச் சொற்களில் இறங்கியிருக்கிறதோ முற்றிலும் சரியாக அதே சொற்களில் இன்றும் இருக் கிறது. அதன் ஒரு எழுத்திலும், ஒரு புள்ளியிலும் மாறுதல் ஏற்படவில்லை.

2. முந்திய வேதங்களில் மக்கள் இறைவனின் வாக்கோடு தங்கள் வாக்கையும் கலந்துள்ளார்கள். ஒரே நூலில் இறை வனின் வாக்கும் இருக்கிறது. சமுதாயச் சரித்திரமும் இருக்கிறது. பெரியவர்களின் வரலாறும் இருக்கிறது. விளக்க உரையும் (தஃப்ஸீர்) இருக்கிறது. அன்றைய மார்க்க நிபுணர்களின் சட்டக் குறிப்புகளும் இருக்கின்றன. இவை யாவும் இறைவனின் வாக்கைப் பிரித்தறிய முடி யாதவாறு கலந்துள்ளன. ஆனால் குர்ஆனில் இறைவனின் அசலான வாக்கு அப்படியே நமக்குக் கிடைக்கிறது. அதில்

---

நற்செய்திகளாகவும் இல்லை. அவை உண்மையில் நான்கு வெவ்வேறு மனிதர்களால் தங்களுக்குத் தெரிந்த அடிப்படையில் தொகுக்கப்பட்ட வாழ்க்கைக் குறிப்புகளே ஆகும். அசல் நற்செய்தி சில பகுதிகளும் அவற்றோடு கலந்துள்ளன. ஆனால் பதர் எது, தானியம் எது என்று பிரிக்கமுடியாத வண்ணம் இறைவன் அருளியதும் மனிதன் எழுதியதும்-அசலும் கட்டுக்கதையும் இரண்டறக் கலந்து விட்டிருக் கின்றன. உண்மை என்னவெனில், இறைவனுடைய போதனை அவன் போதித்தவாறு காப்பாற்றப்பட்ட நிலையில் யூதர்களிடமோ கிறிஸ்தவர் களிடமோ இல்லை. மாறாக, திருக்குர்ஆனோ இறைவன் போதித்தவாறு முழுமையாகக் காப்பாற்றப்பட்டிருக்கிறது. அதில் ஒரு சிறு புள்ளி கூட மாற்றப்படவுமில்லை. கைவிடப்படவுமில்லை - **கு.அ.**

வேறு எவருடைய வாக்கும் ஒரு சிறிதும் சேர்க்கப் படவில்லை. விளக்கவுரை (தஃப்ஸீர்), ஹதீஸ், மார்க்கச் சட்டங்கள் (ஃபிக்ஹு), வாழ்க்கை, நபித் தோழர்களின் (சஹாபாக்களின்) வரலாறு, இஸ்லாமியச் சரித்திரம் ஆகியவை பற்றி முஸ்லிம்கள் எழுதியவை யாவும் தனித்தனி நூல்களாய் உள்ளன. குர்ஆனில் பிறருடைய ஒரு சொல்லும் சேர்க்கப்படவில்லை.

3. உலகில் பல்வேறு சமுதாயங்களிடம் உள்ள வேதங்களுள் எதனையும் அந்தந்த சமுதாயத்தில் தோன்றிய இறைத் தூதருடையதுதான் என்று நிரூபிக்க உண்மையான சரித்திர ஆதாரங்கள் கிடையாது; இன்னும் சில வேதங்களை நோக்கினால், அவை எந்தக் காலத்து இறைத்தூதருக்கு அருளப்பட்டவை என்று அறியமுடிவதில்லை. குர்ஆனைப் பொறுத்தவரையில், அது முஹம்மத்(ஸல்) அவர்களுக்கே அருளப்பட்டது என்பதை எவரும் மறுக் கவோ ஐயம் கொள்ளவோ இயலாது. அந்த அளவுக்கு உறுதியான, ஏற்றுக்கொள்ளத்தக்க சரித்திரச் சான்றுகள் பலவும், விளக்கமாகவே கிடைத்திருக்கின்றன. ஆகவே, குர்ஆனின் வசனங்களும், ஆணைகளும் எப்பொழுது, எங்கே அருளப்பட்டன என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

4. முந்திய வேதங்கள் எந்த மொழிகளில் இறங்கினவோ அம்மொழிகள் நெடுங்காலமாக வழக்கொழிந்து போய் விட்டன. இப்போது உலகில் எங்குமே அம்மொழிகள் பேசுவோர் எஞ்சியிருக்கவில்லை. அம்மொழிகளைப் புரிந்து கொள்வோரும் மிகக் குறைவாகவே காணப்படு கிறார்கள். அவ்வேதங்கள் மூலத்தின்படி சரியான நிலை யில் இருந்தாலும் அவற்றின் ஆணைகளைப் புரிந்து கொள்வதோ, அவற்றைப் பின்பற்றுவதோ சாத்திய மில்லை. ஆனால் குர்ஆன் எந்த மொழியில் இருக்கிறதோ அது உயிரோடிருக்கும் மொழியாகும். உலகில் கோடிக் கணக்கான மக்கள் இன்றும் இம்மொழியில் பேசுகிறார் கள். இதை அறிந்தும் புரிந்தும் கொள்கிறார்கள். இம்

மொழியின் அறிவுரை உலகில் எல்லா இடத்திலும் நடை பெற்று வருகிறது. ஒவ்வொருவரும் அதைக் கற்றுக்கொள் ளலாம்; எவருக்குக் கற்றுக்கொள்ளமுடியவில்லையோ அவருக்கு ஒவ்வோர் இடத்திலும் குர்ஆனின் பொருளை விளக்கும் தகுதி படைத்தோர் கிடைக்கக்கூடும்.

5. உலகின் பல்வேறு சமூகத்தாரிடம் எத்தனை மத நூல்கள் இருக்கின்றனவோ அவை ஒவ்வொன்றிலும் ஒரு குறிப் பிட்ட சமூகத்திற்கான அறிவுரைகளே அடங்கியிருக் கின்றன. ஒவ்வொரு நூலிலும், காணப்படும் கட்டளை கள் ஒரு குறிப்பிட்ட கால நிலைக்கும் தேவைகளுக்கும் ஏற்பட்டவை. இப்போது அவற்றிற்கு தேவையும் இல்லை. அவற்றைப் பின்பற்றவும் இயலாது. இதனால் அவ்வேத நூல்கள் குறிப்பிட்ட தனித் தனி சமூகங்களுக்காக ஏற்பட்டவை என்பதும், அவற்றில் எந்த ஒரு நூலும் உலகனைத்திற்கும் பொதுவாக அருளப்பட்டதல்ல என்பதும் தானாகவே வெளிப்படுகிறது. மேலும் எச்சமூ கங்களுக்காக அந்நூல்கள் வந்தனவோ அவையும் நிரந்தர மாக இறுதிக்காலம் வரைக்கும் வரவில்லை. மாறாக, இவை ஒரு குறிப்பிட்ட காலத்திற்காக மட்டும் வந்தவை. இனி குர்ஆனைப் பாருங்கள்! இவ்வேதத்தில் பொதுவாக ஒவ்வோரிடத்திலும் மனிதனை விளித்தே அறிவுரை வழங்கப்பட்டிருக்கிறது. அதனுடைய ஒவ்வொரு வாக்கி யத்திலிருந்தும் அது ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்காக வழங்கப்பட்டது எனும் ஐயம் எழவே எழாது. தவிர இவ்வேதத்தில் உள்ள கட்டளைகள் அனைத்தையும் எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் செயல்படுத்த இயலும். இது, குர்ஆன் அகில உலகிற்காகவும், எல்லாக் காலத்திற்காகவும் ஏற்பட்டது என்பதனை நிரூபிக்கிறது.

6. முந்திய வேதங்கள் ஒவ்வொன்றும், நற்செயல், நேர்மை பற்றிய விஷயங்களை விளக்கின. ஒழுக்கம், உண்மை பற்றிய விதிகளைக் கற்பித்தன; இறைவனின் விருப்பத் திற்கு ஏற்ப வாழவேண்டிய வாழ்க்கை முறைகளை அவை தெரிவித்தன. ஒரு விஷயமும் விட்டுப்போகாமல் எல்லாச்சிறப்புகளையும் தன்னகத்தே கொண்டு எந்த ஒரு

வேத நூலும் திகழவில்லை. இந்தச் சிறப்பு குர்ஆனில் மட்டுமே காணப்படுகிறது. எத்தனை சிறப்புகள் தனித் தனியாக முந்திய வேதங்களில் காணப்பட்டனவோ அவை அனைத்தும் குர்ஆனில் ஒன்று சேர்ந்தாற்போல் அமைந்திருக்கின்றன. எந்தச் சிறப்புகள் முந்திய வேதங்களில் விடுபட்டுப் போயிருந்தனவோ அவை அனைத்தும் குர்ஆனில் நிறைந்திருக்கின்றன.

எல்லா மத நூல்களிலும் மனிதனின் தலையீடு, இடைச் செருகல் ஆகியவற்றால் உண்மைக்கு மாறான, அறிவுக் குப் புறம்பான, கொடுமையையும், நியாயமின்மையை யும் அடிப்படையாகக் கொண்ட பல விஷயங்கள் கலந்து விட்டன. இவை மனிதனின் கொள்கை, செயல் இரண் டையும் கெடுக்கக்கூடியவையாக அமைந்துள்ளன. பல நூல்களில் ஆபாசமும் ஒழுக்கக்கேடான விஷயங்களும் மலிந்து காணப்படுகின்றன. குர்ஆன் இவ்விதமான மாசு, மருவுகளின்று தூய்மையாயிருக்கிறது. இதில் அறிவுக்குப் புறம்பானதாகவோ, ஆதாரப் பூர்வமாகவும் அனுபவப் பூர்வமாகவும் தவறு என்று நிரூபிக்கத் தக்கதாகவோ எந்த ஒரு விஷயமும் இல்லை. இதன் எந்த ஆணையிலும் அநீதி இல்லை. இதில் மனிதனை வழிகேட்டில் தள்ளக் கூடிய எந்த விஷயமும் இல்லை. இதில் ஆபாசமான, ஒழுக்கக்கேடான விஷயத்தின் சுவடே கிடையாது. தொடக்கம் முதல் கடைசி வரை குர்ஆன் முழுவதிலும் உயர்ந்த நுண்ணறிவு, ஞானம், நீதி, நியாயம் பற்றிய போதனைகள், நேர்வழியைப் பற்றிய அறிவுரைகள், சிறந்த கட்டளைகள், சட்டங்கள் ஆகியவை நிறைந்து விளங்குகின்றன.

இச்சிறப்புகளின் அடிப்படையில்தான் உலக சமுதாயங் கள் அனைத்திற்கும், குர்ஆனின் மீது நம்பிக்கை (ஈமான்) கொள்ளுங்கள்; இதர வேதங்கள் அனைத்தையும் விடுத்து ஒரே வேதத்தையே பின்பற்றுங்கள்; ஏனெனில் மனிதன், இறைவனின் விருப்பத்திற்கு ஏற்ப வாழ்வதற்குத் தேவை யான அறிவுரைகள் அனைத்தும் குர்ஆனில் யாதொரு குறையுமின்றி விளக்கப்பட்டுள்ளன; இந்நூல் வந்த

பின்னர் வேறு எந்த நூலின் தேவையும் இல்லை என அறிவுறுத்தி வழிகாட்டப்பட்டிருக்கிறது.

குர்ஆனுக்கும் இதர வேதங்களுக்கும் இடையேயுள்ள வேற்றுமை என்ன என்று புரிந்துகொண்டபின் இதர வேத நூல்களின் மீது கொள்ளவேண்டிய நம்பிக்கைக்கும் குர்ஆன் மீது கொள்ளவேண்டிய நம்பிக்கைக்கும் என்ன வேறுபாடு இருக்க வேண்டும் என்பதை நீங்களே புரிந்து கொள்ளலாம். முந்திய வேதநூல்களைப் பற்றி நாம் கொள்ளவேண்டிய நம்பிக்கை, அவை அனைத்தும் இறைவனிடமிருந்து வந்தவை; உண்மையானவை; குர்ஆன் எந்த நோக்கத்தை நிறைவு செய்ய வந்திருக் கிறதோ, அதே நோக்கத்துடன் அவையும் வந்தன என்று ஒப்புக்கொள்ளும் அளவுக்குத்தான் இருக்க வேண்டும். ஆனால் குர்ஆன் மீது கொள்ளவேண்டிய நம்பிக்கை வேறு விதமானது. இது இறைவனின் தூய்மையான வாக்காகும். முற்றிலும் மெய்யானதாகும். இதன் ஒவ்வொரு சொல் லும் பாதுகாக்கப்பட்டிருக்கிறது. இதன் ஒவ்வொரு விஷயமும் உண்மையானது. இதன் ஒவ்வொரு கட்டளை யையும் நிறைவேற்ற வேண்டியது கடமையாகும். குர்ஆனுக்குப் புறம்பான எந்த ஒரு விஷயமாயினும் நிராகரிக்கப்பட வேண்டியதாகும். இந்த அடிப்படையி லேயே நாம் குர்ஆன் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும்.

**இறைத்தூதர்கள் மீது நம்பிக்கை (ஈமான்):**

வேதங்களுக்குப்பின் இறைத்தூதர்கள் அனைவரின் மீதும் நாம் நம்பிக்கை (ஈமான்) வைக்க வேண்டும் என்றும் அறிவுறுத்தப்பட்டுள்ளோம்.

இறைத்தூதர்கள் உலகத்தில் உள்ள எல்லாச் சமுதாயத் தார்களிடமும் வந்திருந்தார்கள். எந்த அறிவுரையை வழங்க இறுதியாக முஹம்மத் (ஸல்) அவர்கள் வருகை தந்தார்களோ அதே இஸ்லாமிய அறிவுரையையே அவர்களும் வழங்கி னார்கள். இது முந்திய அத்தியாயத்தில் உங்களுக்குத் தெரிவிக் கப்பட்டுள்ளது. இந்த வகையில் இறைவனின் தூதர்கள் ஒரே

அணியைச் சேர்ந்தவர்களாயிருந்தார்கள். அவர்களுள் யாரை யாவது ஒருவரைப் பொய்யர் என்று தீர்மானித்தல், தூதர்கள் அனைவருமே பொய்யர்கள் என்று தீர்மானிப்பதற்கு ஒப் பாகும்; யாரையாவது மெய்யர் என்று ஒப்புக்கொண்டால் அவர்கள் அனைவரையும் மெய்யர் என்று ஒப்புக் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. பத்துப் பேர் ஒரே விஷயத்தைக் கூறுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்களுள் ஒருவரை நீங்கள் மெய்யானவர் என்று ஏற்றுக்கொண்டால், எஞ்சிய ஒன்பது பேரையும் மெய்யானவர்கள் என்று நீங்கள் ஏற்றுக் கொண்டவர்களாகி விடுகிறீர்கள். ஒரே ஒருவரை நீங்கள் பொய்யர் என்று கூறினாலும் அவர் எதைக் கூறு கிறாரோ அந்த விஷயத்தையே பொய் என்று தீர்மானிப்பதற்கு ஒப்பாகும். இதனால் நீங்கள் பத்துப்பேரையும் பொய்யர் என்று தீர்மானித்தவராகி விடுவீர்கள். இக்காரணத்தாலேயே இஸ்லாத்தில் இறைத்தூதர்கள் அனைவர் மீதும் நம்பிக்கை (ஈமான்) கொள்ள வேண்டியது அவசியமாகிறது. எவரேனும் ஒரு தூதர் மீது ஒருவன் நம்பிக்கை கொள்ளாமல் மற்ற தூதர்கள் அனைவர் மீதும் நம்பிக்கை கொண்டாலும் அவன் நிராகரிப் பாளனாகவே கருதப்படுவான்.

உலகில் பல்வேறு சமூகங்களுக்கு அனுப்பப்பட்டிருந்த இறைத்தூதர்களின் எண்ணிக்கை ஒரு லட்சத்து இருபத்து நான்காயிரம் என்று வழிவழி வந்த செய்தி (ரிவாயத்) வாயி லாகத் தெரிகிறது. உலகம் தோன்றிய காலத்தையும், அதில் எத்தனை சமுதாயங்கள் வாழ்ந்து போயிருக்கின்றன என்பதை யும் நினைத்துப்பார்த்தால், இறைத்தூதர்களின் இந்த எண் ணிக்கை அப்படி ஒன்றும் அதிகமில்லை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இந்த ஒன்றேகால் இலட்சம் இறைத்தூதர் களில் எவருடைய பெயர்கள் குர்ஆனில் நமக்கு அறிவிக்கப் பட்டுள்ளனவோ அவர்கள் மீது எவ்வித ஐயமுமின்றித் திட்ட வட்டமாக நம்பிக்கை (ஈமான்) கொள்ளவேண்டியது அவசிய மாகும். மற்ற அனைவரும் இறைவனால் அடியார்களுக்கு அறவுரை செய்வதற்கென்று அனுப்பப்பட்ட உண்மையான வர்கள் எனும் கொள்கையைப் பேணவேண்டும் என்று நாம் போதனை செய்யப்பட்டுள்ளோம். இந்தியா, சீனா, பாரசீகம்,

எகிப்து, ஆஃப்ரிக்கா, ஐரோப்பா என உலகின் பல்வேறு நாடு களில் எத்தனை தூதர்கள் தோன்றியிருப்பார்களோ அவர்கள் மீதெல்லாம் நாம் நம்பிக்கை (ஈமான்) கொள்கிறோம். ஆனால் எவராவது ஒரு குறிப்பிட்ட மனிதர் தூதராயிருந்தார் என்றோ, இல்லை என்றோ கூற முடியாது. ஏனெனில் அவர் கள் பற்றி நமக்கு ஒன்றும் திட்டவட்டமாக அறிவிக்கப்பட வில்லை. பல்வேறு மதங்களைப் பின்பற்றுவோர், எவரைத் தங்கள் வழிகாட்டிகள் என்று நம்புகிறார்களோ அவர்களுக்கு எதிராக ஏதேனும் கூறுவது கூடாததாகும். உண்மையில் அவர்கள் இறைத்தூதர்களாயிருந்திருப்பது சாத்தியமே.

மூஸா (அலை), ஈஸா (அலை) ஆகியவர்களைப் பின்பற்று வோர் தங்கள் மதங்களை எவ்வாறு கெடுத்தார்களோ - அவ் வாறு தமது வழிகாட்டியின் அறிவுரைகளை இவர்களும் கெடுத்திருக்கலாம். ஆகையால் நாம் ஏதேனும் கருத்துத் தெரி வித்தால் அவர்களுடைய மதம் தொடர்பாகவோ, சடங்குகள் தொடர்பாகவோ மட்டும் தெரிவிப்போம். ஆனால் அவர்களு டைய மத வழிகாட்டிகள் தொடர்பாக மௌனமாக இருப் போம். ஏனெனில் அறியாமல்கூட நம்மால் எந்த இறைத்தூ தரின் மேன்மைக்கும் பெருமைக்கும் பங்கம் ஏற்பட்டு விடக் கூடாது.

முந்திய இறைத்தூதர்களும் முஹம்மத் (ஸல்) அவர்களைப் போலவே உண்மையானவர்களாயிருந்தார்கள். இறைவனால் அனுப்பப் பட்டவர்களாயிருந்தார்கள். இஸ்லாத்தின்படி நேர்வழி காட்டக் கூடியவர்களாயிருந்தார்கள். அவர்கள் அனைவர் மீதும் ஈமான் கொள்ள வேண்டும் என்று நமக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. இந்த வகையில் இறைத் தூதர்களுள் யாதொரு வேற்றுமையும் இல்லை. ஆனால் எல்லா வகையிலும் அவர்கள் சரிசமமாயிருந்தபோதிலும் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் இதரதூதர்களுக்கும் மூன்று விஷயங்களில் வேறுபாடும் இருக்கிறது.

முதலாவது முந்திய இறைத்தூதர்கள், குறிப்பிட்ட சமூகங் களில் குறிப்பிட்ட காலங்களுக்காக வந்திருந்தார்கள்.

முஹம்மத் (ஸல்) அவர்களோ உலகம் முழுமைக்காகவும் எல்லாக் காலத்திற்காகவும் இறைத்தூதராக அனுப்பப்பட்டு இருக்கிறார்கள்.* இதை நாம் முந்திய அத்தியாயத்தில் விளக்கமாகத் தெரிவித்துள்ளோம்.

இரண்டாவதாக முந்திய இறைத்தூதர்களின் அறிவுரைகள் உலகிலிருந்து இல்லாது போய்விட்டன. ஓரளவு அவை எஞ்சியிருந்தாலும் தம்முடைய கலப்பற்ற நிலையில் பத்திர மாக இல்லை. இதைப் போலவே அத்தூதர்களுடைய வாழ்க்கை வரலாறுகளும் இன்று உலகில் எங்குமே காணக் கிடைக்கவில்லை. அவற்றின் மீது கற்பனைக் கதைகளின் திரைகள் விழுந்துவிட்டன. இதன் காரணமாக அவர்களை ஒருவர் பின்பற்ற விரும்பினாலும் பின்பற்ற முடியாது. இதற்கு நேர்மாறாக முஹம்மத் (ஸல்) அவர்களுடைய அறி வுரை, புனித வாழ்க்கை வரலாறு, வாய் வழி போதனைகள், நடைமுறைச் செயல்கள், ஒழுக்கம், பழக்கவழக்கங்கள், இயல்புகள் ஆகிய ஒவ்வொன்றும் உலகில் மிகவும் பத்திர மாக இருக்கின்றன. இதனால் உண்மையில் தூதர்கள் அனை வரிலும் முஹம்மத் (ஸல்) அவர்கள் ஒருவரே உயிர் வாழும் தூதராக இருக்கிறார். அவர்களைப் பின்பற்றுவதே சாத்திய மாகவும் இருக்கிறது.

மூன்றாவதாக, முந்திய நபிமார்கள் மூலமாக எந்த இஸ்லா மிய அறிவுரை அளிக்கப்பட்டிருந்ததோ அது முழுமையாக இல்லை. ஒவ்வொரு தூதருக்குப் பின் மற்றொரு தூதர் வந்து அதன் கட்டளைகளிலும், சட்டங்களிலும் அறிவுரை களிலும் மாறுதல்களும், கூடுதல்களும் செய்து கொண்டு இருந்தார்கள். சீர்திருத்தம், முன்னேற்றம் ஆகியன தொடர்ந்து நடந்தன. இதனால் அந்த நபிமார்களின் (இறைத்தூதர்களின்) அறிவுரைகளை அவர்களுடைய காலம் கடந்த பின்னர் அல்லாஹ் பாதுகாத்தும் வைக்க வில்லை. ஏனெனில் ஒவ்வொரு முழுமையான அறிவுரைக்கும் பின்னர் முந்திய குறையுள்ள அறிவுரையின்

---

* மூன்றாம் அத்தியாயத்தில் இந்த விஷயம் விரிவாக விளக்கப் பட்டிருக்கிறது.

அவசியம் இருக்கவில்லை. இறுதியாக முஹம்மத் (ஸல்) அவர்கள் மூலமாக எல்லா வகையிலும் நிறைவு பெற்ற இஸ்லாமிய அறிவுரை அளிக்கப்பட்டது. அதற்குப் பின்னர் முந்திய இறைத்தூதர்கள் அனைவரின் மார்க்கச் சட்டதிட்டங் களும் (ஷரீ அத்துகளும்) தாமாகவே ரத்தாகி விட்டன. ஏனெனில், நிறைவுபெற்றதை விடுத்துக் குறையுள்ளதைப் பின்பற்றுவது அறிவுக்குப் புறம்பானதாகும். ஒருவர் முஹம்மத் (ஸல்) அவர்களைப் பின்பற்றினால் அவர், எல்லா நபிமார்களையும் பின்பற்றியது போலாகும். ஏனெனில் எல்லா நபிமார்களின் அறிவுரையிலும் என்ன சிறப்புகள் இருந்தனவோ அவை யாவும் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்களின் அறிவுரையில் அடங்கியிருக்கின்றன. ஒருவர், முஹம்மத் (ஸல்) அவர்களைப் பின்பற்றுவதை விடுத்து முந்திய நபியைப் பின்பற்றினால் அவர், அநேக நன்மைகளி லிருந்து விலகியிருந்துவிடுவார். ஏனெனில் பின்னால் வந்த நன்மைகள் முந்திய அறிவுரையில் இருக்கவில்லை.

இக்காரணங்களால் முஹம்மத் (ஸல்) அவர்களை மட்டும் பின்பற்ற வேண்டியது அகில உலக மக்களுக்கும் இன்றி யமையாததாகிவிட்டது. முஸ்லிமாயிருப்பதற்காக மனிதன் மூன்று வகைகளில் அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது ஈமான் கொள்ளவேண்டியது அவசியமாகும்.

முதலாவதாக, முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் உண்மையான தூதர் என்றும்,

இரண்டாவதாக, அவர்களுடைய அறிவுரை முற்றிலும் நிறைவு பெற்றது; அதில் குறை ஒன்றுமில்லை; எல்லாத் தவறுகளிலிருந்தும் தூய்மையாயிருக்கிறது என்றும், மூன்றா வதாக, அவர்கள் இறைவனின் இறுதித் தூதர், அவர்களுக் குப்பின் இறுதித் தீர்ப்பு நாள் (கியாமத்) வரை எந்தச் சமூகத்தி லும் வேறு தூதர் வரப்போவதில்லை என்றும் முஸ்லிமா யிருப்பதற்கு எவர் மீது நம்பிக்கை கொள்ள வேண்டியது நிபந்தனையாயிருக்குமோ அல்லது எவரை நம்பாவிட்டால் ஒருவர் நிராகரிப்பாளர் ஆகிவிடுவாரோ அத்தகைய எவரும் வரப்போவதில்லை என்றும் நம்ப வேண்டும்.

## மறுமையின் மீது நம்பிக்கை (ஈமான்) :

*இறைத்தூதர்களின் மீது நம்பிக்கை கொள்ளுதலை அடுத்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஐந்தாவதாக நம்பும்படி அறிவுறுத்தியது மறுமையாகும்.*

*மறுமை தொடர்பாக எந்த எந்த விஷயங்களின் மீது நம்பிக்கை கொள்ளவேண்டியது அவசியமோ அந்த விஷயங்கள்:*

1. *ஒருநாள் அல்லாஹ் முழு உலகையும், படைப்பினங்களையும் அழித்துவிடுவான். அந்த நாளின் பெயர் 'கியாமத்' ஆகும்.*
2. *பிறகு இறைவன் அனைவருக்கும் மறுவாழ்வு அளிப்பான். அனைவரும் அல்லாஹ்வுக்கு முன் கொண்டுவரப் படுவார்கள். அதற்கு 'ஹஷ்ர்' என்று பெயர். (அதுவே இறுதித் தீர்ப்பு நாள்)*
3. *எல்லா மக்களும், தங்கள் உலக வாழ்வில் எதை எதைச் செய்தார்களோ அவை முழுமையும் கொண்ட செயல் பட்டியல் இறைவனின் நீதிமன்றத்தில் சமர்ப்பணமாகும்.*
4. *அல்லாஹ், ஒவ்வொருவருடைய நல்ல, கெட்ட செயலையும் நிறுத்துப்பார்ப்பான். இறைவனின் துலாக் கோலில் எவருடைய நற்செயல், தீச்செயலைக் காட்டிலும் பாரமானதாயிருக்குமோ அவரை மன்னித்துவிடுவான். எவருடைய தீச்செயலின் தட்டு தாழுமோ அவருக்குத் தண்டனை அளிப்பான்.*
5. *எவர்கள் மன்னிப்பு பெறுகிறார்களோ. அவர்கள் சுவர்க்கம் புகுவார்கள். எவர்களுக்குத் தண்டனை வழங்கப்படுகிறதோ அவர்கள் நரகத்திற்குள் செல்வார்கள்.*

## மறுமைக் கொள்கையின் அவசியம்

*மறுமையைப் பற்றிய கொள்கையை முஹம்மத் (ஸல்) அவர்கள் சமர்ப்பித்ததைப் போலவே முந்திய இறைத் தூதர்கள் அனைவரும் சமர்ப்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு காலத்திலும் இதில் நம்பிக்கை கொள்ளவேண்டியது*

முஸ்லிமாயிருப்பதற்கு அவசியமான நிபந்தனையாகும். இதை நிராகரிப்பவனையும், இதில் ஐயம் கொள்பவனையும் நபிமார்கள் அனைவரும் இறை நிராகரிப்பாளன் என்று தீர்மானித்திருக்கிறார்கள். ஏனெனில் இந்தக் கொள்கை இல்லாமல் இறைவன் மீதும் அவனுடைய வேதங்கள் மீதும், அவனுடைய தூதர்கள் மீதும் நம்பிக்கை கொள்ளுதல் முற்றிலும் பொருளற்றதாகி விடும்; அதனால் மனிதனின் வாழ்க்கை முழுதும் கெட்டுப் போய்விடும்.

நீங்கள் நன்கு சிந்தித்தால் இவ்விஷயத்தை எளிதாகப் புரிந்துகொள்ளமுடியும். நீங்கள் ஏதாவது ஒரு காரியம் செய்ய அறிவுறுத்தப்படும்போது அதைச் செய்வதால் என்ன லாபம், செய்யாவிட்டால் என்ன நஷ்டம் என்றே முதலாவதாக உங்கள் மனதில் கேள்வி பிறக்கிறது. இதற்குக் காரணம் எவ்வேலையைச் செய்வதால் எவ்விதப் பலனும் இல்லையோ அவ்வேலையைச் செய்வது வீண் என்று மனித இயல்பு கருதுவதுதான். எதனால் எவ்வித ஆதாயமும் இல்லை என்று நிச்சயமாக உங்களுக்குத் தெரிகிறதோ அதைச் செய்ய ஒருக்காலும் நீங்கள் ஒப்பமாட்டீர்கள்.

இதைப்போலவே எந்தப் பொருளால் எவ்வித இழப்பும் இல்லை என்று உறுதியாகத் தெரிகிறதோ அப்பொருளைத் தவிர்க்கவும் ஒப்புக்கொள்ளமாட்டீர்கள். அதில் ஐயம் கொண்டாலும் இதே நிலைதான் ஏற்படும். எச்செயலின் பலன் ஐயத்திற்குரியதாயிருக்கிறதோ அதில் உங்கள் மனம் ஒருபோதும் ஒன்றாது. எந்த வேலையாவது நஷ்டம் விளைவிக்கும் என்ற ஐயம் இருந்தாலும் அதிலிருந்து தப்பிப்பதற்காக நீங்கள் விசேஷ முயற்சி எதுவும் எடுத்துக்கொள்ள மாட்டீர்கள்.

குழந்தைகளைப் பாருங்கள்! அவர்கள் ஏன் நெருப்புக்குள் கையை விடுகின்றனர்? நெருப்பு சுட்டுவிடும் எனும் விஷயம் அக்குழந்தைக்குத் தெரியாததால்தானே! அவர்கள் பாடம் படிக்காமல் ஏன் ஓடுகின்றனர்? கல்வியின் நன்மைகளும், முக்கியத்துவமும் குழந்தைகளின் மனதில் படியாததால் தானே! இது போன்றே எவர் மறுமையை நம்பவில்லையோ

அவர், இறைவனை நம்புவதையும் அவனுடைய விருப்பத் திற்கு ஏற்ப நடந்து கொள்வதையும் பயனற்றவை என்று தானே நினைப்பார்?

அவருக்கு இறைவனின் ஆணைகளை நிறைவேற்றுவதில் ஆதாயமோ, நிறைவேற்றாவிட்டால் இழப்போ இருப்பது தெரியாது. அவ்வாறு இருக்கும்போது அவர், இறைவன் தன் தூதர்களின் மூலமாகவும் வேதங்களின் மூலமாகவும் இட்டுள்ள கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவது எப்படிச் சாத்திய மாகும்? ஒப்புக்காக அத்தகையவர் இறைவனை நம்பினாலும் அந்த நம்பிக்கை முற்றிலும் வீணானதாகும். ஏனெனில் அவர் இறைவனின் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கவும் மாட் டார். இறைவனின் விருப்பத்திற்கு ஏற்ப வாழவும் மாட்டார்.

இந்த விவகாரம் இத்துடன் நிற்பதில்லை. நீங்கள் மேலும் நன்கு சிந்தித்தால், மறுமையை நிராகரிப்பதோ, ஏற்றுக் கொள்வதோ மனித வாழ்வில் தீர்க்கமான விளைவை உண்டாக்குகிறது என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். முன்பே நாம் விளக்கியபடி ஒருவர், ஒரு வேலையைச் செய்யலாமா; வேண்டாமா என்பதைப் பற்றிய முடிவை, அந்த வேலையால் ஆதாயம் ஏற்படுமா, இழப்பு ஏற்படுமா என்பதைப் பொறுத்தே எடுக்கிறார். அதுவே மனித இயல்பாயிருக்கிறது. இந்த உலகிலேயே கிடைக்கும் லாப, நஷ்டத்தின் மீதே அவர் குறியாயிருக்கிறார். இந்த உலகிலேயே ஏதாவது ஆதாயம் கிடைக்கும் எனும் நம்பிக்கை இல்லையானால் அவர் எத்தகைய நற்செயல் புரியவும் ஆயத்தமாக மாட்டார். இந்த உலகிலேயே ஏதாவது இழப்பு விளையக்கூடிய ஆபத்து இருந்தால் ஒழிய தீய செயலிலிருந்து விலகியிருக்க மாட்டார்.

மற்றொருவருடைய கவனமோ, மறுமையில் ஏற்படும் இறுதிப் பலன்களின் மீது இருக்கிறது. அவர் உலகில் ஏற்படும் லாப, நஷ்டங்களை வெறும் தற்காலிகப் பலன்களாகவே கருதுவார். இவ்வுலகிலே நற்செயல்களால் எவ்வளவு பெரிய ஆதாயம் கிடைப்பினும் சரி, மறுமையில் கிடைக்கப் போகும் நிலையான வெகுமதியையும் தண்டனையையும் நெஞ்சில்

இருத்தி நற்செயல்களிலேயே ஈடுபடுவார். பாவ காரியங் களிலிருந்து விலகிவிடுவார்.

இந்த இருவரிடையே எவ்வளவு பெரிய வேறுபாடு ஏற்படு கிறது என்பதைப் பாருங்கள்.! ஒருவரிடம் நற்செயல் எதுவெனில், அதனால் இவ்வுலகின் குறைந்த கால வாழ்விலேயே ஏதாவது பலன் கிடைத்துவிடவேண்டும். அதாவது பணமோ நிலமோ கைக்கு வந்துவிடவேண்டும்; ஏதாவது உத்தியோகமோ, நற்பெயரோ, புகழோ கிடைத்துவிடவேண்டும்; நாலு பேர் பாராட்ட வேண்டும்; இன்பமோ மகிழ்ச்சியோ அடைந்துவிடவேண்டும்; ஆசைகள் நிறைவேறிவிட வேண்டும்; உள்ளம் களிப்படைந்திட வேண்டும். அவருக்குப் பாவச் செயல் எதுவெனில், இவ்வுலக வாழ்விலேயே அதனால் தீய விளைவு உண்டாக வேண்டும்; அல்லது உண்டாகும் எனும் அச்சம் இருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக உயிர், உடைமையில் நஷ்டம், வேதனை அல்லது துன்பம் ஏற்படவேண்டும்.

இதற்கு நேர்மாறாக இறைவன் எதனை விரும்புகின்றானோ அதுவே நற்செயலாகவும் எதனை வெறுக்கின்றானோ அது தீயசெயலாகவும் மற்றொருவர் கருதுவார். நற்செயல் உலகில் ஒருவருக்கு எந்தவித ஆதாயத்தையும் தராவிட்டாலும்-மாறாக இழப்பையே விளைவித்தாலும் அவர் அதை நற்செயல் என்றே கருதுவார். இறுதியில் இறைவன் தமக்கு நிரந்தரமான பலனை அருளுவான் எனும் உறுதியுடன் இருப்பார். தீயசெயலால் இங்கு எந்தவித இழப்பும் ஏற்படவில்லையாயினும்-ஏற்படும் எனும் அச்சம் இல்லையாயினும்- மாறாக ஆதாயமே காணப்பட்டாலும் அவர் அதைப் பாவச் செயல் என்றே கருதுவார். தான் இந்த உலகின் அற்ப வாழ்வில் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொண்டாலும், சிலநாள் இன்பம் துய்த்தாலும் இறுதியில் இறைவனின் வேதனையிலிருந்து தப்பிக்க முடியாது என்றே அவர் உறுதியாகக் கருதுவார்.

இந்த இருவிதக் கருத்துகளின் விளைவாக மனிதன் இரு வேறு வழிமுறைகளைப் பின்பற்றுகிறான். எவருக்கு மறுமையில்

நம்பிக்கை இல்லையோ அவர் இஸ்லாமிய வழியில் ஓர் அடியும் எடுத்து வைப்பது முற்றிலும் இயலாததாகும். இறைவழியில் ஏழைகளுக்கு ஜகாத் கொடுங்கள் என்று இஸ்லாம் கூறுகிறது. அவர், 'ஜகாத் கொடுப்பதால் என் செல்வம் கரைந்துவிடும். என் பணத்திற்கு வட்டி வாங்கு வேன். வட்டி மூலம் பெற்ற சாதகமான தீர்ப்பைக் கொண்டு ஏழைகள் வீட்டின் அற்பப் பொருளையும் ஏலத்தில் எடுத்துக் கொள்வேன்!' என்று கூறுவார்.

உண்மை பேசுவதால் எவ்வளவு இழப்பு ஏற்பட்ட போதிலும் சரி, பொய் கூறுவதால் எவ்வளவு ஆதாயம் கிடைத்த போதிலும் சரி, எப்போதும் உண்மையே பேசுங்கள், பொய் பேசாதீர்கள் என்று இஸ்லாம் அறிவுறுத்துகிறது. அவரோ, 'எனக்குக் கொஞ்சமும் லாபமே இல்லாத- நஷ்டத்தையே கொடுக்கும் இத்தகைய மெய்யைக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? கெட்ட பெயர் ஏற்படுத்தும் எனும் அச்சமே இல்லாத -லாபமே தரும் பொய்யை நான் ஏன் விட்டு விடவேண்டும்?' என்று அவர் மறுமொழி அளிப்பார்.

அவர் ஒரு சந்தடியில்லாத வழியில் நடக்கிறார். விலை உயர்ந்த பொருள் ஒன்று கிடப்பது அவருக்குத் தெரிகிறது. 'இது உன்னுடைய பொருளில்லை; இதை ஒருபோதும் எடுக்காதே' என்று இஸ்லாம் கூறுகிறது. அவரோ, 'இலவசமாக வரும் பொருளை ஏன் விட்டுவிட வேண்டும்? இவ்விடத்தில் பார்த்ததைக் காவலரிடம் கூறுபவனோ, நீதி மன்றத்தில் சாட்சி சொல்பவனோ எவனுமில்லை. மக்களிடையே என் பெயரைக் கெடுப்பவனும் இல்லை. அப்படி இருக்கும்போது நான் ஏன் இப்பொருளால் லாபம் அடையக் கூடாது!' என்று எண்ணுவார்.

அவரிடம் ஒருவர் ரகசியமாக ஒரு பொருளை ஒப்படைத்து இறந்து விடுகிறார்; ஒப்படைத்த பொருளில் நம்பிக்கை மோசடி செய்யாதே என்று இஸ்லாம் உரைக்கிறது; அப்பொருளை ஒப்படைத்தவரின் மனைவி மக்களிடம் சேர்த்துவிடு என்றும் அறிவுறுத்துகிறது. அவரோ, 'ஏன் கொடுக்க வேண்டும்? இறந்தவரின் சொத்து என்னிடம்

இருப்பதற்கு யாதொரு சாட்சியும் இல்லை; அவருடைய மனைவி மக்களுக்கு இச்செய்தியே தெரியாது; சுலபமாக நான் இதை எனதாக்க முடியும். ஏதாவது வழக்கு அல்லது கெட்ட பெயர் ஏற்படும் எனும் அச்சமும் இல்லை. அப்படி இருக்கும்போது ஏன் இதை எனதாக்கிக் கொள்ளக் கூடாது?' என்று அவர் கருதுவார்.

ஆகவே வாழ்க்கைப் பாதையின் ஒவ்வோர் அடியிலும் இஸ்லாம் அவரை ஒரு வழியில் நடக்கும்படி போதனை செய்யும். அவரோ அதற்கு எதிராக வேறு வழியைப் பின் பற்றுவார். இஸ்லாத்தில் ஒவ்வொரு செயலின் விலை மதிப்பும் மறுமையில் கிடைக்கப்போகும் நிரந்தரமான பலன்களைப் பொறுத்திருக்கிறது. ஆனால் அவரோ ஒவ்வொரு விவகாரத்திலும்- சிலநாள் இருக்கக்கூடிய இவ்வுலக வாழ்வில் கிடைக்கப்போகும் பலன்களின் மீதே குறியாயிருப்பார். ஆகையால் மறுமையில் நம்பிக்கை கொள்ளாதவரை, மனிதன் ஏன் முஸ்லிமாயிருக்க முடியாது என்பதை நீங்களே உணர்ந்து கொள்ளலாம். முஸ்லிம் ஆவதோ பெரிய விஷயம். உண்மை என்னவெனில் மறுமையை நிராகரித்தல், மனிதனை மனிதத் தன்மையிலிருந்தே வீழ்த்தி அவனை மிருகத்திலும் கேடுகெட்டவனாக்கிவிடுகிறது.

## மறுமை பற்றி அறிவார்ந்த சான்றுகள்

மறுமைக் கொள்கையின் அவசியமும், அதனால் ஏற்படும் நற்பலனும் இப்போது உங்களுக்குத் தெரிந்து விட்டது. இனி நாம் சுருக்கமாக முஹம்மத் (ஸல்) அவர்கள் மறுமைக் கொள்கை பற்றி விளக்கியுள்ளவற்றைப் பார்ப்போம். அறிவுபூர்வமாகவும் அதுவே சரியானது.

மறுமை நாளின் மீது நாம் கொள்ளும் நம்பிக்கை, முஹம்மத் (ஸல்) அவர்கள் மீது நாம் கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையின் அடிப்படையில் அமைந்தது. அது வெறும் அறிவின் அடிப்படையில் அமைந்ததல்ல. ஆயினும், நாம், நம் அறிவைக் கொண்டு சிந்திப்பினும் இந்நம்பிக்கை சரியானதென்றே தெரியவருகிறது. மேலும் மறுமை பற்றிய பிற

கருத்துரைகளைவிட அண்ணல் முஹம்மத் (ஸல்) அவர்கள் போதித்த கருத்துரைகள், அறிவுக்கொத்தவையாகவும், புரிந்து கொள்ளக் கூடியவையாகவும் இருக்கின்றன.

மறுமை தொடர்பாக உலகில் மூன்று விதக் கொள்கைகள் இருக்கின்றன. மனிதன் மாண்டபின் அழிந்துபோகிறான். அதற்குப் பின் மறுவாழ்வு இல்லை என்று ஒரு கூட்டத்தினர் கூறுகின்றனர். மறுமை வாழ்வு உண்டெடன நம்பும் கொள்கை உண்மையற்றது என்றும், சாத்தியமற்றது என்றும் இக்கூட்டத் தினர் வாதாடுகிறார்கள். இது நாத்திகரின் கருத்தாகும். இத்தகைய வாதங்களெல்லாம் அறிவியலுக்கு எதிரானது (Unscientific) ஆகும். ஆயினும் அவர்கள் விஷயங்களை தாம் அறிவியல் முறையில் அணுகுகிறவர்கள் என்றும் மேல் நாட்டு அறிவியல் தங்களுக்குத் துணை புரிகிறதென்றும் கூறுகிறார்கள்.

(2) இரண்டாவது கூட்டத்தினர் மனிதன், தன்னுடைய கருமங்களின் பலனை அனுபவிப்பதற்காக அடிக்கடி இந்த உலகில் பிறவி எடுக்கிறான் என்றும், அவனுடைய கருமங்கள் தீயவையாயிருப்பின் மறுபிறவியில் மிருக மாகவோ, நாயாகவோ பூனையாகவோ பிறப்பான்; மரமாக வளர்வான் அல்லது கீழ்த்தரமான மனிதனின் உருவில் வருவான் என்றும், கருமங்கள் நல்லவையாயிருப்பின் மிகவும் உயர்ந்த நிலையை அடைவான் என்றும் கூறுகின் றனர். இந்த எண்ணம் சில மதங்களிடையே காணப்படுகிறது.

(3) மூன்றாவது கூட்டத்தினர், இறுதி நாளாகிய கியாமத், இறுதித்தீர்ப்பு நாளாகிய ஹஷ்ர் (மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுதல்), இறைநீதிமன்றத்தில் நிறுத்தப்படுதல், வெகுமதி, தண்டனை ஆகியவை மீது நம்பிக்கை கொள்கின்றனர். இது நபிமார்கள் அனைவருடைய ஒருமித்த கொள்கையாகும்.

இப்போது முதல் கூட்டத்தினரின் கொள்கையைப் பற்றிச் சிந்தியுங்கள். இறந்தபின் யாரும் உயிர்பெற்று எழுந்ததை நாங்கள் கண்டதே இல்லை. எவன் மரணம் அடைகிறானோ

அவன் மண்ணோடு மண்ணாகி விடுவதைத்தான் காண்கி றோம். ஆகையால் மாண்டபின் மறுவாழ்வு கிடையாது என்று அவர்கள் கூறுகின்றனர். சிந்தியுங்கள்! இறந்தபின்னர் நீங்கள் யாரையும் உயிர்பெற்று எழுந்ததைக் காணவில்லை யானால், 'இறந்த பின்னர் என்ன ஆகும் என்று எங்களுக்குத் தெரியாது' என்று வேண்டுமானால் அதிகபட்சமாகக் கூற லாம். இதற்கும் மேலே சென்று இறந்தபின் ஒன்றும் நடப்ப தில்லை என்று வாதம் புரிவதற்கு உங்களிடம் என்ன சான்று இருக்கிறது?

வானூர்தியைப் பார்க்காத ஒருவன் 'வானூர்தி என்னவென்று எனக்குத் தெரியாது' என்று வேண்டுமானால் கூறலாம். ஆனால் 'வானூர்தி என்று ஒன்று இல்லை என்பதை நான் அறிவேன்' என்று கூறினால் அறிவாளிகள், அவனை முட்டாள் என்றுதான் கூறுவார்கள். ஏனெனில் அந்த முட்டாள் எதையும் பார்க்கவில்லையென்றால் எதுவும் இல்லை என்று பொருளாகிவிடாது. ஒரு மனிதன் என்ன, அகில உலக மக்களே எதையும் பார்க்கவில்லையென்றால் அப்படி ஒன்று இல்லை என்றும், இருக்க முடியாது என்றும் வாதிட முடியாது.

இதற்கு அடுத்தபடியாக இரண்டாவது கொள்கையை எடுத்துக் கொள்ளுங்கள். இந்தக் கொள்கையின்படி ஒருவன் இப்போது மனிதனாயிருந்தால் அவன் முந்திய பிறவியில் மிருக மாயிருந்தான். நற்கருமங்கள் செய்ததால் மனிதன் ஆகி விட் டான் என்றும், இப்போது மிருகமாக இருந்தால் முற்பிறப் பில் மனிதனாயிருந்து பாவச்செயல் புரிந்த காரணத்தால் மிருகமாகி விட்டான் என்றும், அதாவது மனிதனாகவோ, மிருகமாகவோ, மரமாகவோ இருப்பது உண்மையில் முற் பிறப்பில் செய்த வினைகளின் பலன் என்றும் பொருளாகிறது.

இப்போது கேள்வி என்னவெனில் உலகில் முதலாவது எந்தப் பொருள் இருந்தது? முதலில் மனிதன் இருந்தான் என்று கூறினால் அவன் அதற்கு முன் மிருகமாகவோ, மரமாகவோ இருந்தான் என்று ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். இல்லை என்றால் மனிதனின் உடல் அவனுக்கு எந்த நற்கரு

மங்களின் காரணமாகக் கிடைத்தது என்று கேட்கப்படும். முதலில் மிருகமாகவோ, மரமாகவோ இருந்தான் என்று கூறினால் அதற்கு முன் மனிதனாக இருந்தான் என்று ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கும். இல்லை என்றால் மரமாகவோ, மிருகமாகவோ பிறவி எடுத்ததற்கு எந்தப் பாவங்களின் தண்டனை காரணம் என்ற கேள்வி பிறக்கும். இதனால் இந்தக் கொள்கையை நம்புகிறவர்கள், படைப்பினங்களின் தொடக்கமாக எந்த இனத்தையும் தீர்மானிக்க முடியாது. ஏனெனில் இக்கொள்கையின்படி ஓர் இனத்திற்கு முன் மற்றோர் இனம் இருக்க வேண்டியது அவசியமாகிறது. அப்போதுதான் பிந்திய இனம் முந்திய இனம் செய்த பாவத்தின் விளைவு என்று தீர்மானிக்க முடியும். இந்த விஷயம் அறிவுக்குப் புறம்பானதாயிருக்கிறது.

இனி மூன்றாவது கொள்கையை எடுத்துக்கொள்ளுங்கள். இதில் எல்லாவற்றுக்கும் முதலாவதாக ஒரு நாள் கியாமத் (இறுதிநாள்) வரும். இறைவன் தன்னுடைய இந்தப் பிரபஞ்சத்தை உடைத்துத் தகர்த்துப் புதியதாக வேறு ஒரு சிறந்த - உயர்ந்த உலகை உருவாக்குவான் என்று விளக்கப்பட்டுள்ளது. இது முற்றிலும் உண்மை என்பதில் யாதொரு ஐயமும் எழ இடமில்லை. இவ்வுலகம் பற்றி எவ்வளவு சிந்திக்கிறோமோ அவ்வளவு இது நிலையானது அல்ல; எத்தனை சக்திகள் இதில் இயங்கிக் கொண்டிருக்கின்றனவோ அவை அனைத்தும் ஓர் எல்லைக்குட்பட்டவையாகும்; ஒரு நாள் இவை அழிவது திண்ணம் என்று நிரூபணமாகிறது. இதனால் விஞ்ஞானிகள் அனைவரும், ஒரு நாள் சூரியன் ஒளியிழந்து குளிர்ந்து போகும்; கோள்கள் ஒன்றோடு ஒன்று மோதும். உலகம் அழிந்துவிடும் என்பதில் ஒருமித்த கருத்து கொண்டிருக்கிறார்கள்.

இரண்டாவதாக, மனிதனுக்கு மறுவாழ்வு வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இது சாத்தியமா? சாத்தியமில்லையானால் இப்போது மனிதனுக்குக் கிடைத்துள்ள வாழ்வு எப்படிச் சாத்தியமாயிற்று? எந்த இறைவன் இந்த நிலத்தில் மனிதனைப் படைத்தானோ அவன் மறு உலகிலும் படைக்க முடியும் என்பது தெளிவாகும்.

மூன்றாவதாக, மனிதன் இத்தரைமீது வாழ்ந்தபோது எத்தனை கருமங்களைச் செய்தானோ அவை அனைத்தின் குறிப்பும் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ளது. அது மஹ்ஷர் (மறு எழுச்சி) நாளன்று சமர்ப்பிக்கப்படும் என்றும் கூறப்பட்டுள்ளது. இது குறித்த சான்று இன்று நமக்கு இவ்வுலகிலேயே கிடைத்துக் கொண்டிருக்கிறது. எந்த ஒலி, நம் வாயிலிருந்து கிளம்புகிறதோ அது காற்றில் சில அலைகளை எழுப்பிவிட்டு அழிந்துவிடுகிறது என்று முன்பு கருதப்பட்டு வந்தது. ஒவ்வோர் ஒலியும் தன்னைச் சூழ்ந்து உள்ள பொருள்களின் மீது, தன் தடம் பதித்துவிட்டுப் போகிறது; அதை மீண்டும் உண்டாக்கலாம் என்று இப்போது தெரிய வருகிறது. கிராமஃபோன் இசைத்தட்டு இவ்விதியின்படிதான் செய்யப்படுகிறது. இதனால் நமது நடவடிக்கைகள், நம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களின் மீது பதிவாகிக் கொண்டிருக்கின்றன என்பது தெளிவு. நிலைமை இவ்வாறாயின் நமது முழுச் செயற்பட்டியலும் பாதுகாக்கப்படுகிறது; அதை மீண்டும் சமர்ப்பிக்க முடியும் எனும் விஷயம் நமக்கு முற்றிலும் நிச்சயமாகத் தெரிகிறது.

நான்காவதாக, இறைவன் மஹ்ஷர் (மறு எழுச்சி) நாளில் நீதி வழங்குவான். நியாயப் பூர்வமாக நமது நல்ல - கெட்ட செயல்களுக்கு ஏற்ப வெகுமதியோ, தண்டனையோ அளிப்பான் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இது நடக்க முடியாது என்று யார் கூற முடியும்? இதில் அறிவுக்குப் புறம்பானது என்ன இருக்கிறது? என்றாவது ஒருநாள் இறைவன் நீதி வழங்கவேண்டும், நியாய பூர்வமாக சரியான தீர்ப்புகள் கிடைக்க வேண்டும் என்று நம் அறிவே விரும்புகிறது. ஒருவன் நற்செயல் புரிகிறான், உலகில் அவனுக்கு அதற்குரிய பலன் கிடைப்பதில்லை. ஒருவன் பாவச்செயல் புரிகிறான்; அவனுக்கு அதனால் தீங்கு ஒன்றும் ஏற்படுவதில்லை என்பதை நாம் காண்கிறோம். இது மட்டுமல்ல, ஒருவன் நன்மை செய்தும் துன்பமுறுவதையும், மற்றொருவன் பாவம் செய்தும் நன்கு இன்பம் துய்ப்பதையும் காண முடிகிறது. இவை போன்ற ஆயிரக்கணக்கான நிகழ்வுகளை நாம் கண்முன் பார்க்கிறோம். இத்தகைய நிகழ்வுகளைக் கண்டு

எங்காவது நல்ல மனிதனுக்கு நல்ல பலன் கிடைக்க வேண்டும் என்று நமது அறிவே வேண்டுகிறது.

இறுதியாக வருபவை சுவர்க்கமும், நரகமும் ஆகும். அவை இருப்பது அசாத்தியமானதல்ல. சூரியன், சந்திரன், செவ்வாய், பூமி ஆகியவற்றை இறைவன் படைக்க முடியும் என்றால் சுவர்க்கத்தையும், நரகத்தையும் படைக்க முடியாது என்பதற்கு என்ன காரணம் இருக்க முடியும்? இறைவன் நீதி வழங்கி மக்களுக்கு நற்கூலியோ தண்டனையோ கொடுத்த பின்னர் நற்கூலி பெறுபவர்களுக்காக இன்பமும், மகிழ்ச்சியும் தரும் கண்ணியமான இடமும், தண்டனை பெறுபவர்களுக்காக இழிவும், துன்பமும், வேதனையும் தரும் இடமும் இருக்க வேண்டியது அவசியமல்லவா?

இவ்விஷயங்களைக் குறித்து நீங்கள் நன்கு சிந்தித்தால், மனிதனின் முடிவைப் பற்றி எத்தனை கொள்கைகள் உலகில் நிலவுகின்றனவோ, அவற்றுள் மிகவும் அதிகமாக, மனத்திற்குப் பிடித்தமான கொள்கை இதுவேயாகும். இது அறிவுக்குப் புறம்பானதுமில்லை, அசாத்தியமானதுமில்லை என்பதை உங்கள் அறிவே கூறும்.

மேலும் இத்தகைய விஷயத்தை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் போன்ற உண்மை இறைத்தூதர் தெரிவித்திருக்கும்போது, இதில் முழுதும் நன்மையே இருக்கும் எனும் போது இதை நம்பவேண்டியதே அறிவுடைமையாகும். ஆதாரம் ஏதுமின்றி வீண் சந்தேகப்படுவது கூடாது.

இஸ்லாத்தின் அடிப்படை இந்த ஐந்து கொள்கைகளின் மீதுதான் அமைந்திருக்கிறது.*

---

* ஈமானின் (நம்பிக்கையின்) ஐந்து உட்பிரிவுகளை விளக்கியிருக்கிறேன். இந்தப் பிரிவுகள் திருமறையின் 2:285, 4:136 வசனங்களின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

''விதி''யும் (க்ஹதரும்) ஈமானின் ஒரு பிரிவாக ஹதீஸில் கூறப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை. அதன்படி இந்த அடிப்படைப் பிரிவுகள் ஐந்திற்குப் பதிலாக ஆறாகக் கருதப்படும். ஆனால் ஆழ்ந்து நோக்கினால்

لا إله إلا الله — **‘லா இலாஹ இல்லல்லாஹு**

محمد رسول الله — **முஹம்மதுர் ரசூலுல்லாஹி’**

لا إله إلا الله — **‘லா இலாஹ இல்லல்லாஹு’**

என்று நீங்கள் கூறும்போது பொய்க்கடவுளர் அனைவரையும் விடுத்து ஏக இறைவனான அல்லாஹ் ஒருவனுக்கே அடிமையாயிருக்க ஒப்புக் கொள்கிறீர்கள்.

محمد رسول الله — **‘முஹம்மதுர் ரசூலுல்லாஹ்’**

என்று கூறும்போது முஹம்மத் (ஸல்) அவர்கள் இறைவனின் தூதர் (ரசூல்) என்பதை உண்மை என்று ஏற்றுக்கொள்கிறீர் கள். இறைத்தூதை உண்மை என்று ஏற்றுக்கொள்வதோடு இறைவனைப் பற்றிய உண்மை, அவனுடைய பண்பு, வானவர்கள், வேதங்கள், இறைத்தூதர்கள், மறுமை ஆகி யவை குறித்து எதை, எதை எவ்வாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெரிவித்திருக்கிறாரோ அவ்வாறே அவை அனைத் தின் மீதும் நம்பிக்கை கொள்ள வேண்டியதும், அண்ணலார் இறைவணக்கத்திற்காகவும் இறைவனின் ஆணைகளை நிறைவேற்றுவதற்காகவும் எந்த வழிமுறையைக் காட்டியி ருக்கிறாரோ அதைப் பின்பற்ற வேண்டியதும் கடமை என்று ஏற்றுக் கொள்கிறீர்கள்.

---

‘க்ஹதர்’-விதியின்மீது நம்பிக்கை, அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையின் அங்கமாக இருப்பதைக் காணலாம். மேலும் இந்தக் கோட்பாடு இதே அந்தஸ்தில்தான் திருக்குர்ஆனில் விளக்கப்பட்டுள்ளது. ஆகவேதான் விதி பற்றிய கோட்பாட்டை ஏக தெய்வக் கொள்கை விளக்கவுரையில் சேர்த்துள்ளேன். முற்றிலும் இதுபோலவே சில ஹதீஸுகளில் ஜன்னத் - சுவர்க்கம், தோஸக்-நரகம், சிராத், மீஸான் ஆகியவை பற்றித் தனித்தனிக் கோட்பாடுகளாகவும், உட்பிரிவுகளாகவும் விளக்கப்பட்டுள்ளன. ஆனால் இவையாவும் மறுமை பற்றிய ஈமானின் அங்கங்களேயாகும்.

# வெற்றியின் இரகசியம்

இஸ்லாம் உயர்ந்த மனிதர்களை உருவாக்குவதற்காகவே வருகை தந்தது.

இஸ்லாமிய எழுச்சிக்கு வித்திட்ட முஹம்மத் (ஸல்) அவர்கள் அந்த உயர்ந்த மனிதருக்கான இலக்கணமாக - முழுமையான ஒரு முன் மாதிரியாகத் திகழ்ந்தார். எனவேதான் அன்று நாகரிகமற்ற அந்த அரபுகள் இஸ்லாத்தை ஏற்றவுடன் ஓர் உயர்ந்த மனிதருக்குரிய அருங்குணங்கள் அனைத்தையும் தம்முள் விரைவாக வளர்த்துக் கொண்டனர்.

இறைமறுப்பாளராய் இருந்து இறைவனுக்கு அடிபணிகின்ற முஸ்லிமாக மாறும் ஒவ்வொருவருக்குள்ளும் ஒரு புதிய மனிதர் தோன்றத் தொடங்கினார். நிலவும் சூழ்நிலைக்கு மாறுபட்ட புதியவர்களாய்த் தாம் மாறிவிட்டதை அவர்களும் உணர்ந்தார்கள்; அவர்கள் மாறிவிட்டதை அந்தச் சூழ்நிலையும் புரிந்து கொண்டது.

கொலை வெறி பிடித்தவர்கள் கூட இஸ்லாத்தைத் தழுவியதும் மனித உயிர்களின் பாதுகாவலராய் மாறினர்; கள்வர்கள் நம்பிக்கைக் குரியவர்களாய் மாறினர்; ஒழுக்கக்கேடர்கள் ஒழுக்கத்தின் உறைவிடமாய்-கற்பின் நாணத்தின் வடிவங்களாய் மாறினர்; கொள்ளைக் காரர்கள் அமைதியின்-நீதியின் போதகர்களாய் மாறினர்.

எந்தவிதச் சுயநலமுமின்றி தம் வாழ்க்கைக் குறிக்கோளை ஓங்கச் செய்வதில் ஈடுபட்டிருந்த இந்த வீரர்கள் எவ்வித கைம்மாறும் பாராமல் இஸ்லாமிய இயக்கத்தின் முழுநேர ஊழியர்களாய் விளங்கினர். தம் புனிதக் குறிக்கோளை நிலை நாட்டிட தம் சிந்தனை, உழைப்பு, செல்வம், தேவைப்பட்டால் தம் உயிர்களையும், தம் குடும்பத்தாரின் உயிர்களையும் கூட அர்ப்பணித்திடத் தயாராய் இருந்தார்கள். அவர்கள் மனித குலத்தின் நன்மைக்காகத் தன்னலத்தை உதறினார்கள். இந்தப் பணியில் அவர்கள் கண் துஞ்சாமல், பசி நோக்காமல், மெய் வருத்தம் பாராமல் தம்மையே மறந்தனர்.

இத்தகைய உயர்குணம் கொண்டவருக்கு முன்னால் இந்த உலகம் தலை தாழ்த்தாமல் எப்படி இருக்கமுடியும்? இதுவே அவர்களுடைய வெற்றியின் இரகசியம். இன்றைய முஸ்லிம்களும் இந்தப் பாதையில் சென்றால்தான் வெற்றியடைய முடியும்.

**- நயீம் சித்தீகி**